

கவிஞர்

# வாலி



# கிருஷ்ண விஜயம்

## கண்ணனே காப்பு.

அவன்
அழகிய பீதாம்பரம் –
அணிந்து வரும்
அமாவாசை;
ஆயினும்
அவனது
ஆக்கை பிலிற்றும்
ஆயிரம் அம்புலிகளின் தேசை!

கண்ணன் என்னும் –
கருப்பு வெளிச்சம்...

பட்டால்
போதும்;
கிட்டாதன கிட்டும்; கைக் –
கெட்டாதன எட்டும்!

கேளுங்கள் என் கதையை; நானொரு –
கேணித் தவளை;

நாட்டு வளப்பமும் –
பாட்டு வளப்பமும் –
நானறியப் புகட்டியது – என்
நற்றாய் அனைய...

கண்ணபிரானின் கண் என்னும் –
கருங் குவளை!

'பசுந்தமிழில் –
பாகவதம் பாடு!' எனப் –

பாடிடப்
பணித்தான்...
கண்ணபரமாத்மா;
பாடுகிறது -
சின்னஞ்சிறு ஆத்மா!
ஏடு எனது;
எழுதுகோல் எனது;
எண்ணமும் -
எழுத்தும் -
எனதல்ல; அவை -
எம்பிரான் மனது!
நாளும் - எனக்கு
நல்குவான் - அந்த
நிழல்வண்ணன் - தன்
நிழல்; அவன் -
நிழற்றும் -
நிழலில் நிற்கையில்...
கணத்துள் எனக்குள் -
கனன்றெழும் -
கணகணவென - ஒரு
கவித்துவத் தழல்!
கண்ணன் எனக்குக் -
காப்பு;
கண்ணன் -
கண்ணசை வில்லையேல் -
காணுமா பூப்பு - என்
காவியத் தோப்பு?

## கண்ணதாசனுக்கு -
## கைகூப்பு.

கண்ணதாசனே! என் -
கண்ணனைய நேசனே!
வையம் நீங்கிய -
வைகுந்த வாசனே!
பாரதிக்குப் பிறகு - வந்த
பாவலருள்..
நீதான் -
நிரம்பப் பாடியிருக்கிறாய் -
நான் தொழும் கண்ணனை; கரு-
நாவல் வண்ணனை!
'கிருஷ்ணப்ரபோ!
கிருஷ்ணப்ரபோ!'
என்று -
எஞ்ஞான்றும்...
உனது
உதடும் உள்ளமும் -
உச்சரித்ததை
உணர்ந்தவன் நான்;
உணர்ந்து -
உனைப் புணர்ந்தவன் நான்!





**"நீ பார்த்தனுக்குன்னு இல்லை, யாருக்கு வேணுமானாலும் சாரதியா இரு... முதல்ல தேர் ஓட்டறதுக்கு லைசென்ஸ் இருக்கா? அதை எடு முதல்ல!"**

'இல்லை' எனும்
இடத்தில் இருந்தாய்; பிறகு -
'உண்டு' எனும்
உணர்வு ஏற்பட்டு...
தாங்கினாய்
தேவகி மைந்தனை - உனது
கண்ணிலும்
கருத்திலும்
கவின் மிகு - ஒரு
கிருஷ்ணப் பருந்தாய்!

சைவத்தில்
சனித்தவன்; வைணவ
தெய்வத்தில்
தோய்ந்து - கண்ணன்
திருநாமம் கேட்டாலே
திருவிழிகள் பனித்தவன்!

பகவத் கீதைக்குப்
புத்துரை புனைந்தாய்;
கண்ணனுக்கு - ஒரு
கோயில் கட்டவும் முனைந்தாய்!

அண்ணன் பாட்டில்
ஆரம்பித்து -
கண்ணன் பாட்டில்
கச்சேரியை முடித்த...
உன்னை
ஒரு -
வித்தியாசமான - சங்கீத
வித்துவான் எனலாம்; தனது -
கரைகளைத் - தானே
கட்டமைத்துக் கொண்ட - உனது
கானம் - ஒரு
காட்டாற்றுப் புனலாம்!

ஆயனை;
அசோதை சேயனை;
அருந்தமிழால் அருச்சித்த -
ஆழ்வார்கள் வரிசையில்...
உன்னை -
உட்கார்த்துவேன்;
உட்கார்த்தி
உனக்கொரு -
பொன்னாடையாய் - எனது
பண்ணாடையைப் போர்த்துவேன்!

'கண்ணபிரான்
கழலிணையை நம்பி...
வாழுவோர்
வாழ்வினைச்
சூழுமோ - ஒரு
சோகாப்பு?' என -
உலகறியப் பாடிய -
உனக்கென் கைகூப்பு!

**வியாசருக்கு - வந்தனம்.**

மீன்வயிற்றில் தோன்றிய



மச்சகந்தி என்னும் - ஒரு
மான் வயிற்றில் தோன்றிய
மகானே!

நீ -
நீணிலத்தார்க் கருளிய...

பாரதமும்;
பாகவதமும்;
பயில்வோன் - மீட்டும்
பன்னீர்க்குடம் புகானே!

பாரதம் சுட்டுவது
பாண்டவர் கவுரவர் -
பொருதல்;

பாகவதம் சுட்டுவது
பரம்பொருள் -
பூமிக்கு வருதல்;

உனையலால் - இவ்
உலகின் கண்...

எவரால்
ஏலும் -
எமக்கிவற்றை
ஏட்டில் தருதல்?

வியாசமுனி - என
விளங்கு மெய்த்தவனே! சித்தி -
விநாயகனையே - இராயச
வேலைக்கு வைத்தவனே!

பூங்காற்று நீ;
புழுதி நான்;
பூங்காற்று
பாடியதே என்று - தானுமதுபோல்
புழுதியும் - பாடப்
புகுதல் கேலிக்குரியது;

இருப்பினும்
இதுபோன்ற -
அதீத ஆசைகள்
அடியேன் வாலிக்குரியது!

நீ -
நன்னூல்கள் எனும் -
நறுமலர்களை
நல்கிடு நந்தனம்;
உன்னுள் புகுந்து
உலவிட - எனக்கோர்
உத்தாரம் தா;
உனக்கென் வந்தனம்!

## சுகப்பிரமம்.

தகவு மிக்க - ஒரு
மகவு...

வேண்டும் என்று -
வியாசர் எண்ணினார்;
மழைகள்
மல்லாந்து கிடக்கும் -
மேருமலையின்
மேற்குச் சாரலை நண்ணினார்;

வாமியின் -
வாயிதழ் வழங்கும்...
கள்வாங்கிக்



"ஏதோ அமுல் பட்டர் கம்பெனியில இருந்து வந்திருக்காங்களாம். அவங்க வெண்ணெய் விளம்பரத்துல நடிக்க முடியுமானு கேட்கறாங்க!"

- ஆரோ



களிப்புறும் கண்ணுதலானை -
உள்வாங்கி;
ஊண் உறக்கம் நீங்கி;

'ஓம் நமசிவாய' என -
ஓதி ஓதித் தவம் பண்ணினார்!

நீர்வந்து தங்கும்
நீள் சடையோன் -
நேர் வந்து
நின்றான்;

'வியாசனே! உன் -
விருப்பம் போல் -
உனக்கு ஒரு மகன் -
உதிப்பான்!' என்றான்!

ஒரு நாள் -
ஒரு நல்லந்திப் பொழுதில்...

வந்து நின்றாள் - ஒரு
வனிதை; வேத -
வியாசருக்கு நேர்; எவரையும் -
விழுத்தவல்லது அவள் ஏர்!

கச்சு - தன்
கட்டுக்குள் -
கொண்டுவர முடியாத -
கொங்கை; அது -
காணும்
கண்களுக்கு -
கவனப்படுத்தும்
காய் சுமக்கும் தெங்கை;

வண்ண மேனி -
வழவழப்பும் மழமழப்பும்..

படிகமோ?
பளிங்கோ? - எனப்
பார்வை ஊடுருவும் படிப்
பளிச்சிட்டு -

பழிக்கும் - ஓடு
பிளந்தெடுத்த பனைநுங்கை;

நீல நிறத்து
நிலாவின் தங்கை; அவள் -
நீர்மேகத்தை
நீள்குழலில் முடித்த நங்கை;

வண்ணக் கழுத்தாய் -
வைத்தான் வலம்புரிச் சங்கை;
கீரைத் தண்டைக் -
கேலி செய்யும் வளையாடு செங்கை;

அயன் -
அவளொருத்திக்கே அளித்தான் -
ஆயிரம் -
அழகியர்க்கான பங்கை!

வியாசருக்கு - அவள்
விடுத்தாள் - அல்லிநிகர்
விழிவழி ஒரு கடுதாசி;
விடுத்தவள் பெயர் 'கிருதாசி'!

வியாசர்
விழிகொட்டாது பார்த்தார்;
முகம் முச்சூடும்
முத்து முத்தாய் வேர்த்தார்!

வாய்த்தது - நல்ல
வாய்ப்பு என்று...
மாரன் - தன்
மனத்துக்குக் கூறினான்;

தாழை வாளைத்
தடக் கையில் தாங்கி...
மீனக்கொடி
மேலே பறக்கும்
மந்த மாருதம் - எனும்
மணித் தேரில் ஏறினான்!

தாமரை;
மாம்பூ;
அசோகம்;
முல்லை;
நீலோற்பலம்;

ஆகிய
அஞ்சு
கணைகளைத் - தன்
கரும்புவில்லில் பொருத்தி...

ஏதுமறியா வியாசர் மேல்
எய்தான்;
உடல் உறவை
உசுப்பும் உணர்வை - அவரது
உள்நாடி நரம்புகளில்
ஊடுருவச் செய்தான்!

யாண்டும் - தன்
யாக்கையை மறந்து...

யாகவயப் படுபவர்; கரும -
யோகவயப் படுபவர்; தரும -
லோகவயப் படுபவர்; திருவாய் -
மூகவயப் படுபவர்; திடீரென...

மோகவயப் பட்டார்; மன்மத -
போகவயப் பட்டார்; மாவிரக
ரோகவயப் பட்டார்; மாளாத -
சோகவயப் பட்டார்!

வெவ்வேறு
வாதைகளின்
வயப்பட்டார்; வயப்பட்டு -
பயப்பட்டார்!

'ஒன்றுக!
ஒன்றுக!' என்றது -
ஓவியப் பாவையின்
ஒளிவடிவம்;

அதனால் விளைந்த
அளப்பரும் விரகத்தை
அடக்க
ஆற்றாது...

கண்ணும்
கருத்தும்
கிறங்கிய வியாசர் - எடுத்தார்
கிளிவடிவம்!

அப்படியும்
அவரை மீறி
வெளியே வந்து
விழுந்தது விந்து!

வெளிப்பட்ட
வீரியத்திலிருந்து...

உண்டானான்
ஒரு மகன்; அவனுக்கு -
வேத வியாசர்
வைத்த பெயர் 'சுகன்'!

(தொடரும்)

## மகனே!
## மகனே!

**வி**யாசர் – கிளி
வடிவினில் இருக்கையில்தான் –
விந்து
வெளியானது;
ஆதலால்
அதில் விளைந்த –
கீர்த்திமிகு மகனின் முகம்
கிளியானது!

'சுகம்' எனச்
சொன்னால் –
வடமொழியில்
வண்ணக்கிளி என அருத்தம்;

மகன் – கிளி
முகன் – என்பதால்
'சுகன்' – என வியாசர்



சூட்டிய பேர் சாலப் பொருத்தம்!

கழுத்துக்கு மேல்தான்
கிள்ளை;
மற்றப்படி - அது
மானிடப் பிள்ளை;
வாரி யெடுத்து
வாஞ்சையொடு கொஞ்சிய
வியாசருக்கு - அது
வழங்கிய இன்பமோ கொள்ளை!

சுத்த
சைதன்னியமே
சகம் இறங்கியது;
சுகர் எனப் பிறங்கியது!

ஆகவேதான் -
அவர் சனித்ததும்...

கங்கை
கடுகிவந்து நீராட்ட;
கந்தருவர்
கானம்பாடி கைவீணை மீட்ட;

வித்தியாதரர் - துந்துபி
வாத்தியங்கள் முழங்க;
கிருஷ்ணாஜினம் எனப்படும்
கருநிற -
மான் தோலும் ஊன்றுகோலும்
மானம் வழங்க;

கமண்டலம் - ஆயிரம்
கண்ணன் கொடுக்க;
அமராவதிப் பெண்டிர் -
ஆரத்தி எடுக்க;

வானவர் -
வாசமலர் தூவினர்;
'வாழி! வாழி!' என -
வாய் மணக்கக் கூவினர்!

சுகர் - இந்திரிய
சுகங்களைச் செற்றார்;
சுகப்பிரமம் - என்றே



சுட்டப் பெற்றார்;

பந்தம் வைத்துப்
பாசம் வைத்துப்
பிரியமொடு - எப்
பொருளையும் பற்றார்;

ஓதாமலே
ஓராயிரம்

நூலுணர்வு உற்றார்; ஆண் பெண்-
பாலுணர்வு அற்றார்!

பால்
போல் -
ஆடையோடும் இருப்பார்;
ஆடையின்றியும் இருப்பார்!

தோலாடை கொண்டு
தோன்றிய தேகத்திற்கு - ஏனொரு
மேலாடை என்று
மேனியை மூடாது விடுப்பார்;

சித்தம் போக்கு
சிவம் போக்கு - என்று
சில சமயம் - மரவுரி எனும்
சீரைகளை உடுப்பார்!

சுருங்கச் சொன்னால் -
சுகப்பிரமம்...

போசனம்;
ஆசனம்;
வஸ்திரம்;
வாகனம்;
என்பவை பற்றியெல்லாம் -
எந்தவிதப் பிரக்ஞையும்...

இல்லாமல்
இரவு பகல் கிடப்பார்; தன் -
இருக்கை விட்டு - எந்த
இலக்குமின்றி நடப்பார்!

கரும மார்க்கத்தில்
கடுகளவும் மனம் வைக்காத
சுகப்பிரமம் - ஒரு நாள்
சொல்லாமல் கொள்ளாமல்...

ஓலைக் குடீரம் விட்டு -
ஓடிப் போனார்;

காதலித்துக்
காத்த மகனைக் காணாது - புத்தி
பேதலித்துப்

பெரியவர் வியாசர்...

கங்குலும் பகலும் -
கவல லானார்!

புத்திர பாசம் - மகா
பாரதம் புனைந்த மகானை - ஒரு
சத்திரம் போலே
சதா சேதித்தது;

காலம் - மிகக்
கொடியது; அது...

பராசர மகரிஷியின்
பிள்ளையான வியாசரையே - ஒரு
சராசரி மனிதனைச்
சோதிப்பதுபோல் சோதித்தது!

அடர்த்தியான -
அடவிக்குச் சென்று...

வனத்தின்
வயிற்றுப் பகுதியில்
முளைத்திருக்கும் - ஒரு
முதுகுன்றின்மேல் நின்று...

வேத
வியாசர் -

'எங்கிருக்கிறாய் மகனே?
எங்கிருக்கிறாய் மகனே?'
என - வினா
எழுப்ப...

ஏக காலத்தில்
ஏகப்பட்ட குரல்கள்
எதிரொலியாய்
எழுந்தன -

'நான் இங்கிருக்கிறேன்!
நான் இங்கிருக்கிறேன்!' என்று!

ஆம்;
அன்னணம்...

விருட்சங்களும்;
விலங்குகளும்;
விளை நிலங்களும்;
விருத்தாசலங்களும்;

புல்லும்;
புள்ளும்;
புனலும்;
பூங்காற்றும்;

ஒரே குரலில்
ஒலித்தன உரக்க;

சுக முனிவர் -
சுகப் பிரமமாய்...

நீக்கமற - எங்கும்
நிறைந்திருக்கிறார் - எனும்
நிஜத்தை - நெடுவனம்
நிரூபித்தது பரக்க!

பகவான் வியாசர்
பர்ணசாலை வந்து சேர்ந்தார்;
பிள்ளையை - அங்கு
பார்த்ததும் 'அம்மவோ!' என
பெருமூச் செறிந்து
பேதுறவு பயம் தீர்ந்தார்!

ஆயினும் - மகனின்
அசாதாரணத் தன்மையை - சற்று
ஆச்சரியத்தொடு
அவர் ஆய்ந்தார்;
ஆய்ந்து ஆய்ந்து -
ஆனந்தத்தில் தோய்ந்தார்!

சுகர் -
சுற்றுப்புறச் சூழலின் கைதி -
அல்ல என்பதற்கு
அடையாளமாக -
அவரைப் பற்றி
அடுத்தபடியாய் ஒரு செய்தி!

ஓட்டுக்குள் இருந்தும்
ஓட்டோடு இம்மியளவும் -
ஒட்டாது விளங்கும்
ஒரு விளாங்கனியாய்;

தாமரை இலை
தாங்கும்படி இருந்தும் -
இலைக்கும் தனக்கும் - தொத்து
இலையெனத் தெரிவிக்கும்...

தடாகத்துத்
தண்ணீர் முத்தாய்;

பிள்ளையாண்டான்
பிறங்குவதைப்
பிதா வியாசர்
பிறிதொரு தருணத்தில்...

கண்ணாரக்
காண நேர்ந்தது; கண்டு -
அத்தகு
அபேத நிலையைத் - தான்
அடையவில்லையே - என
அவர் நாண நேர்ந்தது!

சிவப்புச் -
சூரியனை...

முழுக்க
முழுங்கவும் முடியாது;
வேண்டாமென
வெளியே உமிழவும் முடியாது;

மேற்றிசை
முழி பிதுங்கி
மூச்சு
முட்டிக்கொண் டிருந்த...

ஒரு சந்தியா காலம்; விண்ணில் -
ஒரே செம்மண் கோலம்!

குன்று ஒன்று; அதன் -
குடுமியில் நின்று -
அந்த
அருவி...

தலைகுப்புறத் -

தரைமேல் குதிக்கையில் - அது
'தண்ணீரின் -
தற்கொலையோ?' என...

எந்தக் கவிஞனும்
எண்ணும்படியாக இருந்தது;
அழகுணர்ச்சி உள்ள
ஆர்கண்ணுக்கும் விருந்தது!



அவ்வளவு உயரத்திலிருந்து -
ஆரோ உருட்டிவிட்டாற் போல்...

விழுந்தும்
விலா எலும்பு நொறுங்காது - நீர்
எழுந்து
எளிதாய் நடந்தது நதியாக;
ஏற்கெனவே தலையில் - பிரமன்
எழுதிவைத்த விதியாக!

அந்த -
அழகிய நதியில்...

அஞ்சாறு குமரிகள்
ஆடிக்கொண்டிருந்தனர் - தம்
ஆடைகளைக் களைந்துவிட்டு
அம்மணமாக;

வாலிப -
வயதினரான சுகரும்...

அவ்வமயம்
அவ்வழி வந்தார்
ஆடைகள் எதுவுமின்றி
அம்மணமாக!

அவரைக் கண்ட -
அப் பெண்கள்...

கூச்சமின்றி - தொடர்ந்து
குளித்தனர்; குளிர்
நீரில் - மீன்கள் போல்
நீந்திக் களித்தனர்!

பிள்ளையின் -
பின்னாலேயே...

வயோதிகரான
வியாசர் - மர
உரிகளா லான
உடைகளை உடுத்தி வர -

நிர்வாணமாய்
நீராடிக்கொண்டிருந்த - இள
நங்கையர்க்கு - அவர் வருகை



நாணமும் கூச்சமும் தர -
கையது கொண்டு
மெய்யது பொத்தி - அவர்கள்
குய்யோ முறையோ என்று
குமுறிக் கத்தி -

கரைக்கு ஓடினர்; ஆடைகளைக்
கணத்தில் சூடினர்!

வாலிபமும் -
வனப்பும் வாய்ந்த -

தனது
தனயன்
தீர்த்தக் கரையில்
திகம்பரமாக வந்தபோது...

அவனை -
அசட்டை செய்துவிட்டு
அம்மணமாகவே - நீர்
ஆடிக் கிடந்த பெண்கள் -

வயோதிகனான - தான்
வருகையில்; அதுவும்
வற்கலை என்னும் மரவுரியை
உடுத்தி வருகையில்...

ஏகப்பட்ட வெட்கம்; கூச்சம்;
ஏற்பட்டு - விடுவிடுவென
ஏறியது ஏன் கரையில்? ஆடையை -
ஏற்றது ஏன் அரையில்?

மகரிஷி வியாசர்
மனத்துள் முனகினார்; பின் -
வாய்விட்டு - அந்த
வஞ்சியரிடமே வினவினார்!

'சர்வாங்க தரிசனமாய் - என்
சுதன் சுகன் வரும்போதலவோ...

உங்களை - வெட்கம்
உண்டிருக்க வேண்டும்? மயிர்க் -
கூச்சம் மேனியில்
கண்டிருக்க வேண்டும்?

அப்போது -
அவனை...

ஒரு பொருட்டாகவே
ஓராத நீங்கள்;
சீச்சீ என்று - கரை
சேராத நீங்கள்;
வயதானவன் - நான்
வருகையில் மட்டும்...

வெட்கம் உங்களை
வழித்துத் தின்ன;
வெருவலில் பாதங்கள்
வெடவெடத்துப் பின்ன;
முழுங்க வரும்
முதலையைக் கண்டு -
அலறியடித்துக் கரையேறும்
அன்னக்குஞ்சுகள் அன்ன;

ஏன் ஓடினீர்கள்? உடைகளை -
எடுத்துச் சூடினீர்கள்?'

குமரிகள்
கொஞ்ச நேரம்
பதில் கூறக் கூசினர்;
பிறகு மெல்லப் பேசினர்!

**(தொடரும்)**

(மலையாள) ஏழைத் தம்பதியரின் குழந்தைக்குப் பிறப்புறுப்பில் ஏற்பட்டிருக்கும் சங்கடமான சங்கதியை வெகுநாசூக்காகக் காட்டி, கண்ணில் நீர் கசியச் செய்து விட்டார்! அந்த ஒன்றரை வயசுக் குழந்தை ஆணா, பெண்ணா என்று தெரியாத அபாக்கிய நிலை. ஒரே ஒரு விநாடி காட்டிய அந்தக் குறிப்பிட்ட படம் தந்த அதிர்ச்சி... அம்மாடியோவ்!

விஜய்யில் 'கிரேஸி டைம்ஸ்' கிரேஸி மோகன், தன் புதுப் பாஷையில் அட்டகாசம் பண்ணுகிறார். "அட்டகாசண பூஷண கீஷண கிரேஸிண நகைஷண சுவைஷண பத்மபூஷண தகுஷண..." என்றார் அப்புசாமி.

**ரா**த்திரி ரொம்ப நேரமாகி, சபை கலைந்து, எல்லாரும் அவரவர் வீட்டுக்குத் தூங்கப் போயாச்சு.

அப்புசாமி மட்டும் ஃபேஷன் டி.வி-யில் ஏதாவது சுவையான காட்சி தென்படாதா என்று ரிமோட்டை அழுத்திக்கொண்டிருந்தவர், கொஞ்ச நேரத்தில் அலுத்துப்போய் சோபாவில் சரிந்து அமர்ந்த நிலையிலேயே தூங்கிப் போய்விட்டார்.

மறு நாள் காலையில் பார்த்தால் டி.வி-யைக் காணோம்!

அரைபிளேடு ராவோடு ராவாக அதைச் சுட்டுக்கொண்டு போய் ஓர் அடகுக் கடைக்காரனிடம் ஆயிரம் ரூபாய்க்கு விற்றுத் தன் 'குடி'ச்செலவுக்குப் பைசா தேத்திவிட்டான்.

'சீதாப்பாட்டியைக் கணவனுக்கு நெருக்கமானவளாக வசியப்படுத்தினாலும்கூட, அப்புசாமியிடமிருந்து பைசா பேறாது. அந்தளவுக்கு அவருக்கு சீதாகடாட்சம் இல்லை' என்று அறிந்ததும் மந்திரவாதி ஹரிபட்டர் துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு கிளம்பிவிட்டார்.

"டி.வி. பெட்டியை ஹரிபட்டர்தான் தன் மந்திர சக்தியால் லவட்டிக் கொண்டு போயிருப்பார்!'' என்று ரசகுண்டு சொன்னதை சீதாப்பாட்டி ஏற்கவில்லை.

''ஐ ஹாவ் மை ஓன் ஸஸ்பிஷன்! நீங்க கூட்டணியா வந்ததே, என் டி.வி-யைக் கடத்திட்டுப் போய் விற்று, எந்த ஓட்டலிலாவது நாஷ்டா பண்ணத்தான்னு நினைக்கிறேன். யாரையும் ஸிங்கிள் அவுட் பண்ணி, ப்ளேம் பண்ண நான் தயாராயில்லை!" என்று அறிக்கை விட்டுவிட்டாள்.




(அதைத் தொடர்ந்து சீதாப்பாட்டி 'அப்புசாமி & கோ'வின் 'கேங் என்ட்ரி'க்குத் தடா போட்டுவிட்டதால் டி.வி. விமரிசனம் இத்துடன் நிறைவுபெறுகிறது!)

# கிருஷ்ண விஜயம்



பாகவதம் –
பிறந்த கதை

'பெரியவரே!
பெண் ஆண் எனும் பேதம்...

இன்னமும்
இருக்கிறது தங்கள்பால்;
எனவேதான் – தங்களை
எதிரில் கண்டதும் –
ஏராளமான கூச்சம்
எழுந்தது எங்கள் பால்!

தங்கள் –
தவப்புதல்வருக்கோ...

மரமும் ஒன்றுதான்;
மட்டையும் ஒன்றுதான்;
குளமும் ஒன்றுதான்;
குட்டையும் ஒன்றுதான்;

சிவனும் ஒன்றுதான்;
சட்டையும் ஒன்றுதான்;
புருஷனும் ஒன்றுதான்;
பெட்டையும் ஒன்றுதான்!

மகரிஷியே! தங்கள் -
மைந்தருக்கு...

பார்ப்பவை யாவும்
பரப்பிரமம்; அப்படியொரு -
பார்வை வாய்ப்பது
பலருக்கும் சிரமம்!'

என்று சொல்லி - அந்த
ஏந்திழையர் சென்றதும்...

மகனை நினைந்து - வியாசர்
மகிழ்ந்தார்;

'அகமும் புறமும்
அம்மணம் - என
அவனிருப்பதால் தான் -
அவனிடம் கமழ்கிறது -
ஆன்மஞானம் - எனும்
அம் மணம்!'

என -
எண்ணி -
நெஞ்சு வெகுவாக
நெகிழ்ந்தார்!

பிரமத்தின் -
பிரதியை;
முழு முதலின் -
முன் மாதிரியை;
ஆதி வஸ்துவின் -
அச்சை;
சாட்சாத் பரமேட்டியின் -
சாயலை;

பிள்ளையாய்ப் -
பெற்றிருக்கும் பிதா; எனினும் -
பகவான் வியாசர் - அலை
பாய்ந்தபடி இருந்தார் சதா!

துவாபர யுகத்தின் முடிவில் -
தோன்றியவர் வியாசர்;
முன்; பின்; நடு; எனும் -
முக்காலத்தையும் - தனது
மூன்றாம் கண்ணால் ஒரும் -
மூதறிவு பெற்ற முக விலாசர்!

அந்த யுகத்தில் -
அந்தணர் யாவரும்...

இஷ்டம்போல் - வேதங்களின்
இறைச்சிப் பொருளை விரித்தனர்;
இமயம் போல்
இருந்த - அவற்றின்
இசையை - அவர்கள்
இலகுவாகச் சரித்தனர்!

அவர்களது -
அத்தகு செயலால்...

தருமம்
தலை கவிழ்ந்தது;
தருமத்தால்
தளையிடப் பெற்ற -
அதருமம்
அதன் முடிச்சு அவிழ்ந்தது!

வேதங்கள் பற்றி -
வியாசர் விசனப்பட்டார்;
சிதறிக் கிடந்த
செழுமறைகளைச்
சேகரித்து - அவற்றின்
செம்பொருளுக் கேற்ப...

ரிக்;
யஜுர்;
சாமம்;
அதர்வணம்;
என - அவற்றிற்கு
ஏயதான நாமங்கள் இட்டார்!

அதன்பின் -
அந்த நான்கினையும்...

பைலர்;
வைசம்பாயனர்;

ஜைமினி;
சுமந்து;

எனும் - ரிஷிகளிடம்
எடுத்துத் தந்து -



அவரவர் குருகுலத்தில்
அவரவர் கீழிருக்கும்
ஒவ்வொரு சீடருக்கும்
ஓதுவிக்கச் செய்தார்;
வாடிக் கிடந்த
வேத விருட்சத்தின்
வேர்களில் - தண்ணிய
வெள்ளத்தைப் பெய்தார்!

வேதங்களின் உட்பொருள்களை -
விளக்கி...

பதினெண்
புராணங்களைப் புனைந்தார்;
வையத்தை வாழ்விக்க
வைகலும் முனைந்தார்!

பிறகு -
பாமர மக்களும் -
புரிந்து கொண்டு
புவிமிசை கடைத்தேற...

தரும நெறிகளைத்
தாங்கி நிற்கும்
மகாபாரதத்தை ஆக்கினார்;
மானுடம் வீடு பெற ஊக்கினார்!

இத்துணை காரியங்கள்
இயற்றியும்....

வியாசரின் உள்ளம்
விரக்தியை உமிழ்ந்தது;
அல்லும் பகலும்
அது
அமைதியின்மை - எனும்
அவலத்தில் அமிழ்ந்தது!

சரத்காலம்;
சாய ரட்சை;

சரஸ்வதி நதி தீரம்;
சந்தி செய்து முடித்துவிட்டு...

விழுதுகள்
விட்டிருந்த - ஒரு
வயதான - வட
விருட்சத்தின் கீழ்...

வியாசர் - சற்று
விச்சிராந்தியாக -
வெறுமனே -
வீற்றிருக்க...

வந்தார் நாரதர் - மகதி
வீணையை மணிக்கை ஏற்றிருக்க!

முனிவறியா
முனிவரின்
முகத்தில் - கவலைகள்
முகாம் இட்டிருப்பது கண்டு...

பிரமனின்
பிரமசாரிப் பிள்ளை -
பிரியமோடு
பேச லானார்; வேத -

வியாசரின் - மன
வெப்பம் தணியுமாறு
வார்த்தை விசிறி -
வீச லானார்!

'பராசர மகரிஷியின்
புதல்வரே! இவ் -
வனத்தின் கண்
வேள்வி வேட்டுகின்ற -
முனிபுங்கவர்க் கெலாம்
முதல்வரே!

வகுத்தீர்;
தொகுத்தீர் மறைகளை; அவ்வாறு
வகுத்தும்
தொகுத்தும்
மிகுத்தீர் - அம்
மறைகளின் நிறைகளை!

அம்மவோ!

அது மட்டுமோ?

புருஷார்த்தங்கள்
பூராவும் பொருந்திய -
பதினெண்
புராணங்களையும்;
பகவத்கீதை - என்னும்
பொக்கிஷத்தை - உள்ளே
பொத்தி வைத்திருக்கும் - மஹா
பாரதத்தையும்;

உலகு
உருப்போட -
உருப் போட்டு



உருப்பட -

வழங்கியது - உமது
வாலறிவு! இவ்
வையமிசை உண்டோ - உமது
வாலறிவு போலறிவு?

இன்னணம் -
இருக்கையில்...

கல்லார் போல் - ஏன்
கவலைப் படுகிறீர்?

அஞ்சு புலன்களையும்
அடக்கி ஆளவல்ல நீர் - ஏன்
அற்ப மனத்தை
அலைபாய விடுகிறீர்?'

வினவினார் நாரதர்;
விளக்கினார் நாவலர்!

'நாரதர் பெருமகனே!

நான்முகனார் திருமகனே!

எவ்வளவோ
எழுதியும் -
என் மனத்திற்கு இன்னும்
ஏற்படவில்லை ஒரு பூரணம்;
எனக்கே தெரியவில்லை -
எனது கவலைக்கான காரணம்!

ஏன்
எனக்கிந்த
அமைதியின்மை? சித்தம் -
அலைபாயும் தன்மை?

தேவரீர் தான்
தெரிவிக்க வேண்டும்;
தெளியாத நெஞ்சத்தைத்
தெளிவிக்க வேண்டும்!'

காற்று வெளியிடை ஏற்றிவைத்த -
காடா விளக்காய் - மனம்
படபடப்பதைப் -
பகர்ந்தார் பாரதமுனி; அதை -
ஆற்றுப் படுத்தினார் -
அரவிந்தன் சேய் நாரதமுனி!

'வேதங்கள்
வீழாது நிற்க - நான்கு
பாதங்கள்
படைத்துத் தந்த பெரியவரே!

எது அறம்?
எது மறம்?
என -
எல்லோர்க்கும் புரியும்படி...

இதிகாசம் ஒன்று -
இயற்றியருளிய அரியவரே!

உலகு
உய்ய -
உபநிடதங்கள்
உதவியவர் - எனும்...

வாழ்த்துக்கு -
விழைக்காடு நாமம் உரியவரே!

நீர் -
நல்கிய...

22

புராணங்களை;
புகழ்சால் பழமறைகளை;
சாஸ்திரங்களை;
சடங்குகளை;

ஒருவன் -
ஓர்ந்தால் மட்டும் போதாது;
வீடு பேறு -
வேண்டும் பேர்கள் -
அஃதை -
அடையக் கூடுமோ...

பகலும் கங்குலும் -
பகவானின் நாமத்தை ஓதாது?

கரிய மாலின் - திருக்
கல்யாண குணங்களை...

ஆதியோடு
அந்தமாய் -
ஆர் ஒருவன்
அறிந்து வைத்திருக்கிறானோ;

பகவத் பக்தியே
பரம பதத்தின் -
பூட்டைத் திறக்கும் சாவியெனப்
புரிந்து வைத்திருக்கிறானோ;

அவனே - பிறப்பை
அறுத்தவன் ஆவான்;
நித்திய சூரிகளின் -
நிரலில் ஒருவனாகிப் போவான்!

பகவானை அடைய -
பக்தி மார்க்கம்தான்...

இருக்கும் வழிகளிலேயே
இலகுவான வழி;
நாதன்
நாமத்தை -
நாளும் போதும்
நாவினிக்கப் பாடுவார்...

பாடிய
பாட்டுக்கான -



பரிசிலாய்ப் பெறலாம்
பரமபதம் எனும் பொற்கிழி!

சாகை சாகையாய்
சதுர் மறை ஓதல்;
வேதிகை சமைத்து
வேள்வி வேட்டல்;
சந்தி தோறும்
சபம் செய்து -
அங்கையில் நீரெடுத்து
அருக்கியம் விடுதல்;
அனாசாரத்தைப் புறம் தள்ளி -
ஆசாரத்தைப் பேணல்;

ஆகியவற்றால் பெறலாம் -
ஆன்ம சக்தி;
ஆயினும்
அவற்றை விடவும் -
அதிக சக்தியை
அருளுவது பகவத் பக்தி!

பக்தியினால் -
பாமரரும் பெறலாம் முக்தி;
முக்தி பெற
முனைவோர்க்கு -
பக்தி போல்
பிறிதில்லை எளிய யுக்தி!

வேத
விற்பன்னரே!

சாஸ்திர
சம்பன்னரே!

இயற்றினீர்
இறையருள் மிக்க
எத்துணையோ நூலை; உலகம் -
ஏத்துது உமது எழுது கோலை;
எனினும்...
எழுத்து வேந்தே!

நீர்
நல்கிய நூல் எதுவும் -
பரக்கப்
பேசவில்லை -
பார் இறங்கி வந்த
பரந்தாமன் லீலை!

எனவே - இன்றே
எழுதத் தொடங்குங்கள்...

திருமால் பெருமைகளை; அவனது -
திருவிளையாடல் அருமைகளை;
தொகுத்து வைத்த - ஒரு
தொகை நூல் போன்ற காவியத்தை;
அதில் -
ஆழங்காற்பட்டு...

வீடு பேறு
வாய்க்கும்படி -
மேம்படுத்திக் கொள்ளும்
மனிதகுலம் தன் சீவியத்தை!

உலகும் நலமுறும்;
உமது பணியும் நிறைவு பெறும்!'

இன்னணம்
இயம்பினார் -

சரஸ்வதி புத்திரன்; ஏற்றார் -
சத்யவதி புத்திரன்!

பிறந்தது -
பாகவதம்; அது
புரிந்தது -
படிப்போர்தம் பாவ வதம்!

**(தொடரும்)**

26

# கிருஷ்ண விஜயம்



**பரீட்சித்து.**

**அ**ந்த –
அரசன் பெயர்
பரீட்சித்து! அவன் –
பாண்டவர் வம்சத்து வித்து!

அன்னை வயிற்றில்
அவன் வளரும்போதே –
ஆரம்ப மானது
அவனுக்கு ஆபத்து; அவனைக் –
கருவில்
கருகாது –
காத்தது
கண்ணபிரானின் அருட்சித்து!

'பிழைப்பானா? மாட்டானா?
பரீட்சித்து!' – என்று
பார்த்தது காலம் – மெதுவாய்ப்
பரீட்சித்து!

பாரதப்
படுகளத்தில் –

அபிமன்யு
ஆவி நீத்து –
ஆகாயம் ஏறுகையில்
அவன் மனைவி...

உத்தரை என்னும்
உத்தமி -
உண்டா யிருந்தாள்; நிறைமாதப் -
பெண்டா யிருந்தாள்!

'பாண்டவர் பரம்பரையே -
பூக்காது போக்குவேன்!' என்று -
பதினெட்டாம் நாள் -
போர் முடிவில்...

சூளுரை கூறினான்;
சூறையாய்ச் சீறினான்;
ஆசாரியர் துரோணரின்
அன்பு மகன்;
அசுவத்தாமன் - எனும்
அனல்முகன்!

அவனது
அன்புமிகு தாதையை;
தனுர் வேதத்தைத்
தலைகீழாய்ப் பயின்ற மேதையை;

ஒரு நூறு பேர்க்கும் -
ஓரைந்து பேர்க்கும் -

விலட்சணமாக
வில்வித்தை கற்பித்த குருவை;
துரோணர் எனும்
துதித்தற்குரிய தூய உருவை;

வில்லால்
வெல்ல வக்கற்று - பொய்ச்
சொல்லால்
சுலபமாய்ச் சாய்த்து...
போர் அறத்தைப் பேடியர் போல் -
புறங் கடத்தியதும்...

தலைவன்
துரியனை - அவன்
தொய்ந்த நேரம் பார்த்துத்
தொடையில் புடைத்து...
குற்றுயிரும் குறையுயிருமாக -
குரு நிலத்தில் கிடத்தியதும்...



அசுவத்தாமனை
ஆத்திரம் கொள்ள வைத்தது:
தந்தை சாவும் -
தலைவன் நோவும் -
தந்த
நலிதலிப்பு...

நெஞ்சை -
நெருஞ்சியாய்த் தைத்தது:
அந்த அவலம் - அவனை
அனவரதமும் நைத்தது:
எஃகனைய மேனி - அதனை
எண்ணி எண்ணி எய்த்தது!

'பாண்டவர் - இனி
பாண்டவர் அல்லர்; என்னால் -
மாண்டவர் ஆதல் வேண்டும் -
ஈண்டவர்!'

எனக் கறுவினான்; இடை -
ஏந்திய வாளை உருவினான்!
கூகையும் கவர்க் கோழியும் -
கூவும் ராத்திரியில்...

பாசறைக்குள்
புகுந்து -
படுத்து உறங்குவது - பஞ்ச
பாண்டவர்களே என எண்ணி -

உப பாண்டவர்கள் - என
உரைக்கப் பெறும் -
பாஞ்சாலியின் -
புத்திரர்களை வெட்டினான்;
தலைகள் அய்ந்தையும் -
துரியன் முன் கொட்டினான்!

துரியனே -
துக்கித்தான்; கண் -
அயர்ந்திருக்கையில்
ஆண்மையற்று -
அஞ்சு பிஞ்சு உயிர்களை
அபகரித்தது...

தவறுக்கும் மேலான
தவறு என்று - துரோணரின்
தனயனோடு - துரியன்
தர்க்கித்தான்!

புலர்ந்தது
பொழுது;
வான் இருந்து
வையம் இழிந்தது -
வெளிச்ச
விழுது;

வெய்யில் நின்றது -
தொய்யில் உழுது;
தொய்யில் நின்றது -
வெய்யில் தொழுது;

ஒரே -
ஓர் உயிர் மட்டும்...

அல்லல்
ஆற்றாது -
அரற்றியது
அழுது!

ஆம்;
அதிகாலையில்தான் -
பாடி வீடு
புகுந்து...

பார்த்தாள்
பாஞ்சாலி - தன்
பிள்ளைகள்
பிணங்களாகிக் கிடப்பதை;
குருதி வெள்ளம் - தன்
குதிகால் வருடி நடப்பதை!

பெற்ற வயிறு
பற்றி எரிந்தது;
சுயம் இழந்து
சிந்தை திரிந்தது;
உப்புக் கண்ணீர்
ஊற்றுகண் டொழுக - அதன்
வெப்புக் காற்றாது



விழிமலர் கரிந்தது!

'அய்யோ!
அய்யகோ!' என்று -
கூவினாள்;
கூவிக்கூவிக் கேவினாள்;

'ஆண்களா?
அலிகளா?' எனத் தன் -
ஆளன்களை வினவி -
அவர்கள் வெள்குமாறு...

வேணமட்டும்
வசவுகளைத் தூவினாள்;
அவிழ்ந்த கூந்தலை
அவளது கூரிய நகங்களால் -
அப்படி இப்படி
அர்த்தமற்று நீவினாள்!

திரௌபதியைத் -
தனஞ்செயன் தேற்றினான்;
'அசுவத்தாமன் தலையை
அரிந்து வந்து - உன்
அரவிந்த மலரனைய
அடிகளின்கீழ் வைக்கிறேன்!'

என -
ஏமாப்போடு சாற்றினான்!

ரதத்தை -
ராஜகோபாலன் ஓட்ட...

பார்த்திபன்
புறப் பட்டான்;
அவனுக்கு
அஞ்சாது -
அசுவத்தாமன்
அம்புகள் விட்டான்!

இடக்கரங்களில் பிடித்த -
இருவர் விற்களும்...

உக்கிரமாய் - அம்புகளை
உமிழ்ந்தன;

ஆயினும்
அவை -
பரஸ்பரம் முட்டி மோதி
பூமியில் அமிழ்ந்தன!

அனலம்பைப்
புனலம்பு அவித்தது;
எதுவும்
எதையும் -
எதுவும் செய்ய
ஏலாமல் தவித்தது!

அசுவத்தாமன் -
அவன் வசம் இருந்த...

பிரமாஸ்திரத்தைப்
பிரயோகம் செய்தான்;
பார்த்திபனும் - அதே
பிரமாஸ்திரத்தை எய்தான்!

ஒன்றை
ஒன்று -
நேர் நேர்
நின்று -

தாக்கித்
தணல் குழம்பைத்
தரையில்
துப்பின;
தம்மைத்
திரும்பப் பெறாவிடில்...

சகமே
சாம்பலாகிவிடும் - என்று
செப்பாமல்
செப்பின!

அசுவத்தாமனுக்கு - அந்த
அஸ்திரத்தை...

வில்
வளைத்து -
விடத்தான் தெரியும்; திருப்பி -
வாங்கத் தெரியாது; எனவே -

விக்கித்து நின்றான் - அந்த
விவரம் புரியாது!

விடவும்
வாங்கவும் -
அறிந்தவன்
அர்ச்சுனன்;

'விட்டால்
வெப்ப மழை -
அம்புகள் பொழியும்;
அம்புவி அழியும்!

ஆதலால் -
அஸ்திரம் இரண்டையும் -
தனஞ்செயா! நீயே -
திருப்பி வாங்கு!' என்று...

அலறினான் -
அச்சுதன்!

பரந்தாமன்
பகர்ந்தபடி -
பார்த்திபன் - இரு
பிரமாஸ்திரங்களையும்...

திரும்பப் பெற்றுத்
தனது -
தூணியில்
திணித்துக் கொண்டான்;

ஆயுதம்
அற்றவனாய் -
அசுவத்தாமன்
அஞ்சி நிற்பதைக் கண்டான்!

'காண்டீபா!
கேள் என் சொல்! ஒரு -
பாவமும் அறியாத - உப
பாண்டவர்களை - உறங்குகையில்
இரக்கமின்றிக் கொன்ற -
இவனை இக்கணம் நீ கொல்!'

கண்ணன் கூறினான்; அதைக் -
காண்டீபன் மீறினான்!

தனது குருவின்
தனயனாகவும்;
தனது கெழுதகைத்
தோழனாகவும்;

அந்நாளில் விளங்கிய -
அசுவத்தாமனை - வெட்டி
வீழ்த்த - வில்
விஜயன் விரும்பாமல்...

பெருங் கயிற்றால் - அவனைப்
பிணித்தான்; பிறகு -
பாஞ்சாலி முன் நிறுத்தி - அவள்
பிரலாபத்தைத் தணித்தான்!

தலை
தாழ்ந்து -
தன்முன் நிற்பவனை
திரௌபதி கண்டாள்;
பெண்ணுக்கே உரிய -
பெருங்கருணை கொண்டாள்!



'அசுவத்தாமன் - ஓர்
அந்தணன்;
அது மட்டுமன்றி - உங்கள்
ஆசாரியரின் நந்தனன்;

உத்தமி கவுதமி - என
ஊர் கவுரவிக்கும் - இவனது
வாஞ்சைமிகு யாய் - இருக்கிறாள்
விதவை யாய்;

பிள்ளைகளைப்
பறிகொடுத்துவிட்டு - நான்
அழுவதுபோல் - இவன்
அன்னையும் அழவேண்டாம்;
அவலக் கடலில் - இவன்
அன்னையும் விழவேண்டாம்!

விடுங்கள் இவனை; என் -
வினையால் இடர் இழைத்தவனை!'
என்று பாஞ்சாலி -
எல்லோரையும் பிரார்த்திக்க...

அர்ச்சுனன்
அசுவத்தாமனின் -
தலைமுடியையும்; அவன்
தலைமேல் மின்னிய மணியையும்;

அரிந்து எடுத்தான்; பின் -
அவனைப் போக விடுத்தான்!

நகர்ந்தன -
நாள்கள்;
ஆர் வாழ்வையும் -
அரியும் வாள்கள்!

அவமானமும் -
ஆத்திரமும் -
அசுவத்தாமனை
ஆட்டிப் படைக்க -

அபிமன்யுவின்
அன்பு மனைவி -
உத்தமியாள்
உத்தரையின்...

வயிற்றில்
வளரும் -
கருவைக்
கருக்க முடிவு எடுத்தான்;

'அபாண்டவீயம்' எனும்
அதிபயங்கர அம்பை -
உத்தரையின்
உதரம் நோக்கித் தொடுத்தான்;

கண்ணன் - அவள்
கருப்பைக்குள் புகுந்து - தன்
கைச்சக்கரத்தால் - அக்
கணையைத் தடுத்தான்; இவ்வாறு -

புகழ்சால்
பாண்டவர்
வமிசத்தின் - ஒரே
வாரிசான...

பரீட்சித்துக்கு -
பகவான் உயிர் கொடுத்தான்!

(தொடரும்)



# கிருஷ்ண விஜயம்



**கலிபுருஷன்.**

கருவில் - தான்
கிடக்கையில் - தன்னைக்
கட்டைவிரல் அளவில் வந்து -
காத்தவன்...

'இவன் தானோ?
இவன் தானோ?'
என -
எதிர்நின்ற எவரையும் -

பரீட்சித்துப்
பார்ப்பது போல் பார்த்ததால் -
'பரீட்சித்து' எனும் பெயர்
பெற்றவனும்;

விஷ்ணு ரட்சித்ததால்
'விஷ்ணுராதன்' எனும் -
உயரிய திருநாமம்
உற்றவனும்;

ஆன
அபிமன்யுவின் திருமகன்;
உத்தரையின்
உதரத்துதித்த ஒருமகன்;

அத்தினபுரத்து
அரசு கட்டிலில்
அமர்ந்தான் ஏறி;
ஆயகலைகளில் தேறி!

'குடைநிழ லமர்ந்து

5 | கவிஞர் **வாலி**

குஞ்சரம் ஊர்ந்திடும் - நம்
கொற்றவன் - ஒரு
நற்றவன்;
ஊரவர்
உயிர் என்றும் - அவ்
உயிர்க்குத் தானோர்
உடல் என்றும் -

உயரிய ஞானம்
உற்றவன்;
பார்த்திபன்
பெயரன் - எனும்
பெரும் பேறு
பெற்றவன்;

சிறுமைக் குணங்களைச்
செற்றவன்;
அக அழுக்குகள்
அற்றவன்;
குல
குரு -
கிருபாசாரியாரிடம் - கல்வி
கற்றவன்;

அகவை
அதிகம்
ஆகாவிடினும்
ஆன்றமைந்தவன் எனும்படி...
நன்கு முதிர்ந்த
நெற்றவன்;
சுருங்கச்
சொல்லின் -
மூதறிவின்
முற்றவன்!'
என்றெல்லாம்
ஏத்தியது குடி;
தாழாது
தகத்தகாயமாய் - விண்
தடவிப் பறந்தது
தரணியெங்கும் அவனது கொடி!



விராட தேசத்து
வேந்தெனத் திகழ்ந்த -
உத்தரனின்
உத்தம புத்திரியை;

அவியாது
அழகு வெளிச்சம்
எஞ்ஞான்றும் பிலிற்ற - காலம்
ஏற்றிவைத்த பூத்திரியை;

'இராவதி' எனும் -
இனிய...

திருநாமம் உடைய
திருவிளக்கை; வண்ண -
உடுக்கை யணிந்து
உடுக்கை யனைய - இடை
ஒசிய ஒசிய நடக்கும்
ஒரு விளக்கை;

வலக்கை பற்றி -
வளர் தீ சுற்றி -
மன்றல் முடித்தான்
மன்னன் பரீட்சித்து;

பீடைகள் விலக - வாழ்வில்
பீடுகள் இலக...

மணமக்களை
மறையோர் வாழ்த்தினர் -
மாவிலை கொண்டு
மந்திர நீர் புரோட்சித்து!

தெய்வாம்சம் பொருந்திய -
தம்பதியை...

ஊர்
உறவு தவிர -
வளி
வாழ்த்தியது; வெட்ட -
வெளி
வாழ்த்தியது;

அனல் வாழ்த்தியது; தண்ணிய -
புனல் வாழ்த்தியது;

பூமி வாழ்த்தியது; பூமியாளும்
சாமி வாழ்த்தியது!

குரு
குலத்தின் -
வாரிசு பிழைத்தது;
வமிசம் தழைத்தது!



அதுகாறும்
அரசன் பரீட்சித்துக்கு -
அம்புலி
அனல் பீச்சுகின்ற...

இராவில் - ஓர்
இனிய துணை -
இரா அவதியை -
இராவதி அகற்றினாள்; அவள் -
வந்து
வாய்த்த
வாழ்க்கைத் துணைநலம் - எனும்
வாசகத்திற் கேற்ப...

அன்பெனும் அமுது -
ஆர்ந்த அகத்தினாள்;

பெண் எனும் - அப்
பெரு விருந்து -
பெய்யெனில் - அப்பவே
பெய்யும் மழையா யிருந்து -

ஆளன்
ஆனந்தத்தை -
அன்றாடம்
அகட்டினாள்;

போதும்
போதும் - என்றவன்
புகலும் வரை
புத்துணர்வைப் புகட்டினாள்!

மணாளன் சொல்லுக்கு
மறு சொல் இன்றி...

அவனை -
அனுசரித்தாள்; தன்னை
அவன் பொருட்டு -
அலங்கரித்தாள்; அவனை
உட்கார்த்தி -
உபசரித்தாள்; விரகம்
உறும் போதெலாம் - அது தணிய
உபகரித்தாள்;
அருங்குணமே - ஓர்
ஆக்கை கொண்டாற்போல் -
அவனுக் காகவே - நிலமிசை
அவதரித்தாள்;
அன்றாடம்
அல்லில் -
அவனையே ஆடையாய்
அவள் தரித்தாள்!

புரவலன்
பரீட்சித்துக்கும்; அவனது
இல்லத்தரசி
இராவதிக்கும்;

ஜனமேஜயன் என்பவன் -
ஜனித்தான் மூத்த மகவாக;
அவனை
அடுத்து - மக்கள்
மூவர் பிறந்தனர்
முழுநிலாக் குலத்தின் தகவாக!

பூமிப்
பந்துக்குள்...

பரீட்சித்து மன்னனின்
புகழ் பரவாத இடமேயில்லை;
திசை நான்கிலும்
திக் விஜயம் செய்து
திரும்பிய - அவனது
திருவடி பாவாத தடமேயில்லை!

சில
சிற்றரசும்;

பல
பேரரசும்;
அவனை -
அரசுக் கரசாய்...



ஒப்பி - கை
ஒப்பம் இட்டனர்;
தவறாது
திறை செலுத்தி - அவன்
தாள்கள்
தொட்டனர்!

குல
குரு -
கீர்த்திமிகு
கிருபாசாரியார் -
பிரகஸ்பதியாய்ப்
பிறங்க...

மகாநதிக் கரையில் -
மன்னன் பரீட்சித்து -
மும்
முறை...

அசுவமேத யாகங்களை -
ஆர்வமொடு புரிந்தான்;
அவிர் பாகங்களை -
அக்கினியில் சொரிந்தான்!

தேவர்களே
தேடிவந்தனர் புவியை;
நேர்
நின்று -
பெற்றுக்கொண்டனர்
பரீட்சித்து தந்த அவியை!

இத்தகு -
இசைமிகு வேந்து...

செவ்வனே - தான்
செங்கோல் ஓச்சும் -
ஒவ்வொரு நாட்டையும் பார்வையிட -
ஒருமுறை திருவுளம் கொண்டான்;

அன்னணம் -
அவன் செல்கையில்...

'குருஜாங்கலம்' என்று -
குறிக்கப்பெறும் இடத்தில் -
கலங்க வைக்கும் -
காட்சியொன்றைக் கண்டான்!

தரும தேவதை
தானோர் -
எருது வடிவு
எடுத்து...

மூன்று கால்கள்
முடமாகிக் கிடக்கவும்; தன் -
ஒற்றைக் காலைத் - தரையில்
ஓங்கி ஊன்றி நடக்கவும்;

பக்கத்தில்
பூமாதேவி -
பசு வடிவம்
பெற்று...

கன்றிழந்த
கறவைபோல் கலங்கவும்;
கண்ணிமையில்
கண்ணீர் கசிய மலங்கவும்;

பரீட்சித்து
பார்த்தான்;
வியப்பில்
விழி மடல்கள் -
வெப்பமாகி
வேர்த்தான்!

அதே நேரத்தில்
அரச வேடத்தில் -
நீசன் ஒருவன்
நின்று கொண்டு...

காளையையும் பசுவையும்
கருணையின்றி பிரம்பினால்
அடிப்பதையும்; வலி
ஆற்றாது அவை துடிப்பதையும்;

காவலன்
கண்டான்;
காளையும் கறவையும்
காட்டிக் கொடுக்காமலே -

'கலி புருஷன்தான்' அந்தக்
கொடியவன் - என
ஒரு நொடியில்
ஓர்ந்து கொண்டான்!

பொறைமிக்க
பூமியும்;
தயை மிக்க
தருமமும்; ஒரு -
கயவன்
கைப்பிரம்பால் அடிபடுவதா?

அறமும்
அருளும் -
அறவே
அழிந்தாற்போல் பொடிபடுவதா?

பரீட்சித்துக்குப்
பொறுக்கவில்லை மனம்;
பிரவாகமாய்ப்
பெருக்கெடுத்தது சினம்;
உயர்த்தினான் -
வேயனைய தோளை;
உருவினான் -
உடைவாளை!

'அடேய்! நீ -
ஆரென்று அறிவேன்; என் -
அங்கை வாளால் - உன்னை
அரை நொடியில் அரிவேன்!

எஞ்ஞான்றும் - நான்
ஏந்திய செங்கோல்...

மெய்ம்மையை; அதை -
மேவும் மேலோரை ரட்சிப்பது;
பொய்ம்மையை; அதைப் -
பேணும் கீழோரை சிட்சிப்பது!

கலி புருஷனே! நீ -
கால்வைத்த பூமியில்...

மரம் முளைக்காது;
மறம் முளைக்கும்!
மறை விளங்காது;
குறை விளங்கும்!

நீ - இங்கு
நிலை பெற்றால்...

வாய்மை;
தூய்மை;

இவை
இரண்டும் -
செல்லும்
சேய்மை!

எனவே
என் -

நாட்டை விட்டு
நீங்குமாறு -
உனைக் கோருவேன்; ஒப்பாவிடில் -
உனைக் கோறுவேன்!'

பரீட்சித்து - தூக்கிப்
பிடித்தான் வாளை; கலிபுருஷன் -
பற்றினான்
பரீட்சித்தின் தாளை!

'மன்னா! பூ -
மண்டலம் முழுவதும் -
உன் நாடு; எனக்கிதில் -
உறைவதற்கு ஏது வீடு?

போக்கிடம் காட்டு;
போகிறேன்; உன் -
ஆணைக்கு அடங்கியவனாய்
ஆகிறேன்!'

இறைஞ்சினான் கலி;
இழந்து நின்றான் வலி!

பரீட்சித்து - கலி
புருஷனுக்கான -
போக்கிடங்கள் நான்கை
போதித்தான்; அவை
போதாது போதாது என்று - கலி
புருஷன் சாதித்தான்!



(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## தவசி மகன் - தந்த சாபம்!

'சூதர்
சபை; விலை -
மாதர்
மனை;

மொந்தைக்கள் - விற்கும்
சந்தை மடம்;
ஊன் - ஏற்ற
ஊண் - என்று
ஆன் ஆடு
அரியும் இடம்!

இந்த நான்கு இடங்களில் - நீ
இருக்கலாம்; இருந்து -
பழி பாவங்களைப்
பெருக்கலாம்!' என்று...

பரீட்சித்து சொல்லவே - அவை
போதாது என்றான் கலி; தனது -
ஆதிக்கம் குறைவதில் -
அவனுக்கு அவ்வளவு கிலி!

'அப்படியாயின் -
அஞ்சாம் இடமாக...

பொன்னாசை பிடித்தோர் -
புந்திகளில் போய் அமர்;
அங்கு நீ
அமர்ந்தால் -
அவர்களுக்குள்

6 கவிஞர் **வாலி**

அடுத்த கணம் வரும் அமர்!'

என்றான் வேந்து; கலி -
ஏகினான் வணக்கம் ஈந்து!



எருது வடிவு
எடுத்து நின்ற -

தரும தேவன்
திரும்பப் பெற்றான் -
முடமாகிப் போன
மூன்று பாதங்களையும்;
பூமா தேவியும்
பூரிப்பு எய்தி -
பூக்க வைத்தாள்
பன்னிரு மாதங்களையும்!

ஆனைக்கும் -
அடிசறுக்கும் என்பது போல்...

பரீட்சித்தும் - ஒரு
பிழை புரிந்தான்;
அவசரத்தால்
ஆன -
அப்பிழை குறித்து
அவனே கண்ணீர் சொரிந்தான்!

வசந்த ருதுவில் - ஒருநாள்
விடியற்காலையில்...

வேந்தன் பரீட்சித்து
வேட்டைக்குப் புறப்பட்டான் -
வில்லும்
வாளியுமாய்;
பரிவாரங்கள்
பின்தொடர -
போன
பாதையெல்லாம்...

தும்பும் -
தூளியுமாய்!

அது - ஓர்
அடர்த்தியான காடு;
காடு முழுக்கக்
காண விரும்பினால் -
காற்றுக்கே
கால் வலிக்கும்...

அது
அவ்வளவு நீடு!

காடாரம்பத்தில் உள்ள -
கழனிகள் கொல்லைகளில்...

கொள்ளு;
கோதுமைகளை;
கொடிய விலங்குகள் புகுந்து -
கொத்துக் கொத்தாய் மேய்ந்தன;

சினைப் பயிர்கள் - என்றிருந்த
தினைப் பயிர்கள் - காட்டு
எருமைகளின் கால்களால்
எற்றப்பட்டுக் காய்ந்தன!

மகாசூல் கண்ட
மற்ற தானிய வகையெலாம் -
மகசூல் காணாமலேயே
மடிந்தன;

பாகைகளும்
புடல்களும் -
பந்தல்களோடு பொலபொலவென
பொடிந்தன!

காய் வைத்த
கனி மரங்களில் - வேழங்கள்
வாய்வைத்தன; அவை -
செய் வைத்த
செழுங் கதிர்களில் -
கை வைத்தன!

ஆங்காங்கு குடியிருந்த
ஆதிவாசிகள்...

வெடிகள்
வெடித்தும்; தீப்
பந்தங்கள்
பிடித்தும்;



துடி -
தம்பட்டம் -
ஆகியவற்றை
அடித்தும்;

நள்ளிரவில் வந்து - இவ்வாறு
நாசப் படுத்தும்...

விலங்குகளை
விரட்ட முடியவில்லை;
மேலும் மேலும் கூடியது
மிருகங்களின் தொல்லை!



குடிமக்கள்
கொற்றவன் -
பரீட்சித்திடம்
பிரார்த்தித்துக் கொள்ள...

அதன் காரணமாகவே
அவன் காட்டுக்கு -

வில்லும் கையுமாய்
வேட்டையாடப் புகுந்தான்;
மக்கள்படும் துயரால் - தன்
மனத் துயர் மிகுந்தான்!

உச்சி வெயில் - தன்
உச்சியில் உட்காரும் வரை...

விலங்குகளை
விரட்டி விரட்டி
வேட்டை யாடிய
வேந்தன்...

காடு முழுக்கக்
கடுகத் திரிந்தான்;

பரிமேல் அழகனாய்ப்
பரிமேல் அமர்ந்து - அதைப்
பரிவாய் நடத்தாமல் - அப்
பரிவாய் நுரைதள்ள...

ஓட்டிச் செல்கையில்
ஓரிடத்தின் செல்வழி -
ஒழுங்காய்
ஓராது -

பாதை மாறித் - தன்
பரிவாரங்களைப் பிரிந்தான்!

கொளுத்தியது
கோடையின் உக்கிரம்;
கத்திரி என்றாலே - அது
கதிரவனின் வக்கிரம்!

நடுவானத்தில்
நின்றுகொண்டு - அவன்
நெருப்பைக் கொட்டினான்
நிலத்தில்;

காவலன் பரீட்சித்து - அந்த
காங்கை தாங்காமல்...

நனைக்க
நினைத்தான் - தன்
தணல் மேனியைத்
தண்ணிய சலத்தில்!

தாகத்தால் -
தொண்டை வறண்டு போனது;

அவனது
அவலநிலை -
பாலைவனத்துப்
பறவைபோல் ஆனது!

கண்ணுக்கெட்டிய தூரம் -
கானல் என்னும்...

பொய்ப்
பொய்கை;
படவில்லை
பார்வையில்
மருந்துக்குக்கூட - ஒரு
மெய்ப் பொய்கை!



நீர்நிலை தேடி -
நெடுந் தூரம்...

வேர்வும் சோர்வும்
வாட்டி யெடுக்க
ஊர்ந்தான் புரவிமேல்; சினம் -

உமிழ்ந்தான் இரவி மேல்!

'ஆ! சிரமம்!' என
அவனது -
ஆழ்மனம்
அங்கலாய்க்கையில் -

ஆசிரமம் ஒன்று
அவன் கண்ணில் பட்டது;
பட்ட மாத்திரத்திலேயே
பட்ட பாடு பாதி விட்டது!

ஆசிரமத்தின் -
ஆசார வாசலில்...

நெடிய
நிஷ்டையில் -
விழிகள் மூடி
வீற்றிருந்தார் -

தன்னந்
தனி - எனும்படி
மான்தோல் மீது - ஒரு
மாமுனி!

அந்த
அரிய
தவசியின்
திருநாமம் 'சமீகர்';
ஆங்கிரஸ கோத்திரத்தில்
அவதரித்த
அவர் - ஓர்
அபூர்வ சாத்வீகர்!

'முனிவர் என்றால் - எதற்கும்
முனிவர்!' எனும் -
முன்னுதாரணங்களிலிருந்து -
முற்றும் மாறுபட்டவர்;
மூன்று அவஸ்தைகளைத் தாண்டி -
மூகத்தில் ஆழ்ந்து - ஏக
மூலத்தை அடைய எண்ணும் - ஒரு
முமூட்சுவாக...

முன்னமேயே -

முதிர்ந்து விட்டவர்!

மோனத் தவத்தில் - அவர்
மூழ்கியிருக்கையில்...

விடாய்
விடாத -

பரீட்சித்து - அவர்
பக்கம் வந்து - அவரது
பாதங்களில் - தன்தலை
படும்படி வணங்கி...

'மகா முனிவரே!
மாசறு புனிதரே!

தமியேனுக்கு
தாளாத தாகம்; சிறிது
தண்ணீர் தந்தால் - அது
தயவினும் பெரும் தயவாகும்!

உலர்ந்தது நாக்கு;
உளறுகிறது வாக்கு;
நிற்குமோ? நீங்குமோ?
நானறியேன் உயிரின் போக்கு!'

என்று -
ஏகப் பணிவுடன் கேட்டான்;
ஒருமுறைக்கு மும்முறையாய் -
ஒருவாய் தண்ணீர் வேட்டான்;

பதில் வராததால் -
பரீட்சித்து...

பொறுமையிழந்து
பொங்கி யெழுந்து -
பக்கம் செத்துக்கிடந்த
பாம்பு ஒன்றை...

வில் நுனியால்
வாரியெடுத்து -
மாமுனி கழுத்தில்
மாலையாய்ப் போட்டான்!

'மன்னனுக்குரிய



மரியாதையைக் -
கொடுக்காதது கூடக்
குற்ற மல்ல;
தவித்த வாய்க்குத்
தண்ணீர் வழங்கக்கூட -
தயை இல்லாத - இத்
தவசி பற்றி என்ன சொல்ல!'

என்று -
எண்ணியபடியே...
பரீட்சித்து மன்னன்
புரவியேறிப் போனான்;
அதன் விளைவை
அறியாத அப்பாவி ஆனான்!

மகரிஷி சமீகருக்கு - ஒரு
மகன் உண்டு 'சிருங்கி' என்று;
தந்தை போல்
தனயனும் -
தவவலி பெற்றவன்
தன்னைத் தானே வென்று!

மன்னன் வந்து
மரித்த பாம்பை - அவன்
பிதாவின் கழுத்தில்
போட்டுவிட்டுப் போனதை...

சிலர் மூலம்
சிருங்கி அறிய -
ஆசிரமம் விரைந்து
அக்காட்சியைக் கண்டு -
ஆத்திரத்தில்
அவனது புருவங்கள் நெறிய -

'இன்னணம் என் தந்தையை
இழிவு படுத்திய -
அந்த
அரசன்...

இன்றிலிருந்து ஏழாம் நாள்
இறந்து போவான்;
'தட்சகன்' என்னும்
திருநாமம் ஏற்றிருக்கும் -
அரவரசு தீண்டி
அக்கணமே சாவான்!' என்று...

இட்டான் சாபம்; அப்பவும் -
இறங்கவில்லை அவன் கோபம்!

மகரிஷி சமீகர் -
மவுனத் தவம் கலைந்து -
கண்விழித்தார்; மகன் செய்த
காரியத்தைப் பழித்தார்!

'பரீட்சித்து -
பகவானின் அம்சம்; அவனது -
பிறப்பால்தான் பிழைத்தது
பாண்டவர் வம்சம்!

அவன்
ஆட்சி -
அறவழி சென்றது;
அது
அதர்மத்தை -
அறவே வென்றது!

அவசரப்பட்டு - நீ
அளித்த சாபத்தால் -
அவனது
ஆவி நீங்கும்; அதன்பின் -
கலியின்
கைகள் ஓங்கும்!'

இவ்வாறு - கனத்த
இதயமொடு இயம்பிவிட்டு...

தன்மகன் இழைத்த
தவறுக்கு - தான்
மன்னிப்புக் கேட்பதாய்
மன்னனுக்கு -

ஆள்மூலம் -
அனுப்பினார் சேதி;
சமீகர் எனப்படும் -
சதுர் வேதி!



(தொடரும்)

ராஜாதிராஜன் ஆயுளை
ரிஷிகுமாரன் அறுதியிட்டான்!

அரசனுக்கு - இவ்
அவனியில் இனி...

வாழுநாள்கள் -
ஏழுநாள்கள்;
ஏழுநாள்களும் -
எமபயம் சூழுநாள்கள்!

சிந்தித்தான்;
சிந்தித்தான்;
பரீட்சித்து -
பகலிரவாய்ச் சிந்தித்தான்;

தன்னை - சினத்தில்
தள்ளிய -
தன் மனத்தைத் -
தாறுமாறாய் நிந்தித்தான்;

மெல்ல
மெல்ல
சிந்தை தெளிந்து - தனக்கு
சாபம் கொடுத்த -
சமீகரின் புத்திரன் -
சிருங்கியை வந்தித்தான்!

'முனிகுமாரன் காட்டினானே -
முனிவு; அஃது -
முனிவு அல்ல;
முழுக்க முழுக்க - அவன்
காட்டிய -
கனிவு!'

என -
எண்ணினான்; அவனைப் -
பரீட்சித்து - துதி
பண்ணினான்!

ஆம்;
அந்த -
முனிகுமாரன்தானே -
முன்கூட்டியே...

மன்னவன் - மரணத் தேதி
சொன்னவன்! அன்னணம் -
சொல்ல வல்லவனா
சின்னவன்?

உலகில் - ஓர்
உயிரின்...

மரணத் தேதியை
முன்னதாகவே
அறிந்தவன் ஒருவன்தான்;
அவன் பேர் தென்னவன்;
தான்
தந்த -

சாபம் மூலம் - பரீட்சித்தின்
சாவு நாளைப் பளிச்சென்று -
சொன்னவன் சின்னவன் அல்ல;
தென்னவன் அன்னவன்!

பரீட்சித்து - சிருங்கியைப்
போற்றினான்; சம்சார -
விலங்குகளிலிருந்து
விடுபடவும் - உலகாயத
வாழ்க்கையில் - ஒரு
விரக்தி வந்து - உளத்தில்

**'' 'இனிமே என்னை கேடின்னு சொல்லாதீங்க... நானும் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவன்தான்'னு கபாலி வீறாப்பா பேசிட்டுப் போறானே... என்னாச்சு அவனுக்கு?''**

**''எல்லாம் கௌரவ ரேஷன்கார்டு பண்ற வேலை!''**

- எஸ்.எஸ். பூங்கதிர்



வீடுபேறு பெறும் ஞானம்
வேர் விடவும் -

தனக்கு -
தயை செய்த -
சத்குரு என்று - அவனைச்
சாற்றினான்!

உயிர்த்து
உலவ - இனி
எஞ்சி யிருப்பது
ஏழு நாள்களே; இந்த -
ஏழு நாள்களும்
எஞ்ஞான்றும் -
எண்ணியிருத்தல் வேண்டும்
எம்பிரான் கண்ணன் தாள்களே!

'பிராயோபவேசம்' எனும் -
பட்டினியிலிருந்து மரித்தலை...

ஏற்கவேண்டும்; விரதமாய்
நோற்க வேண்டும்;
மூவாசைகளும் -
மும்மலமும் -
தன்னுடன் மோதி மோதித்
தோற்க வேண்டும்!

பாம்பு கடித்துப் -
பிராணன் போகுமுன்னே...

பாம்பின் மேல் -
படுத்துத் துயின்றவன்;
பாம்பின் மேல் -
பரதம் பயின்றவன்;
பாம்பின் பகை மேல் -
பறந்து வந்து...

வேழத்தை
வவ்வி நின்ற -
விடங்கரின்
வாயை இடந்தவன்;
பச்சைப்
பிள்ளையாய் இருக்கையிலேயே...

பெய்த
பேய் மழையில்
பாம்பு குடை பிடிக்க - யமுனைப்
பெருவெள்ளம் கடந்தவன்;

கண்ணன்; காயாம்பூ -
வண்ணன்; அவனது -
கமலத் திருவடி -
கருத்தில் தியானித்தபடி -
கங்கா நதிக்
கரையில்...

வடக்கிருந்து
உயிர் விட வேண்டும்;
விட்டால்
வீடு வாய்க்கும் -
உரகம் தீண்டி -
உடலம் மாண்டும்!

இப்படியோர் -
இறுதி முடிவு எடுத்தான் -
பரீட்சித்து மகராஜன்;
பகலவன் நிகர் மகாதேஜன்!

உடனே - சகல
உடைமைகளையும் உதறி -



''வர வர தியேட்டர்ல போய் படமே பாக்க முடியல...''

''ஏம் பாட்டி அப்படிச் சொல்றே?..''

''எல்லாத்தையும்தான் என் பையனே சி.டி. வாங்கி வந்து போட்டுடறானே!..''

- ராஜ்

தனக்குத்
தலைமகனாய்
ஜனித்த
ஜனமேஜயனுக்கு -

அத்தினபுரத்து
அரசாய் -

மறையவரைக் கொண்டு
மகுடாபிஷேகம் செய்தான்;
மகன் தலைமேல்
மந்திராட்சதை பெய்தான்!

மறுநாளே -
மகாநதிக் கரைக்குச் சென்று...
வடக்கு நோக்கி
வீற்றிருந்து -

'பிராயோபவேசம்' எனும் -
பெரும் விரதம் நோற்கலானான்;
நாவிலும்
நெஞ்சிலும் -
நாராயணனின்
நாமத்தை ஏற்கலானான்!

நாடாளும் அரசு
நதிக்கரையில் அமர்ந்து -
உயிர்விட
உத்தேசித் திருப்பதை -

வெங்கனல் வளர்த்து
வேள்வி ஓம்பும் -
பூசுரரும்; முனி
புங்கவரும் ஓர்ந்தனர்;

அக்கணமே
அவ்
அறவோர்
அங்கு வந்து சேர்ந்தனர்!

எதிர்பாராது - அங்கு
எழுந்தருளினார் -
சுத்த சைதன்னியமான
சுகப்பிரமம்;

செய்ய - இரு
சேவடி முளைத்து - எங்கும்
சஞ்சரிக்கும்
சனாதன தருமம்!

பரீட்சித்து எழுந்து - அவர்
பாதங்களில் விழுந்து...

வழியும்
விழிநீரால் -
அடிகள்
அடிகளைக் கழுவினான்;

கழுவிக்
கழுவி - அக்
காலடிகளே - தனக்குக்
களைகண் என்று தழுவினான்!



அவன் அன்பை
அவர் அங்கீகரித்தார்;
அதன்பின்
அவனை
வாழ்த்தி - சில
வார்த்தைகள் விரித்தார்!

'ஏரார் பாண்டவர் குலத்து -
எச்சமே!



"அகழி முதலைகளுக்கு அதிகமாகத் தீனி போட்டது தப்பாகிவிட்டது."

"ஏன் மந்திரியாரே?"

"அகழியில் விழும் எதிரிநாட்டு வீரர்களைக் கடிக்காமல் அவர்களுடன் ஓடிப்பிடித்து விளையாடுவதைப் பாருங்கள்!"

- வி. சகிதா முருகன்

உயரிய பண்புகளின் -
உச்சமே!

பாலில் படுத்திருப்பவன் - நீ
சூலில் படுத்திருக்கும் போதே -
காத்தான் -
கருகாமல் உன்னை; எனவே -
இறைவன் உனக்கு -
இரண்டாம் அன்னை!

நமன் வரும்
நாள் குறிக்கப் பெற்றும் - அதை
எதிர்கொள்ள
எத்துணை பேருக்கு -

உன்போல்
உரம் வரும்? இந்த
உத்தம குணம்
உனக்கு உயர்வு தரும்!'

இவ்வாறு -
இனிய சொற்களை...

முகம்
மலர்ந்து -
சுகர்
சொன்னதும் -

பரீட்சித்து
பேசினான்;
வார்த்தையை பவ்வியமாய்
வீசினான்!

'மகான்களுக் கெல்லாம்
மகானாய் விளங்கும் -
தங்கள்

தரிசனம் -
பெற்றது என்
பாக்கியம்;
வேதம் நேர் - தங்கள்
வாக்கியம்!

அய்யனே!
அடியேனுக்கு ஓர் அய்யம்;
அதைத் தெளிவித்தால் - என்
ஆன்மா உய்யும்!

இறக்கும் தறுவாயில் -
இருக்கும் தனியொருவன்...

எதைச் செய்ய வேண்டும்?
எதைச் சொல்ல வேண்டும்?
எதை எண்ண வேண்டும்?
எதை ஏற்க வேண்டும்?

என்பன வெல்லாம் -
எனக்கு...

தாங்கள்
தயை கூர்ந்து
உரைக்க வேண்டும்; எனக்கது -
உறைக்க வேண்டும்!'

பரீட்சித்து -
பிரார்த்திக்க...

சுகர்
சொல்ல லானார் -
உயிர்
உய்யும் வழி;
கொடிய வினைகளைக்
கொய்யும் வழி!

"கோயில்கள்ல கிடா
வெட்டக்கூடாதுனு பாதுகாப்புப்
போட்டிருந்தும் எப்படிக் கிடா
வெட்டுனீங்க?"

"ஹி..ஹி.. போலீஸுக்கு
'சம்திங்' வெட்டிட்டுதான்!"

- சின்னமனூர்
எஸ். ராஜமழை



'மன்னா! ஒருவன் -
மரணிக்கும் தறுவாயில்...

செய்ய வேண்டியது -
சரணாகதி;
சொல்ல வேண்டியது -
சுயம்புவின் துதி;

எண்ண வேண்டியது -
ஏக தத்துவம்;
ஏற்க வேண்டியது -
ஏரார்ந்த சத்துவம்!

ஆயினும் ஒன்று; இவற்றை -
ஆதியிலேயே அறிந்தால் நன்று!

ஓதக்கடல் சூழ் உலகு வாழ் -
ஒருவனுக்கு...

சொந்தம் வரல் தெரியும்; பாச -
பந்தம் வரல் தெரியும்; பழைய -
தொந்தம் வரல் தெரியும்; ஆனால் -
அந்தம் வரல் தெரியுமா? அது -

தக்கணம் வரலாம்;
தள்ளியும் வரலாம்;
எக்கணம் வரும் என -
எவர்க்கேனும் புரியுமா?

எனவே -
எல்லாம் வல்லவனை...

வாயுள்ள போதே
வாழ்த்து;
தலையுள்ள போதே
தாழ்த்து;

கையுள்ள போதே
கூப்பு;
பொய்யுள்ள புவியில் - அவன்
புகலல்லால் வேறேது காப்பு?

எவ்வுயிரும் -
எஞ்ஞான்றும்...

ஏமம்;
காமம்;
என அலைந்து - பின்
எட்டுகிறது ஈமம்;

எடுத்த பிறவியினால் - அது
எய்திடுமா சேமம்? அஃதை -
எய்திட -
ஏயதானது நாராயணன் நாமம்!

புண்ணியம் மிக்க -
பாகவத புராணத்தை...

எனக்கு உரைத்தார்
என் தந்தை; அதை நான் -
உனக்கு உரைக்கிறேன்;
உய்யும் உன் சிந்தை!'

சுகப்பிரமம் -
சொல்ல...
எல்லியும் பகலுமாய்
ஏழுநாள்கள் -

பாகவதம் கேட்டான்
பரீட்சித்து;
ஓடும் எண்ணங்களை ஓடவிடாது -
ஒருசேரக் குவித்து!

**(தொடரும்)**

**"என் தோள்கள் தினவெடுக்கின்றன தளபதியாரே!"**

**"போருக்கு ஏற்பாடு செய்யட்டுமா மன்னா?"**

**"வேண்டாம்! மசாஜ் செய்ய ஏற்பாடு செய்யுங்கள்!"**

- எஸ். தமிழ்மணி



அவதாரங்கள்.

'பார் புகழ் -
பரீட்சித்து மன்னா!
இறப்பு பிறப்பு -
இரண்டுமே இன்னா!

மன்னா! இன்று
மன்னுவதெல்லாம் நாளை மன்னா;
மன்னுவதை விடுத்து - மேலோருளம்
மன்னாதவற்றையெலாம் துன்னா!

விளைநெல்
விதைநெல் லாவதும்;
விதை நெல்
விளை நெல் லாவதும்;

என்னணமோ -
அன்னணமே -
இறப்பும் பிறப்பும்
இங்கொரு சுழற்சி;

இவற்றால் பெறுவது
இறுதியில் அழற்சி!

பிறந்ததன் அடையாளம் -
பன்னீர்க்குடம் உடைவது; உயிர் -
துறந்ததன் அடையாளம் -
தண்ணீர்க்குடம் உடைவது;

# கிருஷ்ண விஜயம்

அடையாளங்கள்
அறவே -
அற்றுப் போகும் நிலையை
ஆன்மா எப்போது அடைவது?

இறப்பு பிறப்பு
இல்லாதவனை நினை; அவன் -
இறப்பு பிறப்பு
இல்லாமல் செய்வான் உனை!

தினம் -
தினம்...

திருமாலின்
திருப்புகழை - உன்
காதுக்குக்
கொடு;
திருமாலின்
திருப்பெயரை - உன்

நாவினில்
நடு;

திருமாலின்
திருவடியை - உன்
இதயத்தில்
இடு;

திருமாலின்
திருவுளப்படி - உன்
வாழ்வு நடக்கட்டும்;
விடு!

அதன்பின்
அவன் பாடு; உன்னைச் -
சுமந்து கொண்டு போய் - அவனே
சேர்ப்பான் வீடு!

வெவ் வினையால் வாடாதே
விழிநீர் சிந்தி;
பக்தியும் -
பிரபத்தியும் செய்து -
பகவானின்
பாத பங்கயங்களை...



ஒரு நாளைக்கு -
ஒரு பொழுதேனும் சிந்தி!

'கட்வாங்கன்' என்றொரு
காவலன் இருந்தான் அன்று;
அமரர்கள் மூலம்
அறிந்தான் - அவனின்னும்
ஒரு முகூர்த்த காலம்தான்
உயிரோடு இருப்பான் என்று!

அவன் -
அடுத்த கணமே...

நாராயணா நாராயணா என - விஷ்ணு
நாமத்தைக் கூறினான்;
வினைகள் ஒழிந்து - விஷ்ணுவாழ்
வைகுந்தம் ஏறினான்!

அத்தினபுரத்து அரசே! - நீ
அவன் போல் அல்ல;
இன்னும்
இருக்கின்றன -
ஏழு நாள்கள்
எமன் உனை எடுத்துச் செல்ல!

அதற்குள் - பகவான்
அவதாரங்கள் பற்றியும்;
அவனது
அரிய -

கல்யாண
குண விசேஷங்கள் பற்றியும்;

நான்
நவில நவில -
நீ
நீங்காத பக்தியில் திளை;
அறுத்தெறி -
ஆகாத ஆசாபாசத் தளை!

புருஷோத்தமனிடத்தில்
புகு சரணம்;
அமைதி பெறும் - உனது
அந்தக்கரணம்; அதன்பின் -

மறலியால் வரும்
மரணம் உனக்குத் திரணம்!'

என்று -
எடுத்துரைத்து விட்டு...

வேந்தனுக்கு
விஷ்ணுவின் அவதாரங்களை -
சொல்ல லானார்
சுகர்; வேத -
முதல்வன் அம்சமான - கிள்ளை
முகர்!

நூற்கடல்
நுவலவொணாத நுண்பொருளாய்ப் -
பாற்கடல்
படுத்திருக்கும் நாராயணன்...

உப்புக் கடலுள்
உலகை ஒளித்து வைத்த -
தப்புக் கடலாம்
தங்கக் கண்ணனை...

வென்றிகொண்டு
வையம் மீட்க - வடிவம்
பன்றிகொண்டு
படிமிசை போந்ததையும்;

பிரளயப் -
பெருவெள்ளத்தில்...

அயக்கிரீவன் எனும்
அசுரன் -
அருமறைகளை எடுத்து
ஆழியில் ஆழ்த்த -

அவனை -
அதம் செய்து வீழ்த்த...

உச்சம் என
உக்கிரம் கொண்டு - ஒரு
மச்சம் என
பாக்கடல் புகுந்ததையும்;

வான்வர்



வெருவும் -
தானவர்
தலைவன் -
மாவலி மிக்க - மன்னன்
மாவலி மதிக்கத் தக்க -

குறளனாய்ச் சென்று - தாழங்
குடையேந்தி நின்று...

மூவடி -
மண்கேட்டுத் - தன்
பூவடி -
புவிகடந்து நீட்டியதையும்;
தானவர்
தலைவனை - அவன்
தலைமேல் தாள்வைத்துத்
தரையின் கீழ் ஓட்டியதையும்;

மந்தர மலையை
மத்தாய் இருத்தி; அதில்
வாசுகிப் பாம்பை
வடமாய்ப் பொருத்தி;

அமுதம் -
அள்ள -
அசுரரும் அமரரும் - பால்
ஆழியைக் கடைகையில்...

குன்று -
குடை சாயாது தாங்க -
அன்று -
ஆமையாய் அருள் செய்ததையும்;

'எங்கிருக்கிறான் ஹரி?' -
என வினவிய கனகன்முன் -
'இங்கிருக்கிறேன்' என -
இரு கூறாய்த் தூண் பிளந்து...

துங்கமூர்த்தியாய் - நர
சிங்க மூர்த்தியாய் - வந்து
சீறியதையும்; கனகன் குடல் -
கீறியதையும்;

பிதாவின் உயிரை - ஒரு

புரவலன் கொய்ய;
பழிக்குப்
பழியாய் -
புரவலர் குலமே
புவிமிசை இல்லாமல் செய்ய;

கோடரி தாங்கி - பல
கொற்றவர் தலை வாங்கி...

தந்தையின்
தர்ப்பணத்தை -
தண்ணீரில் செய்யாது
புண்ணீரில் செய்த -

புத்திரனாய்ப்
பிறந்ததையும்;
'பரசுராமன்' எனப்
பிறங்கியதையும்;



வில்லும் ஒன்று -
இல்லும் ஒன்று -
சொல்லும் ஒன்று - எனச்
சொல்லும்படி நின்று...

வானவர் குலம்
வாழ -
தானவர் குலத்துத்
தலைவன் வீழ -

பெருவில் வளைத்துப்
பகழி தொடுத்ததையும்; கோசலை -
பிள்ளையாய்ப் படிமிசை
பிறவி எடுத்ததையும்;

தேவகியிடம்
தோன்றி -
உரோகிணியிடம்
உதிக்க -



கருப்பை மாறி
கருப்பை வந்து -
கண்ணனின் அண்ணனாய்க்
கண் மலர்ந்து...

நிலப்பை தோண்டி
நெல் எடுக்கும் -
கலப்பை தன்னைக்
கை ஆயுதமாய் ஏந்தும் -

பலராமன் - எனும்
பெயர் தரித்ததையும்;
அம்புவியில் -
அன்னணம் அவதரித்ததையும்;

பகவான் சுகர்
பரீட்சித்துக்கு -
விளக்கினார்; வினை
விலக்கினார்!

அவதாரங்கள் எட்டையும் -
அவர் எடுத்துரைத்த பின்...

ஒன்பதாம் அவதாரத்தை
ஓதப் புகுந்தார்; தன்
உள்ளத்தில் - அதை
உன்னி உணர்ச்சி மிகுந்தார்!

காரணம் - அது
கண்ணன் அவதாரம்;
வானமழை -
வண்ணன் அவதாரம்!

வேத -
வியாசர் அருளிய...

பழமறையின் பிழிவான
பாகவதம் -
ஆணிப்பொன்னால் ஆன - ஓர்
ஆரம் என்றால்...

அந்த
ஆரத்தில் -
நடு
நாயகமாய்...

கோத்துக்கிடக்கும் - ஒற்றைக்
கோமேதகப் பதக்கம் -
கண்ணன்

கதை; நம்மீது -
வாது தொடுத்து
வருத்தும் வினையெலாம் ஓயும் -
காது கொடுத்துக்
கேட்டால் அதை!



பாகவதம் -
பேசும்...

அரியின்
அவதாரங்கள் -
அனைத்தும்
அருமையிலும் அருமை எனினும்...

இராமனும் கண்ணனும் - தன்
இரு கண் - என
இசைத்து இன்புறுகிறது -
இந்திய மண்!



தான் -
தெய்வம் - என்பதைத்
தானே அறியாதவன்
தசரதன் பிள்ளை;

தான் -
தெய்வம் - என்பதைத்
தரையிறங்குகையிலேயே
தெரிவித்தவன் தேவகி பிள்ளை!

உடன் பழகிய -
உற்றாரும் ஊராரும்...

யாண்டும் தம்மொடு பழகும்
யாதவன் - தருமம் தழைக்க
வேண்டும் என்று வினை புரிய
வையம் வந்த மாதவன் -

என -
எண்ண வொண்ணாது...



அவர் தம்
அறிவை -
அவ்வப் போது
அவ்வப் போது -

மறைத்து நின்றது
மாயை;
அந்த
அரி - தான்
ஆடிய சதுரங்கத்தில்
அப்படி நகர்த்தினான் காயை!

துவாபரயுகத்தின் முடிவில் -
துவண்டு -
தொய்ந்து கிடந்த
தொன்மை அறம்...

கீழ்மைகளைக்
கீழே கிடத்தி -
கண்டது ஜயம்; காரணம் -
கிருஷ்ண விஜயம்!

பரீட்சித்து மன்னன் - சுகப்
பிரமத்திடம்...

'விஷ்ணு - யதுகுலத்தில்
வாசுதேவனாய் அவதரித்து...

செய்த
சாகசங்களையும்;
சந்தித்த
சங்கடங்களையும்;

ஆதியோடு
அந்தமாய் -
அடியேனுக்குச் சொல்லி
அருள வேண்டும்!' என வேண்ட...

கீர்த்திமிகு
கிருஷ்ணாவதாரத்தை -
விரிவாக
உரைக்கலானார் -

ஒழுக்கத்தில்
ஒரு -
நிகர் இல்லாத
சுகர்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்



## புவிமகள் புலம்பல்.

**கா**லம் என்னும் -
கணக்குப் பிள்ளை...

மூன்றாம் யுகத்தை
முடித்து - அதற்கொரு
முற்றுப்புள்ளி வைக்கும்
முனைப்பில்...

எழுதுகோலை - எடுத்து
எழுதப் புகுந்த காலை...

நிலமகள் - தன்
நீள்விழி மடலில் -
நித்திலம் போல் -
நீர்துளும்பப் புலம்பினாள்;
ஆற்றாது
அழுத கண்ணீரால் -
அவளை
அவளே அலம்பினாள்!

அகழ்வாரைக் கூட - அவள்
ஆதரிப்பாள்;
பொறை எனும் சொல்லுக்குப் -
பொருள் தானென - அந்த
மூதாய் -

9 கவிஞர் **வாலி**

மூதரிப்பாள்!

தோண்டுவார் தன்னிடம் - என்ன
வேண்டுவார் என்றறிந்து...

உதவுவாள்
உலோகம்; அத்தகு -
உதார குணமுடைய - அவள் பேரே
உலோகம்!

அன்னணம் -
அலகிலாத -

தண்ணளி மிக்க
தரைமாது -
கண்ணநீர் மின்னக்
காரணம் யாது?

மானத்தில் -
மண்டையிடிக்க நிற்கும்...
மாமேரு அனைய
மலைகளை - அவளால்
சுமக்க முடிந்தது
சுளுவாக; ஆனால் -
பாவப்பட்ட ஆறறிவுகள்தாம் -
பட்டன அவளுக்குப்
பனிவரைகளை விடவும் - பெரும்
பளுவாக!

அந்த -
அளவு...

ஆறறிவு
அஞ்சும் நாலும் மூன்றும் ஆகி -
தேறறிவு
தேய்ந்து போய் தறிகெட்டு ஏகி -

மானுடம் தனது மாண்பெலாம் -
மக்கிக் கிடந்தது;
நறவம் அனைய
நலங்களை அணுகாது -
நரகல் அனைய
நசிவுகளை அது சுணங்கனென...

நாளும் -
நக்கிக் கிடந்தது!
பாவம் செய்ய - மனிதன்
பயப்படவில்லை;
வாழ்வாங்கு
வாழ -
வகுத்த நெறிகள் பால் - அவன்
வயப்படவில்லை!

ஒவ்வொரு மனிதன் உள்ளமும் -
ஒன்பது கோணல்; அது கண்டு -
ஓரிரு கோணல்கள் குறைவான -
ஒட்டைக்கு வந்தது நாணல்!'

எனும்படி -
எல்லா மனங்களும்...

அதர்மச் சகதியில் -
அமிழ்ந்தன;
செவ்வாறு தவிர்த்து -
செய்ய மனம் திரிந்து -
அவ்வாறு மன்பதை -
ஆனது என்பதை...

அறிந்து
அதன்மீது -
காற்றும் ககனமும்
காறி உமிழ்ந்தன!

வாழ்வுக்காகப் பொருள் - எனில்
வாழ்வு பொருளுற்ற தாகும்;
வாழ்வு பொருளுக்காக - எனில்
வாழ்வு பொருளற்றதாகும்!

ஆன்றோரின் - இவ்
அறிவுரையை...

எந்தக் காதும்
ஏற்கவில்லை;
எவரும்
ஏயதான வழியில் - ஒரு
நோன்புபோல் - வாழ்வை
நோற்கவில்லை!

கைப்பொருள்;
பைப்பொருள்; ஆகியவை -

பொய்ப்பொருள்; அவை -
மெய்ப்பொருள் அல்ல...

என -
எண்ணுவா ரில்லை;
வேர்வையை
விதைத்துப்
பொருள்
பண்ணுவா ரில்லை!
வேதம் ஓதிய வாய்கள் -
பேதம் ஓதின;
ஓமம் வளர்த்த கைகள் -
காமம் வளர்த்தன;
மந்திரச் சொற்கள் -
தந்திரச் சொற்கள் ஆயின;
மறையோர் குலங்கள் - மாண்பில்
குறையோர் குலங்களாகிப் போயின!

மூதுரையின்
மூச்சு -
'இப்பவோ? எப்பவோ?' எனும்படி -
இழுத்துக் கிடந்தது; அதன் -
விலா எலும்பின் மேல் -
வாத்சாயனம் நடந்தது!

அருள்;
அன்பு;
ஈரம்;
ஈகை;

ஆகிய சொற்களை மட்டும்
அகர முதலிகளிலிருந்து -
அந்துப் பூச்சிகள்
ஆகாரமா யுண்டன;

ஆதலால் -
அவ் அகராதிகள்...

கொலை;
களவு;
வஞ்சகம்;
வன்மம்;



ஆகிய சொற்களுக்கு மட்டுமே -
அர்த்தங்களை விண்டன!

பாழ்பட்ட மானுடத்தின் -
பாரம் தாங்க மாட்டாது...

மண்
மாதா -
எய்த்துப் போனாள்;
என்பும் தோலுமாய் ஆனாள்!

இனியும் -
இஃதைப் -
பொறுப்பதற்கிலை - எனப்
பொறையிழந்த பூமிப்பிராட்டி...

வண்ணப் பசுவென
வடிவம் எடுத்தாள்;
சத்தியலோகம் சென்று -
சரஸ்வதி மணாளனின்
சபையில் நின்று -
சரணமெனக் குரல் கொடுத்தாள்!

'முத்தொழிலில்
முதல் தொழிலை -
முனைந்து ஆற்றும்
முதல்வா!

அமுத -
அலையெறியும்...

அப்புள் கட்செவிமேல்
அறிதுயில் புரிவோனின் -
தொப்புள் கமலத்தில்
தோன்றிய புதல்வா!
நாமகள் கேள்வா! என் -
நலிவுகள் கேள்! வா!'

இன்னணம் - பூதேவி
இறைஞ்சியதும்...

நான்முகன்
நேர்வந்து நின்றான்;

'நிலமடந்தையே!
நேர்ந்தது என்ன?' என்றான்!

'பிரமனே!
பெரிது என் துயரம்!

மக்களின் - பாவ
மூட்டைகளை...

ஒன்றின்மேல்
ஒன்றாய் -
அடுக்கி வைத்தால் - அம்மவோ!
அது இமயத்திலும் உயரம்!

அசுரர்கள் -
அரசர்கள் என ஆகி...

ஆற்றும் -
அநியாயங்களையும்;
அட்டூழியங்களையும்;
அக்கிரமங்களையும்;

என்னென்று - நான்
எடுத்துச் சொல்ல? நான் -
ஆயிரம் நாவுடைய
ஆதிசேஷன் அல்ல!

அயனே!
அய்யனே!



என்னால் - தாங்க
ஏலாது - தரைமிசை
குணக்கேடர்களால்
குவியும் பாவங்களை;

கங்கையைக் -
காவிரியைத் -
தாங்கிய மடி தாங்கவொண்ணாது -
தூர்வாராக் கூவங்களை!

நாளுக்கு நாள் -
நைகிறேன்;
தொன்மை வலியிழந்து -
தொய்கிறேன்;
பெருமழைபோல் - விழிநீர்
பெய்கிறேன்;
விரக்தி மேவி - என்னை நானே
வைகிறேன்!

என்னைக் காக்க வேண்டும்;
என் சுமையை நீக்க வேண்டும்;
இடர் போக்க வேண்டும்; என்பால் -
இரக்கம் பூக்க வேண்டும்!'

புவிமகள் -
புகார் கேட்டு...

அரவிந்தன் - சற்றே
அமைதி அற்றான்;
பின்பு -
பேச லுற்றான்!

'பூமா தேவியே! ஒரு -
பொருளில்லை என்னிடம் கூவியே!

படைப்பது மட்டுமே - என்
பாடு;

காப்பவன் -
கரிய மால்;
அமுதக் கடல்தான்
அவன் வைகும் வீடு!

நானும் -
நீயும்...

தக்கணமே -
திருப்பாற்கடல் போவோம்;
அவனிடம் -
அடைக்கலம் ஆவோம்!

விடுவான் அறிதுயில்;
விழிப்பான்;
அருச்சிப்பார்
அவலங்களை -
அந்த
ஆராவமுதன் அழிப்பான்!'

பிரமன் -
புவிமடந்தையையும் -
உடன் அழைத்துக் கொண்டு
உரக சயனனைப் -

70

*19.10.03 இதழுடன் இணைப்பு*

பார்க்கப்
புறப்படுகையில்...

தேவரும்
தொடர்ந்தனர்;
ஆயிரக்கணக்கில்
அடர்ந்தனர்!

கண்ணுதற் கடவுளும்
கூடச் சென்றான்;

நீரும் -
நிலாவும் -
நச்சரவும் -
நீள்சடையில் நின்று...

அழகுற -
ஆடச் சென்றான்!

அனைவரும் - பால்
ஆழியை அடைந்து...

புகழ்சால்
'புருஷ சூக்தம்' எனும் -
புண்ணிய மந்திரத்தால்
போற்றினர்...

நாரணனை; பரி -
பூரணனை;
ஆரணனை; ஆதி -
காரணனை;

சிரங்கள் குனித்து;
கரங்கள் குவித்து!



அவ்வமயம் - ஓர்
அசரீரி எழுந்தது;
அது
அருளிய தகவல் -
சதுர்முகன்
செவியில் மட்டும் விழுந்தது!

தான் பெற்ற
தகவலை - உடனே
தேவர்களுக்குத்
தெரிவித்தான்...



விரிஞ்சன் - தனது
விழிகள் பனிக்க;
வார்த்தைக்கு
வார்த்தை -
நாராயணன் பால்
நன்றி தொனிக்க!

'அன்பார்ந்த
அமரர்களே!
அச்சுதன் - முனமே
அறிந்து வைத்திருக்கிறான்...

குறிகெட்ட மானிடரின் - பாவக்
குவிப்பை - இனியும்
தாங்க வொண்ணாத்
தரைமகளின் தவிப்பை!

உலகு -
உய்ய;
அறப்பயிர் தழைக்க -
அருள் மழை பெய்ய;
நெறிகளை -
நேர் செய்ய;
கொடியவர் இழைக்கும் -
கோதுகளைக் கொய்ய;

திருமால்
திருவுளம் கொண்டிருக்கிறான் -
யதுகுலத்தில் - ஓர்
யாதவனாய்த் தோன்ற; தோன்றி -
பண்புகளின்
பதாகையைப் படிமிசை ஊன்ற!'

என - பிரமன்
எடுத்துரைத்ததும்...

பூமி - திரும்பினாள்
பூமி!

**(தொடரும்)**



10 கவிஞர் **வாலி**

**வடமதுரை**
**வேந்து.**

**பா**வக்கடல் - எனப்
பாழ்பட்டு - துர்மணம் வீசும்
கூவக்கடல் - எனக்
கூறுமாறு குவலயம் கெட்டு -

மாபாரமாம் -
மானுடம் என்னும்...

ஜீவக்கடல் - தனை
ஜீரணிக்க ஏலாது - பிரமனொடு
தேவக்கடல் - பக்க
துணையாய்ப் பின்னோடு வர -

பூமிப் -
பிராட்டி...

சீதக்கடல் - தனில்
சயனித்துக் கிடக்கின்ற
வேதக்கடல் - தனை
வேண்டிப் பணிந்தவுடன்...

பரந்தாமன் தீர்மானித்தான் -
பால் பரவைத் -

தரங்கம் விட்டு - புவி
அரங்கம் இறங்க;
அடுத்து - ஓர்

# கிருஷ்ண



அவதாரமாய்ப் பிறங்க!

இந்த முறை - தரை
இறங்கு முன் - அவன்
இரண்டு விஷயங்களை
இறுதி செய்தான்;

அதை ஒட்டி -
அவன் - ஒரு சில
நினைவாடைகளை - தன்
நெஞ்சத் தறியினில் நெய்தான்!

முதலில் -
முழுநிலா வம்சத்தில் வந்த -
மன்னன் யயாதியின்

# விஜயம்

மகன் யதுவை நினைத்தான்;

அந்த மகன் -
அற்றை நாளில் - தன்

அத்தன் வேண்டுகோளை
அர்த்தத்தோடு நிராகரித்த...

தியாகத்தை உன்ன - விழிகள்
தீர்த்தம் உகுக்க - அதனால்
திருமால் தன் - நெடிய
திருமேனியை நனைத்தான்!

மன்னன் யயாதியின் -
மகன்கள்...



யது;
துர்வசு;
திருஹ்யு;
அனு;
பூரு;

என -
ஏரார்ந்த ஐவர்;
ஐவரும் - தன்
ஐயன் சொல்லை -
தெய்வ வாக்காயெண்ணித்
துதி செய்வர்!

சுக்கிராச்சாரியாரின் -
சாபத்தால்...

கிழப் பருவமும்
காச நோயும் -
அரசன் யயாதியை
அண்டின;
அவனது
ஆக்கையின் -
உதிரமும்
உணர்வுகளும் சுண்டின!

சாபம் கொடுத்த -
சுக்கிராச்சாரியாரே...

யயாதி -
யாருக்கு வேண்டுமானாலும் - தன்
கிழத் தன்மையைக்

கொடுத்து விட்டு -

அவரது இளமையை
அவன் அடையலாம் என்று - ஓர்
அபூர்வ சக்தியை
அவனுக்கு அருளினார் அன்று!

மூவாசையை -
முனையளவும் விடாத -
மன்னன் யயாதி - தனது
மகன்களைப் பார்த்து...

'வையக இன்பம் - என்னை
விடவில்லை இன்னும்;
எவர்
எனக்கு - தன்
வாலிபத்தைத் தந்து - என்
வயோதிகத்தை ஏற்கிறாரோ...

அவர் தலையில் - என்
அரசமகுடம் மின்னும்!'

எனக் கூறினான்; 'இளமையை -
எனக்குத் தா!' எனக் கோரினான்!

யயாதியின் மூத்தமகன் -
யது...
தந்தையை
தெய்வமாய் வந்தித்தான்;
ஆயினும்
அவன் ஒன்றைச் சிந்தித்தான்!

'என் பிதாவிற்கு
என் இளமையைத் தந்தால் -
என் இளமையல்லவோ
என் தாயை மருவும்;

அப்படி -
ஆயின்...

அது -
அதி பாதகம்; அச்செயல் - என்
நெஞ்சை - வாழும்
நாளெலாம் துருவும்!

அரசனாகி - மகுடம்
அணிவதைக் காட்டிலும்...

ஒழுக்கத்தை - உயிரென



ஓம்புதல் - உளநாள் மட்டும்
எனக்கு
ஏற்றம் தரும்
என் நாட்டிலும்; வேறு
எந் நாட்டிலும்!'

இன்னணம் - தன்
இதயத்துள் எண்ணி -
வெளிப்படையாக - அதை
விளம்பாமல்...

யது - தந்தை
யயாதிக்குத் - தனது
இளமையைத் தர
இசைய வில்லை;
அந்த உறுதியினின்று - அவன்
அணுவளவும் அசையவில்லை!

அய்ந்தாம் மகனான பூரு -
அதற்கு ஒப்பினான்; தன் -
ஆசையை நிறைவேற்றிய -
அவனுக்கே -
அரச மகுடம் - என
அத்தன் யயாதி செப்பினான்!

ஒழுக்கத்தை உயிரென -
ஓம்பிய -
யதுவின் வழிவந்த குலம் -
யதுகுலம்;

அத்தகு குலத்தில்
அவதரிப்பது - எனத்
தீர்மானித்தது
திருமாலின் திருவுளம்!

இதன் பிறகு -
இருடிகேசன்...
ஏற்கெனவேயே
எடுத்த -

இராமாவதாரத்தையும்
இலக்குவனையும் -
நினைவு கூர்ந்தான்; சற்றே -
நெஞ்சம் சோர்ந்தான்!

'வனவாசத்தில்
வைதேகியைப் பிரிந்து -
அடவி யெங்கும்
அலைந்த நாளில்...

இரவும் பகலும்
இமைக்கா திருந்தவன் - என்
இனிய இளவல்
இலக்குவன்; எனக்கு -
இடர் வரின் - அஃதை
இமைப்பொழுதில் விலக்குவன்!

காடு வர வேண்டியது - என்
கடன்; அவனும் வந்தான் -
ஊர்மிளையை விட்டுவிட்டு - என்
உடன்!

உண்ணாமல் - என்னை
உண்ணப் பார்த்தான்; தான்
உறங்காமல் - என்னை
உறங்கப் பார்த்தான்;

தொண்டு செய்து
தொண்டு செய்து
தன்னையே - எனக்கு
தாரை வார்த்தான்!

அந்த
அவதாரத்தில் -
என் பொருட்டு
எம்பி...

உழைக்க - நான்
உடன்பட்டேன்; அவ்வாறு -
உடன் பட்டதால் - அவனுக்குக்
கடன் பட்டேன்!

இந்த அவதாரத்தில் - அந்த

இலக்குவனை...

அன்பார்ந்த - என்
அண்ணனாகப் படைப்பேன்;
பணி செய்து - அவனுக்குப்
பட்ட கடனை அடைப்பேன்!'

என்று -
எம்பெருமான் -
எண்ணினான்;
எண்ணியது போலவே பண்ணினான்!

விசும்பை விட்டு - மேகங்கள்
வீதிவந்து விளையாடும் -
வடமதுரை - ஒரு
வண்ண நகர்;

விளக்கெண்ணெயை
விழிகளில் போட்டுக்கொண்டு -
விழுந்து விழுந்து தேடினாலும்
வையமிசை...

நேர்படுமோ - அந்த
நகருக்கு நிகர்?

அன்றாடம்
அலம்பிவிட்டாற் போல் -
அப்பழுக்கற்ற
அழகிய ராஜபாட்டைகள்;

ஆழ
அகழிகள் -
சூழ நிற்கும்
சுந்தரக் கோட்டைகள்!

'வனைந்ததோ மயன்கை?' என -
வியக்கும்படி மாளிகை;
உப்பரிகை - மேலிருந்து
உயர்த்திய கை -
உச்சி நிலாவை மெல்லத் தடவி
உறலாம் உவகை!

நகரைச் சுற்றி -
நாலா புறமும்...

புதுக்கள்
பதமாய்க் காய்ச்சிப் -
பூக்கள் வண்டுக்கு விற்கும்
பூங்காக்கள்!

வெள்ளை
வெளேர் என -
அன்னத் தூவிகள் - மிதக்கும்
அரவிந்த வாவிகள்!

நடனக்கால்கள் - கொண்டாடும்
நாற்றங்கால்கள்;
பசிய வயல்கள்; அவற்றில் -
பாயுங் கயல்கள்!

மல்லாந்து கிடக்கும்
மண்மாதாவின் -
மார்பகங்கள் போல் - கூர்த்த
மலைகள்;
கொஞ்சமா நஞ்சமா -
கொண்டல் குழந்தைகள்?
அனைத்திற்கும்
அமுதூட்டவே -
அவளுக்கு
அத்துணை முலைகள்!



ஊர்ப் புறத்தே -
உள்ளது...

ஒரு குன்று; அதில் -
ஒழுகும் நீர்வீழ்ச்சி ஒன்று;
நிஜத்தில் - அந்த
நீர்வீழ்ச்சி நீர் நீர் அன்று!

காலையில் மாலையில்
கருக்கல் வேளையில் -
ககனத்தில்
காலார நடக்கையில்...

குன்று தடுக்கிக்
குப்புற விழும் -
கர்ப்பிணி மேகங்களின்
கருச்சிதைவில் எழும் -

வெள்ளை ரத்தம் - அந்த
வெள்ளம் மொத்தம்!

அருவிக் கரையில் - அனேக
ஆல்கள்; பனைகள்;
அன்றாடம்

78

அந்தியில்
அங்கு கேட்கலாம் - குயில்களின்
ஆலாபனைகள்!

இத்துணை -
இயற்கை வளம் கொஞ்சும்...

வடமதுரை
வேந்தன் பேர் -
உக்கிரசேனன்; அவனுக்கு -
உற்றபிள்ளை ஓர் ஈனன்!

அந்த
அருமந்தப் புதல்வன் பேர் -
கம்சன்! போஜ -
வம்சன்!

தினம் தினம் -
திருவோலக்கத்தில்...

ஆயிழையார் - இருபுறமும்
ஆலவட்டம் வீச;
ஆடகப் பொன்னால் ஆன
அரியாசனத்தின் ஒளி -
அட்டதிக்கும் சிதறுகையில்
அவையோர் கண்கள் கூச;

குஞ்சங்கள்
குலுங்கக் குலுங்க -
வெண்கொற்றக் குடைக்கீழ்
வீற்றிருந்தவன்...

உக்கிரசேனன் என்றாலும் -
உண்மையில்...

கம்சன்
கையில்தான் -
ஆணைச் சக்கரம்
அட்டியின்றிச் சுழன்றது;
அதன் சுழற்சியில்
அவனுக்கு -
ஆகாதார் ஆராயினும்
அவர் கழுத்து கழன்றது!

சுற்றுப்புறச் -
சிற்றர செல்லாம்...

'இவனே நமக்கு
இறை!' - எனத்
தவறாது செலுத்தின
திறை!

உக்கிரசேனன் மகன் - சற்று
உக்கிரமானவன்; சில
வேளைகளில் - புந்தி
வக்கிரமானவன்!

அவனை அறிந்தார்க்கு -
அவன்...

பலா -
போன்றவன்;
வெளியே முள்;
உள்ளே கள்!

அத்தகு கம்சனுக்கு - தன்
அத்தன் அம்மையை விட...

ஒருத்திமேல்
ஓவாத பாசம் உண்டு;
அவள்
அவனது -
சிற்றப்பன் தேவகன் - பெற்ற
சீதள நிலாத் துண்டு!

அவனது - அந்த
அன்புத் தங்கையின் பேர்...

தேவகி; நடையில் -
தென்றலின் சகி;
தேய்பிறை யாதெனத்
தெரியாது -
சதா ஒளிரும்
சந்திரமுகி!

ஒன்றுவிட்ட தங்கையாயினும் -
ஓஹோ வென்று -
நாடு மெச்ச -
நடத்த விரும்பினான்...

கம்சன் - தன்
காதல் தங்கையின் மணவினையை;

அவன் - அப்போது
அறியவில்லை - தான்
விலை கொடுத்து -
வாங்க இருக்கும் வினையை!

(தொடரும்)

82

# கிருஷ்ண



# விஜயம்

**தேவகி**
**திருமணம்.**

'**ய**துகுல திலகன்' என
யாவரும் ஏத்திய...

புகழ்சால் சூரசேனனின்
புத்திரன் வசுதேவன்;

வசை வரா
வாழ்வே வாழ்வென -
ஓர்ந்து - அஃதை
ஓம்பி - ஓர்
ஓச்சமின்றி
ஒள்ளியனாய் வாழும் ஜீவன்!

அழகன்;
அறிவன்;
அமலன்;
அரியன்;

ஆகிய
அத்துணை -
அடைமொழிகளுக்கும்
அருகன்;

மாதர் இருவரை
மணமுடித்த வகையில் - அவன்
மற்றொரு
முருகன்!

தனது -

**11** கவிஞர் **வாலி**

தகவுமிக்க முதல் தாரத்தை;
'உரோகிணி' என்னும் -
உயர்குணங்களின் சாரத்தை;

காரண -
காரியத்தோடு...

நண்பன்
நந்தகோபன் நிழலில்; அவன் -
நாயகி அசோதையால் - அங்கு
நிலவிய நற்சூழலில்;

வசுதேவன் -
விட்டிருந்தான் கையடையாய்;
நந்தனும் - அவன்
நாயகி அசோதையும் -
உரோகிணியைக் காத்தனர்
உற்றதொரு காவற்படையாய்!

இன்னணம் -
இருக்கையில்...



வடமதுரை
வேந்தன் -
உக்கிரசேனனின்
உடன்பிறப்பான -

தேவகன் - தன் மகள்
தேவகியை...

சூரசேனனின்
சுதனான -
வசுதேவனுக்கு
விவாகம் செய்துவைக்க எண்ண -

சம்பந்தம் பேச - அவன்
சூரசேனனை நண்ண -

அவனும் -
அட்டியின்றி...

தந்தான் சம்மதம்
தனது செல்வன் - வசு
தேவனுக்கு - செல்வி
தேவகியைத் திருமணம் பண்ண;

கம்சன் - அந்தக்
களிப்பில் - அன்று முதல்

கருதினா னில்லை -
கள்ளும் கறிச்சோறும் உண்ண!
சதா -
சர்வ காலமும்...



தென்றலை நிகர்த்த - தங்கை
தேவகியின் - மங்கல
மன்றலை நடத்த - தீவிர
முனைப்பில் இருந்தான்...

அவளது
அன்புசால் அண்ணன் கம்சன்;
அடக்க வொணா
அடலேறு அனையதோர் அம்சன்!

தரணி கண்டதில்லை - அதுபோல்
தங்கை தமையன் பாசம்;
அண்ணன் உயிர்
அனுசை உடலிலும் -
அனுசை உயிர்
அண்ணன் உடலிலும் -

முறையே -
மாறிப் புரிந்தது வாசம்!

தேவகி -
தேகத்தில் மொய்க்கும் ஈ; அது -
கம்சனின் -
கண்விழியில் வைக்கும் தீ!

செங்கை வளை
சிலம்ப; சற்றே
புங்கை மலர்ப்
பாதச் சதங்கை புலம்ப;
தங்கை நடக்கையில் - அவள்
தாள் தரையில் பாவாமல் - தனது
அங்கை நீட்டி
அதன்மேல் 'நட' என்பான்;

இரவில் - அவள்
இலவம் -



பஞ்சுமெத்தை விரித்துப்
படுத்தால் வலிக்குமென - தன்
நெஞ்சுமெத்தை விரித்து
'நீ இதுமேல் கிட' என்பான்!

84



அன்னணம் -
அத்துவைதமாய்...
ஒன்றிவிட்ட
உறவு - அந்த
ஒன்றுவிட்ட
உறவு!

ஆம்;
அது...
நிலைத்து
நின்றுவிட்ட உறவு; அவன்
மனத்தை
மென்றுவிட்ட உறவு; அவனைக்
கொல்லாது
கொன்றுவிட்ட உறவு; அவனை
வெல்லாது
வென்றுவிட்ட உறவு!

இத்துணை அன்பு நீர் -
இறைத்து வளர்த்த...

தமையன் தங்கை
தொந்தத்தை;
சொந்தம் எனும்
சொல்லுக்குரிய பொருளையும் -
மீறி -
பீறி -
வெளிப்போந்து நிற்கும் - இனம்
விளக்கவொண்ணா பந்தத்தை;

காலம்
கவிழ்க்க - தேவகியின்
கல்யாணம்
காரண மானது; அவனது -
பாசத்துள் - அவனுக்கான
பாசக் கயிறு -
பதுங்கி நின்றது - அவனுக்குப்
புலனாகாமல் போனது!

வாஞ்சையை
வான்மழையாய் வார்த்து - அவன்
வசுதேவன் தேவகி
விவாகத்தை...

ஜாம் ஜாம் என்று
ஜகம் வியக்க நடத்தினான்;
விருந்தென
வந்த -
வேற்று நாட்டு
வேந்துகள்...

'ஆ' என - வாயை
அங்காத்த -
அதில் ஈ புகுவதுகூட - அவர்
அறிய மாட்டாது -

வியப்பில் - அவர்களை
விழுமாறு கிடத்தினான்!

திருநிறைச் செல்வி தேவகியின் -
திருமுடி தொட்டு திருவடிவரை...

ஒளியுமிழும்
ஒன்பான் ரத்தினங்களையும் -
ஒருசேரவும்
ஒவ்வொன் றாகவும் -

தலைப் பூவாய்;
தாடங்கமாய்;
தொடியாய்;
தோட்காப்பாய்;

ஆக்கி
அணிவித்து - அவளை
ஆடை சுமந்து
அரங்கில் வரும் - ஓர்
ஆபரண
அங்காடியாய் மாற்றினான்;

பல
பெண்டிர் -
புருவங்களைப்
பொட்டுக்கு ஏற்றினான்!

மாக்கோலம் இட்ட
மண மேடையின் -
நாற்புறமும்
நல்முத்துக்கள் கோத்த -
தாமங்கள்
தொங்கத் தொங்க...
வல்லிய - கலை



வல்லுநர்கள் வாசித்த -
பல்லியங்களில் - இசையமுது
பொங்கப் பொங்க...

அக்கினி வளர்த்து
அவி வார்த்து -
ஆரணம் ஓதி
அந்தணர் எடுத்துத் தந்த...

மஞ்சள் தடவிய - திரு
மாங்கல்யத்தை வாங்கி -
மணமகன் வசுதேவன் - தேவகி
மணிக்கழுத்தில் மாட்டினான்;

கணக்கிலடங்காக்
களிப்பினை -
கம்சன் - தனது கண்வழி
கசிகின்ற நீரில் காட்டினான்!

புக்ககம் புகப் -
புறப்பட்ட...

தங்கையையும்; அவள்
தலைவனையும்; ஆணிப் பொன் -
தேரில் அமர்த்தி -
தானே அதற்கு சாரதியாகி...
அந்த
அந்தம் மிகு -
ரதத்தை
ராஜபாட்டையில் ஓட்டினான் -

கம்சன் - கையில்
கடிவாளம் பிடித்து; தன் -
கைச்சாட்டையால் - புரவிகளைக்
காயமுறாமல் அடித்து!

எங்கிருந்தோ
எழுந்தது -
அந் நேரம் - ஓர்
அசரீரி;
அது சொன்ன சேதி - அரிந்தது
அவன் நெஞ்சைக் கீறி!

'கம்சனே! போஜ -
வம்சனே!

உன்னிலும் -



உலகில் உண்டோ ஒரு மூடம்?

தங்கை
தங்கையென்று - யாரை நீ
தாங்கி நிற்கிறாயோ - அவள்
தங்கையல்ல;



உன்
உயிரை -
மெல்ல வவ்வ
மறலி போட்ட மாது வேடம்!

நாள் பார்த்துக் கோள் பார்த்து -
நீ -

தங்கைக்குத் தந்தாய்
தாலிக் கயிறு; உனக்குத் -
தங்கை தர இருக்கிறாள்
தூக்குக் கயிறு;

உன் -
உயிர்க் கொல்லியை -
உண்டாக்கப் போவது - இந்த
உடன்பிறவாச் சோதரி வயிறு!

தேவகியின் கருவில்
தோன்றப் போகும் -
எட்டாம் குழந்தை - உனக்கு
எமனென்று ஆகும்!



நீ -
பாம்புக்கு வார்க்கிறாய்
பால்; பிறகு -
பாம்பு உனக்கு வார்க்கும்
பால்!'

வானத்திலிருந்து வந்த -
வசனம் கேட்டு...

கம்சன்
கலங்கிப் போனான்;
ஒரு வினாடி
ஒன்றும் விளங்காமல் - 'இது -
கனவா? நனவா?' என்று -
காதுகளை சந்தேகிக்க லானான்!

காலம் -
கண்ணிமைக்கும் நேரத்தில்...

உறவைப் பகையாக்குகிறது;
பகையை உறவாக்குகிறது;
நறவை நஞ்சாக்குகிறது;
நஞ்சை நறவாக்குகிறது!

சற்றுமுன் -
சடசடவென உருண்டுவந்த...

தேர்ச் சகடம் -
திடீரென நின்றது விகடம்;
விதி - இதுபோல்
விளைவிப்பதுண்டு அகடம்!

கம்சன்
கடுகளவும் -
நகர்த்தவில்லை - சாலை
நடுவினில் நிறுத்திய தேரை;

சலிப்பும் -
சஞ்சலமும் ஏற்பட்டு -
நழுவவிட்டான் - கைப்பிடித்த
நெடிய தோல் வாரை;

நோக்கினான் - சுற்றி
நின்றிருந்த ஊரை;
நீக்கினான் - விழிகளில்
நிரம்பியிருந்த நீரை!

ஏறியது சினம்;
மாறியது மனம்;
சீறியது விழி;
சிதறியது மொழி!

தேர்த் -
தட்டிலிருந்து...

கம்சன்
குதித்தான்;
கத்திரியாய்க்
கொதித்தான்!

துப்பினான் கண்களால்
தழலை;
தாவிப் பிடித்தான் -
தேவகியின் பூமுடித்த குழலை!

தரையில்
தள்ளினான்;



86

'எனக்கு எமனோ?'
என எள்ளினான்;

'என் உயிர் வாங்கு முன் - நான்
உன் உயிர் வாங்குவேன்!' என -
உரைத்தான் சூளை;
உருவினான் வாளை!



அதிர்ந்து -
விதிர்ந்து - வாய்
அடைத்து நின்றாள்
அவன் தங்கை;
தேவகி என்னும் -
தெய்வ மங்கை!

'நிலத்தில் -
நடந்தால் நோகுமென்று...
எவன் - அங்கையில்
ஏந்தினானோ தன் தாளை -
அவனா - தன்னை
அரிவதற்கு -
உடையிலிருந்து
உருவுகிறான் தன் வாளை?' என -

மறுகி மறுகி
மாய்ந்து போனாள்;
கம்சன்
காலடியிலேயே - பேச
சக்தியற்று
சாய்ந்து போனாள்!

இது காறும்
இன்னது செய்வதென்று -
விளங்காது
விக்கித்து நின்ற வசுதேவன்...

மூர்க்கம் -
முற்றிய மைத்துனன் முன் -

நீள்கரம் கூப்பி
நின்றான் தடுத்து; பின்
சில நீதிகளைச்
சொன்னான் எடுத்து!

(தொடரும்)

"நான் போயிட்டு வர்ற வரைக்கும் முட்டைகளையெல்லாம் பத்திரமா பார்த்துக்கோ!"

"அதையேன் இவ்ளோ பதற்றமா சொல்றே?" 88

"மரத்தடியில உட்கார்ந்திருக்குற சாமியார் கூடுவிட்டுக் கூடு பாயுறதுல கில்லாடியாம். அதான் பயமாயிருக்கு!"

– வத்திராயிருப்பு தெ.சு. கவுதமன்



# கிருஷ்ண விஜயம்

**நாரதர் வந்தார்.**

'**மை**த்துனனே! வடமதுரை -
மன்னவனே!

புவிமிசை - நீ
புகழ்மேவிய -
போஜகுலம் - எனப்படும்
ராஜகுலம்;

ஒல்காப் பெருமையில் -
ஓர் -

அங்குலம் குறையினும் - அது
அவமானம் என - வெள்கும்
செங்குலம் உன் குலம்; மாற்று -
சிறிதும் குறையாப் பொன்குலம்;

வாளெடுத்து - ஒரு
வஞ்சியை நீ வகிர்ந்தால்
வசை பாடாதா உன்னை -
வார்குழல் கொண்ட பெண்குலம்?

வீரனே! உன் -
வாளின் கூர்மையை - மாற்றான்
மண்ணிடம் காட்டாது - பேதைப்
பெண்ணிடம் காட்டல் இழுக்கு;

படியும் - உன்
பதாகைமேல் அழுக்கு!

பெண் கொலை -
பெரும் பாவம்;

12 கவிஞர் **வாலி**

தண்டனைக்கெல்லாம் - பெரிதான
தண்டனையைத் தரும் பாவம்!

ஓர் உண்மையை -
ஓர்!



மரணம்
மர்மமானது;
ஆயினும்
அது -
தன் செயலில்
தர்ம மானது!

அது -
ஆளுக்கொரு தேதி வைக்கும்;
அப்படி வைத்தபின்
அதற்கு...

முன்போ -
பின்போ -
ஆரையும்
அணுகாது; தான் -
ஆற்றும் பணியில் - அது
அன்னணமொரு நீதி வைக்கும்!

சாவு ஒன்றுதான் - உலகில்
சாவு இல்லாதது; அதுதவிர -
சகத்தில் வேறெதுவும் -
சாஸ்வதமாய் நில்லாதது!

இவளால் - உனக்கு
இறப்பு வரும் - என
இயம்பவில்லை அசரீரி; எனவே -
இவளில்லை அபராதி!

இவளுக்குப் பிறக்கும்
இளம் தளிரால்தான் - உனக்கு
ஏற்படும் ஆபத்து
எனும் பட்சத்தில்...

பிறக்கும்
பிள்ளை -

ஒவ்வொன்றையும்
ஒரு விநாடியும் தாமதியாது...

நிச்சயம்
நானே -
கொண்டு வருவேன்; உன்
கையில் தருவேன்!

இவளை விடு; உன் -
இடைவாளை உறையில் இடு!'

இவ்வாறு - வசுதேவன்
இறைஞ்சியதும்...

கம்சன் -
கோபம் தணிந்தான்;
வசுதேவனின்
வார்த்தைக்குப் பணிந்தான்!

அவனே
அவர்களை -
மனையில் சேர்த்தான்;
மனதுள் கண்ணீர் வார்த்தான்!

ஆருடைய -
அனுமதியையும்...

வேண்டி நிற்காமல் -
வேகமாக ஓடின நாள்கள்;

'வசுதேவன் -
வாக்குத் தவறுவானோ?' எனும் -

அய்யத்தில்
அல்லும் பகலும்
அவனைக் கண்காணிக்க - கம்சன்
அமர்த்தியிருந்தான் ஆள்கள்!

வசுதேவனும் தேவகியும் -
வாழ்வைத் துய்த்தனர்;

இல்லற



இன்பம் - ஒரு
வெல்லமாய்
விளங்க...

எல்லியும் பகலும் - அதனை
எறும்பு போல் மொய்த்தனர்!

மணாளன் மேல் -
மாளாத -

மால்கொண்ட தேவகி
சூல்கொண்டாள்;



சேய்
சனித்ததும் - தன்
பருத்த தனங்களில்
பால் கொண்டாள்;

தன் - சேலைத்
தலைப்பால் - சேயின்
முகம் மூடி - செலுத்தினாள்
முலைப்பால்;

எனினும் -
இன்று...

முலையுண்ணும் சேய் - நாளை
கொலை யுண்ணுமே என்று எண்ணி -
உடைந்தாள் உளம்
உலைப்பால்!

வார்த்தை தவறாத -
வசுதேவன்...

கைக்குழந்தையைக்
கையோடு கொண்டுபோய் -
கொடியவன் கம்சனிடம்
கொடுத்தான்;

அவன் -
அந்த -

பச்சை மண்ணைப்
பார்த்து - அதனுயிரை
வாங்கும் எண்ணத்தை
விடுத்தான்!

தன் -
தாய் மாமனின்...
இரும்பு நெஞ்சை - இளக்கியது
அரும்பு; சிறு -
கால் கை முளைத்த
கரும்பு!

'வசுதேவனே!
வாழ்க உன் வாக்குச்சுத்தம்;

கொண்டு போ - உன்
குழந்தையை;
தரவேண்டாம் எனக்கு -
தத்தம்!

எனைக் கொல்ல இருப்பது - உன்
எட்டாம் சேய்;
எதற்கு இதைக் கொல்வது?
எனக்குப் பிடிக்கவில்லை பேய்!'

இன்னணம் கம்சன் -
இயம்பக் கேட்டதும்...

வசுதேவன்
வியந்தான்; மைத்துனனின்
நல்ல குணத்தை
நயந்தான்!

அதன்பின் - தேவகி
அஞ்சு பிள்ளைகளைப் பெற்றாள்;
அவைகளுக்கு - எந்த
ஆபத்தும் இல்லாததால் -
அளப்பரிய -
ஆனந்தம் உற்றாள்!

ஒரு நாள் - திரு
ஓலக்கத்தில்...



கம்சன் - தனது
காரியத்தர்களோடு -
விவாதித்த வண்ணம்
வீற்றிருக்க -



'நாராயணா!
நாராயணா!' எனும்
நாம சப்தம் -
நாலாபுறமும் எழ...

வீணையும் கையுமாய் - நாரதமுனி
வருகை புரிந்தார்;

கம்சனும் பிறரும்
கடுகி எழுந்து -
முனிவருக்கு
முகமன் கூறி வணங்க...

விரிஞ்சன் மகன் - அவர்மேல்
வாழ்த்துகள் சொரிந்தார்!

கைகட்டி நின்ற கம்சன் - பின்
கைகாட்டி நின்றான்...

அவருக்கான
ஆசனத்தை;
அதில்
அமர்ந்த நாரதமுனி -
அன்பொடு நயந்து வேண்டினார்
'அகலுக சற்றே!' என்று...

அவைக்கண் -
அமர்ந்திருந்த சனத்தை!

அவ்வணமே -
அனைவரும் அகன்றபின்...

கம்சனைக்
கிட்ட அமரச் சொல்லி -
கண்களில்
கலகம் கரந்து நிற்க -



சாடை -
செய்து அழைத்தார்; பின்...

சில - புதிய
சேதிகளை - அவன்
செவிக்குள்
சிறுகச் சிறுக நுழைத்தார்!

'கம்சா! நீ -
கருணை; கொடுமை;
இவை
இரண்டும் கலந்த கலவை;

உனக்கு -
உவமிக்கலாம்...
ஒவ்வொருவருக்கு
ஒவ்வொரு மாதிரி -
வெப்பம் தட்பம்
வெளியுமிழும் நிலவை!



வாளை -
வலக்கையில் ஏந்தி...

தங்கையின்
தலைவாங்கத் -
துடித்தபோது
துப்பினாய் வெப்பத்தை; பிறகு -

உனக்கும்
உன் மஞ்சனுக்கும் -
ஓர்
ஒப்பந்தம் ஏற்பட்டு...

அதன்படி -
அவன் -
குழந்தையைக்
கொண்டுவந்து -
'கொல்லுக!' எனக்
கொடுக்கையில்...

தக்கணமே - அதன்

தலையைத் -
துண்டிக்காமல் - அதன்மேல்
துப்பினாய் தட்பத்தை!

உன் -
உயிரை...

எட்டாம் குழந்தைதான்
எடுக்கும் என்றாலும் -
எதை வைத்து - உன்னால்
எட்டைக் கணக்கிட ஏலும்?

முதலில் இருந்து எண்ணினால் -
முடிவில் பிறப்பது எட்டாகும்;
முடிவில் இருந்து எண்ணினால் -
முதலில் பிறந்தது எட்டாகும்;

நான் - இப்படி
நவின்றாலும் அது சாலும்!

கோடி வீடு - எனக்
கூறினால் - ஒரு தெருவுக்கு
இரண்டு கோடி வீடுகள்
இருக்கும் அல்லவா?

அந்தக் கணக்குப்படி
ஆரம்பத்தில் பிறந்த சேயை -
எட்டாம் குழந்தை
என நான் சொல்லவா?

உன் -
உயிரை...

அது வாங்குமோ?
இது வாங்குமோ?
எது வாங்குமோ?
எவரறியக் கூடும்?

அதில் நீ -
அலட்சியமா யிருந்தால் - உன்
...லையல்லவோ
...ில் தெறித்து ஓடும்!

உண்மையில் -
உன்...

தலைக்குமேல்
தொங்குகிறது கத்தி; இதில் -
தேவையா உனக்கு
தயாள புத்தி?

நீ -
நெருப்பு போல்...



வாள் பிலிற்றும் -
வாள் போன்றவன்;
வீசல் - உன்
பேசல்!

வெட்டும்
வாளுக்கு -
தலையும் ஒன்றுதான்; வாழைக் -
குலையும் ஒன்றுதான்!

கம்சா! என் பேச்சைக்
கேள்! கேளாவிடில் சா!

கடந்த ஜன்மத்தில் - நீ
'காலநேமி' எனும் பெயரில்...

அசுரனாக - இவ்
அம்புவியில் வாழ்ந்தாய்;
அரி - தன்
ஆழியால் - உனை
அரிய - நீ
ஆவி பிரிந்து வீழ்ந்தாய்!

இப்பவும் -
இம்பரில்...

உன் -
உயிர் வாங்கவே...

அதே -
அரி -



## ஜோக் கார்னர்



''எங்க ஊர் பாகவதர் சொன்ன மாதிரியே மழை கரெக்டா பெய்ஞ்சுது!''

''அப்ப, அவரைப் பாக'வெதர்'னு சொல்லு!''

- அ. சுகுமார்

மானிட வேடத்தில்
மண் இறங்கப் போகிறான்;
மறுபடி - உனக்கு
மாபெரும் சத்துரு ஆகிறான்!

அவனுக்கு -
அனுசரணையாக...

வானார்
வானவரும் -
கோனார்
குலந்தனில்

பல்வேறு
பெயர்களில் -
பிறப்பு எடுப்பர்; உனக்குப் -
பிரச்சினை கொடுப்பர்!

ஏதோ -
என்னால் ஆனது - உன்னை
எச்சரிக்க வந்தேன்;
எல்லாத் தகவலும் தந்தேன்!

புத்திசாலியாய்ப்
பிழை;

பிழைமேல்
பிழை செய்தாலும் - மாட்டும்
பிழையைச் செய்யாமல் - தப்பிப்
பிழை!'

ஓதுவதை
ஓதிவிட்டார்;
பின் - நாரதமுனி
புறப் பட்டார்!

கம்சன் - கதி
கலங்கிப் போனான்;

பாயைப்
பிறாண்டாத குறையாகப் -
பித்தேறிப்
பிரலாபிக்க லானான்!

'ஏய்க்கப்பட்டு விட்டோமே'
எனும்...

உக்கிரம் -
உச்சம் போய் நின்றது;

அடிமுட்டாளாய் -
ஆகிவிட்ட அவமானம் -
அடியோடு -
அவனை வழித்துத் தின்றது!

ஆணையிட்டான் - அந்த
ஆறு பிள்ளைகளையும்
அள்ளி வர; அவன் விழியில் -
கொள்ளி வர!

ஆறும் -
அரண்மனை மேவியது;
ஆறையும் - ஓர்
அரிவாள் சீவியது!



(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## திருமால் – தரை இறங்கினான்!

சதுர்முகன் –
சபையினில் –
அங்கம் வகித்த
ஆறு கந்தருவர்கள்...

'பிரமன் – தான்
படைத்த –
வாணியையே –
விரும்பினாரே!' என்று –

வம்புபேச – அது
விரிஞ்சன் காதில் விழ – அவன்
வெகுவாக
வெகுள...

'மண்ணிடை
மனிதராய் நீங்கள் –
அறுவரும் பிறந்து
அவதிப் படுக!'

என –
இட்டான் சாபம்;

அறுவரும் –
அஞ்சி...

'மன்னிக்க வேண்டும்!' என –
மலரவன் மலரடி துதிக்க –

'பிறந்தவுடனேயே – அப்
பிறப்பு நீங்கிடுவீர்!' என –
அருளினான் –
அன்று;

அந்த –
அறுவர்தான்...

தேவகி சேய்களாய்த்
தரையில் சனித்து –
கம்சன் கைவாளால்
கொலையுண்டனர் இன்று!

தன்
தந்தை பிரமனின் –
வாக்கு
விளங்க வேண்டியே –

வீணை நாரதர் – கம்சனுக்கு
வெறுப்பு ஏற்றினார்;
தேவகி சேய்களைத் –
தீர்த்துக் கட்டுமாறு –

சாடையாய்ச் –
சாற்றினார்!

நன்மை பயப்பது
நாரதர் கலகம் – என்பதை
நன்கு அறியும்
நாளுமிவ் வுலகம்!

பிள்ளைகளைப் –
பறிகொடுத்த தேவகி..

பதறினாள்;
கதறினாள்; கண்களில் –
உள்ள கண்ணீரையெல்லாம் –
உதறினாள்!

என்ன செய்து
என்ன?
வல்லான்

13 கவிஞர் வாலி

வகுத்தான் - அவள்
வாரிசுகளை - கம்சனின்
வாள் தின்ன!

கம்சனின் -
கடுஞ் சினம்...

அத்துடன்
அடங்க வில்லை;
அளந்து பார்த்தான்
அதர்மத்தின் எல்லை!

வசுதேவனையும் தேவகியையும் -
வைத்தான் சிறையில்;
தன்னைக் கண்டித்த -
தாய் தந்தையைப் -
பிடித்துப் போட்டான் -
பக்கத்து அறையில்!

சினம் - அவன் முகத்தில்
சிடுசிடுவென அரும்பியது;

அவன்
ஆத்திரம் முழுவதும் -
அரவணை மேல் துயிலும்
அச்சுதன் மேல் திரும்பியது!

தன்னைத்
தீர்த்துக்கட்டத் -
தன்
தங்கையின் -

சூல்வழியே வருகிறானே - மது
சூதனன் என்று - மறை
நூல்வழியே - அவன் புகழ்
நுவலும் அந்தணர்பால் சென்று -

வாயைப் பொத்தினான்; 'ஓதாதீர் -



வேதம்' எனக் கத்தினான்; நாரண -

நம்பியை
நம்பியே தொழுவோரின் -
கும்பியைக் - கம்பால்
குத்தினான்; கடவுள் -
பத்தர்கள் - எனப்
பார்வையில் படுகின்ற
மொத்தப் பேரையும் - தடியால்
மொத்தினான்!

இத்துணையும் - அவன்
இயற்றக் காரணம் யாதெனில்..

அடியார்களின்
ஆராதனையினால் தான் -
ஆண்டவனுக்கு
ஆற்றல் கூடுகிறது என்று -

சமயக் குரவர்
சொலக் கேட்டான்;
அந்த
ஆற்றலை - இன்னும்
அதிகரிக்க விட்டால் - அது
ஆகாது தனக்கு என்றுதான்..

திருமாலைத் துதிக்கத் -
தடை போட்டான்!

கண்ணீரும்
கம்பலையுமாய் -
காராகிருகத்தில்
கட்டுண்டு கிடந்த தேவகி..

ஏழாம் குழந்தையை
ஏந்தி நின்றாள் கருவறையில்;

ஆதிமூலத்தின்
ஆக்ஞைப்படி -
ஆதிசேஷன்தான்
அவ்வணம் புகுந்தான்..

திருமால் வந்து - நாளை
தங்கப் போகும் திருவறையில்!

'உண்டானது ஒரு சேய் - தேவகி
உதரத்தில்!' எனும்...

விஷயம் தெரிய வந்ததும்
விரக்திச் சிரிப்பொன்று -
விளைந்தது
வசுதேவன் அதரத்தில்!

ஆறும் - அன்று
அரிந்த அதே வாள்தான் - இதையும்
நூறும் - என்று
நுகைந்து போனான்;

ஏழாம் சேயாய் - பிறப்பை
ஏற்றிருப்பது - அந்த
எம்பெருமானின் படுக்கை -
என்பதை அறியாதவன் ஆனான்!

இவை -
இப்படியிருக்க...

தான்
தரையிறங்க வேண்டிய -
சமயம்
சமீபித்து விட்டது என்று...

கிடுகிடுவெனக்
காய்களை நகர்த்தலானான் -
கரியமால்; எழுதாக்
கிளவியுங்காணா அரியமால்!

மதுசூதனன் - உடனே
மாயையை அழைத்து...

'யோகமாயையே!
யான் மொழிவதைச் செய்;
தேவகி வயிற்றில்
தோன்றி வளரும் கருவை - மலர்
கொய்வது போல்
கொய்; அதை -
கோகுலத்தில் - நந்த
கோபன் வீட்டில் வாழும் -

வசுதேவன் முதல் தாரம்
உரோகிணி வயிற்றில் வை!

அதே நேரத்தில்
அசோதையின் வயிற்றில் - நீ
பெண் மகவாய்ப்

பிற; நான் -
பார்த்துக் கொள்கிறேன் -
பிற!'

என -
ஏவ...

மாயை - உடனே
மாற்றினாள் கருவை;
அஞ்சு திங்கள் - தேவகி
அடிவயிற்றில் தங்கிய
அஞ்சு தலையான் -
ஆதிசேஷன் உருவை!



ஏழாய் - தேவகி
ஏந்திய கருப்பம் -
அவளுக்குக் கம்சன்பால்
அனவரதமும் இருந்த...

பயத்தால் - கலைந்து
போனது என்று -
பேசியது ஊர் - ஆங்காங்கு
பரவலாக நின்று!

ஆதிசேஷன் இருந்து
அகன்ற - தேவகியின்
அகப் பையில் புகுந்தான்
ஆயிரம் பெயரோன்;
ஆரணங்களும் -
அளவிடற்கரிய உயரோன்!

எதற்கும் -
எவர்க்கும் -

எளிதில் எட்டானவன்;
எழுத்து எட்டானவன்;
ஏந்திழை தேவகி - கருவில்
ஏந்திய தொகையில் எட்டானவன்!

தேவகி - கருத்
தரித்திருக்கிறாள்
எட்டாம் முறையாக - எனும் சேதி
எட்டி...

கம்சனுக்குக்
காது கசந்தது;
ஏனெனில் அவனுக்கு - அச் சேதி
எட்டி!

சிறைக்குள் இருக்கும் - தன்
சகோதரியைக் கண்டான்;

'அடடா! என்ன -
அழகு! இந்த -
அழகுக்கு ஏது - ஓர்
அலகு?

உண்டாயிருக்கும் பெண்ணுக்கு -
உண்டாவதுண்டு பொலிவு;

அது -
அதிசயமல்ல என்றாலும்...

அத்தகு பொலிவு - ஓர்
ஆயிரம் சேர்ந்தாலும் - அது
இத்தகு பொலிவுமுன் -
இழந்து நிற்கும் வலிவு!' என...

அவனே -
அவனுக்குள் பேசிக்கொண்டான்!

தேவகியின் -
திருமேனியின் தேசு...

கம்சனின்
கண்களைக் -
கூசவைத்தது; மேற்சொன்னபடி -
பேச வைத்தது!

வியந்தான் அவன்; கூடவே -
பயந்தான் அவன்!

எயிற்றில் பூமியை
ஏந்திய வராகனலவோ - அவள்
வயிற்றில் இருப்பவன்;

சேலாகி - மறையைச்
சிறை மீட்டவனலவோ - அவளுள்
சூலாகி இருப்பவன்;

கடல் கடையக் - கூர்மமாய்க்
கிடந்தவனலவோ - அவள்
குடல்தனில் இருப்பவன்;

தருப்பையால் - சுக்கிரன் விழி
துளைத்த வாமனனலவோ - அவள்
கருப்பையில் இருப்பவன்!

தேவகி கர்ப்பக் கிருகம் -
திருமால் கர்ப்பக் கிருகம் -
ஆனபின் -
அவள் பூவுடல் -

வண்ணமோ வண்ணமென
வடிவம் எடுத்தது;
கம்சனுக்கு - அதுவே
காட்டிக் கொடுத்தது!

'நாரதர்
நவின்றது போல் -
நமைக் கொல்ல
நாராயணனே...

வளருகிறான் - இவள்
வயிற்றின் கண்; இதை
வளர விட்டால் - பிறகு நம்
வாழ்வில் மண்!

சேய் வருவது - நம்
சீவனைத் தின்ன; அதற்குமுன் -
தாயைத்
தீர்த்துவிட்டால் என்ன?

ஆனால்...
அதனால் -
மூன்று பாவங்கள்
மூளும்;

பெண் கொலை -
சகோதரி கொலை -
கர்ப்பிணி கொலை -

எனும் முப்பாவம் மூள - நம்
எதிர்காலமே மாளும்!

ஆதலால் -
ஆத்திரத்தை விடுத்து...

பேறுகாலம் வரை -
பொறுப்போம்;
பத்தாம் மாதம் -
பிள்ளை -
வெளிவந்ததும் - அதை
வாள் கொண்டு ஒறுப்போம்!'

என -
எண்ணிய கம்சன்...

வசுதேவன் தேவகி
வைகும் சிறையின் -
கட்டுக் காவலைக்
கடுமை யாக்கினான்;
எச்சரிக்கையா யிருக்குமாறு
எல்லாக் காவலர்க்கும் -



அவன்
ஆணை போக்கினான்!

ஆவணித் திங்கள்;
அஷ்டமி திதி;
ககனத்தில் -
கிருஷ்ணபட்சத்து மதி;
உரோகிணி நட்சத்திரத்தில் -
ஊருறங்கும் நள்ளிரவில் -

தேவகியின்
திரு -
உதரத்திலிருந்து
உதித்தான் -
உரக சயனன்; அருள் -
உமிழும் சரோஜ நயனன்!

மறைவாசி
சிறைவாசி ஆனான்; நாளை -
பெற்றம் மேய்க்கப்
பிறந்த கோனான்!

வானில் - தேவர்
வந்து கூடினர்;

கின்னரர்
கந்தருவர் -
கள்ளனைய
கானம் பாடினர்;

தேவ
துந்துபி முழங்க;
கலீர் கலீர் என -
காற்சதங்கை ஓசை வழங்க...

அரம்பை முதலிய
அரமகளிர் -
அபிநயித்து
ஆடினர்;

பக்தியும்
பரவசமும் ததும்பும் -
பனுவல்களால்
பிறந்த தெய்வப் பிள்ளைக்கு...

சொன்மாலை -
சூடினர்!

பிறந்த பிள்ளை - பிற
பிள்ளை போல் பிறக்கவில்லை;
தரையிறங்கியும் - திருமால்
தன் சுயத்தை மறக்கவில்லை!

காதில் -
குண்டலம்;
கழுத்தில் -
கௌத்துபம்;

குடுமியில் -
கிரீடம்;
செய்ய மார்பில் -
ஸ்ரீவத்சம்;

சங்கு -
சக்கரம் -
ஆகிய
அஞ்சாயுதம் -
தாங்கிய - நான்கு
திருக்கரம்;

பீதக ஆடை;
பச்சைக் கற்பூர வாடை;
கமலக் கண்கள்;
கார்மேனி!

தேவகியும் வசுதேவனும் -
தொழுதனர்; அழுதனர்; உடன் -
அச்சம் இருந்தது -
உச்சம்!

(தொடரும்)



## ஒருத்தி மகனாய்ப் பிறந்து...

அற்றை நாளில் -
அயோத்தி நகரில்...

திருவில் ஏந்தி -
தெருவில் ஏகி; உடன் வரும் -
குருவில் எணம் தோயாது - புருவ
இருவில் ஏந்திய தோகை - சானகி
உருவில் தோய்ந்து; விரக நோய்
தருவில் ஏந்தியவனாம் - ஓர்
உருவில் மன்மதனொடு - இரவு
செருவில் இறங்கி; மறுநாள்...

பருவில் என்றும்; புராரியின் -
பெருவில் என்றும்; பிறங்கிய -
ஒருவில் இறுத்தவன் - தேவகி
கருவில் இறங்கி - இங்கு...

# கிருஷ்ண விஜயம்

கண்முன் -
காட்சி தந்ததும்...

வசுதேவன் நின்றான்
விழிகள் பனிக்க; பின் -
விநயமொடு பேசினான் - குரலில்
விசனம் வெருவல் தொனிக்க!

"பெரிய திருவடி - மேலேறும்
பெம்மானே! மாருதியாம்
சிறிய திருவடி மேலேறி -
செருக்களம் போந்த பெருமானே!

முழுதும் உன் மூர்த்திகரம் -
மொழிய மொழியுண்டோ?
பழுதே
பகல் போக்கும் -
பாவியேன் - எனக்குன்
பாத பங்கயமல்லால்...

கவலைக் கடல் -
கடிய வேறு வழியுண்டோ?

ஜனார்த்தனா!
ஜகந்நாதா!
ஜல சயனா!
ஜலஜ நயனா!



உலகு -
உய்ய...
இற்றை நாள்
இங்கு நீ -
உதித்தனை என்பதை
ஓர்ந்தேன்;
ஓர்ந்தும் - உளம்
ஒருவகையில் சோர்ந்தேன்!

'எப்போது பிறக்கும்?
எப்போது பிறக்கும்?
எட்டாம் பிள்ளை!'
எனக்....

கழுகுக் கண்ணொடு -
காத்திருக்கிறானே -
கஞ்சன் - எனும் என்
மஞ்சன்;
நெருஞ்சி முள் அடர்ந்த -
நெஞ்சன்!

சேவகர் மூலம் - அவன்
சேதி கேட்டு...

வாளெடுத்து
வருவானாயின் -
என்செயக் கூடும் - இந்த
ஏழை? எதிர்த்து -
முட்டவும் கொம்பில்லா -
மோழை?"

என வசுதேவன் - தன்
ஏலாமை குறித்து வாட...

அவன் -
அறியாமையை எண்ணி
அச்சுதன் சிரித்தான்; மெல்ல
அரவிந்த இதழ் விரித்தான்!

அதே
அறியாமையில் -
தேவகியும் தவித்தாள்;
தேம்பியவணம் கைகுவித்தாள்!

'பிரபோ! நீ
பிறந்ததால் - என்
கருப்பாசயம்
கவுரவிக்கப் பெற்றது;
உலகில் எவர்க்கும் -
உறா ஏற்றம் அது உற்றது!

பாவி கம்சனின்
பார்வையில் - உன்
விஷ்ணு வடிவம்
விழ வேண்டாம்; உன் -
அவதாரம்
அவன் -
அறிய நேருமோ - என நானும்
அச்சத்தில் அழவேண்டாம்!

மாதவா!
மதுசூதனா! நீ -

மற்றக் குழந்தைகள் போல் -
மாறு;
காலம் வரும்போது -
கம்சனைக் கோறு!'




தாய் -
தேவகியின்...

தவிப்பை
தாமோதரன் பார்த்தான்;
அமிழ்தினும் இனிய
அருள்மொழி வார்த்தான்!

"மாதாவே! சுவாயம்பு -
மன்வந்தரத்தில் -

உனக்கும்
வசுதேவனுக்கும் -
மூண்ட
முற்பிறப்புகளில் -

'பிரசனி' என; 'சுதமஸ்' என -
பெயர் கொண்டு வாழ்ந்தீர்கள்;
இருவரும் -
இதய சுத்தியோடு இணைந்து...
புலன்களைப்
பொசுக்கி; பிற -
நசைகளை
நசுக்கி;

மழையில் நனைந்து -
மறுபடி வெயிலில் உலர்ந்து -
மெல்ல மெலிந்து -
மேனி நலிந்து -

காற்றை;
காய்ந்த சருகை;
உணவாக
உட்கொண்டு -

பகலிரா பாராது - தேவ வருடம்
பன்னிரண் டாயிரம் -

எனை -
எண்ணி ஏத்தி -

அரிய தவத்தில்
ஆழ்ந்தீர்கள்!

உளம் - பெரிதும்
உவந்து...

நேர்வந்து
நின்றேன்;
'என்ன வேண்டும்?'
என்றேன்!

எவர்க்கும்
எளிதில் கிட்டாத -
வைகுந்தத்தை
வேண்டிப் பெறாமல்...

புத்திரனாக - எனைப்
பெறவேண்டும் என்றீர்கள்;
அதில் - உறுதியொடு
அசையாமல் நின்றீர்கள்!

நானும் -
நீங்கள் கோரியதை ஏற்று...

பிறந்தேன் - உங்கள்

பிள்ளையாக அன்று;
பெயர் கொண்டேன் -
'பிரசனி கர்ப்பன்' என்று!

அதற்கு அடுத்து -
'அதிதி'; 'காசிபர்' என - நீங்கள்
அம்புவியில் பிறப்பெடுக்க -
அவதரித்தேன் நான்...

உங்கள் மகன் -
வாமனனாக;
மாவலியிடம் -
மூவடி மண்கேட்டுப் போக!

இப்பிறப்பில் - உங்கள்
இருவருக்கும் -
மீண்டும்
மகனாக வந்தேன்;
உங்கள் முற்பிறவிகளை
உங்களுக்கு நினைவூட்டவே - என்
விஷ்ணு வடிவத்தை - உங்கள்
விழிகளுக்குத் தந்தேன்!

இதோ!
இக்கணமே - ஓர்
இயல்பான குழந்தையாய்
இருப்பேன்; கவலை விடுங்கள்;
சொல்கிறேன் ஒன்று; அதன்படி -
செயல் படுங்கள்!

என் ஆணையை -
ஏற்று...

யோக மாயை - கோகுலத்தில்
யசோதையின் வயிற்றில் -
பிறந்திருக்கிறாள் -
பெண் சிசுவாக;

என்னை
எடுத்துப் போய்
அங்கு விட்டுவிட்டு - இங்கு
அச்சேயைக் கொண்டு வாருங்கள்...

உங்களிடம்
உதித்த -
எட்டாம் குழந்தை - அது
என்பது ருசுவாக!

உலகம் - மாயை வயப்பட்டு
உறங்கிக் கிடக்கும்;
நான்
நினைத்தபடி -
செவ்வனே
சகலமும் நடக்கும்!"

இன்னணம் -
இயம்பிவிட்டு...

சீதரன்
சிறுத்துப் போனான்;
சிறுத்து
சிறுத்து -
சிறு
சிசுவாக ஆனான்!

தேவகிக்கும்; வசு -
தேவனுக்கும்;

கால்களில்
கைகளில் -
இடப்பட்ட விலங்குகள்
இற்று விழ...

காராகிருகத்தின் -
கதவுகளின் -

தாழ்ப்பாள்கள்
தாமே அவிழ...

கூடையில் வசுதேவன்
குழந்தையைச் சுமந்து -
கோகுலம் நோக்கிக்
கிளம்ப....

தேவகி - வாய்
திதிக்கத் திதிக்கத் -
தன் சேய்க்குத்
தந்தாள் முத்தம்;
புளகம் எய்தியது - அவளது
பூமேனி மொத்தம்!

ஆராவமுதனின் -
ஆக்ஞைக் கேற்ப...

மதுராபுரியும் கோகுலமும் -
மாயையின் கட்டுப்பாட்டில் -
முழுமையாக வந்தன; அவை -
முற்றும் சுயமிழந்தன!

உறக்கத்திலும் -
கிறக்கத்திலும் -
சிறைக்காவலர் கிடக்க; திருச்
சேயேந்தி வசுதேவன் நடக்க;

அந்தகாரம் எங்கும்
அப்பிக் கிடந்தது;
கருமை எங்கணும் எதிலும் -
கப்பிக் கிடந்தது;
கூடைக் குழந்தை - கால்
கட்டை விரலை - வெல்லச்
சீடை போல் எண்ணிச்
சப்பிக் கிடந்தது;
சிறு
சிறு
தூறலை - வானம்
துப்பிக் கிடந்தது!

அமிர்த -
ஆழியின்...

அலைசுமக்கும்
அய்யனை; அறுபத்து நான்கு -
கலை சுமக்கும்
கருத்தனை; அருள்மிகு வேங்கட -
மலை சுமக்கும்
மாலனை; மா லோலனை; தனது -
தலை சுமக்க - 'என்ன
தவம் செய்தனனோ?' எனும்படி...
வளியும்;
வெளியும்;
ஒளியும்;
ஓதமும்;
விரிந்து கிடக்கும் பூமியும் -
வியக்க -
வசுதேவன் -
விடுவிடுவெனச் சென்றான்;

யமுனை -
யாறு -
குறுக்கிட - நிலை
குலைந்து போய் நின்றான்!

அவ் வமயம் -
அண்டமே அதிரும்படி;
வான
விதானமே -
பொடித்துப் போய்ப்
பொலபொலென உதிரும்படி -

முழவுபோல் -
முழங்கியது இடி;
வெளிச்சப் பாம்பாய் -
நெளிந்தது மின்னற் கொடி;

திடீரெனத் -
திரள்திரளாகத்
திரண்ட மேகங்கள் -
தாம்...

உப்புக் கடலில்
உறிஞ்சி உறிஞ்சி -
உண்டிருந்த நீரையெலாம்
உமிழ்ந்தன;
அருகம் புல் முதல்
ஆலமரம் வரை -



அந்த வெள்ளத்தில்
அமிழ்ந்தன!

யமுனை -
யாற்றில்...

வெள்ளம் -
வெகுவாய்ப் பெருக்கெடுத்தது;
வசுதேவனுக்கு - அந்த
வெள்ளநீர் பயங்கொடுத்தது!

ஆதிசேஷன்
அகல விரித்தான் - தனது
அழகிய
ஆயிரம் படங்களை;
கூடைக் குழந்தை -
கூதலில் மழையில் வாடாது - பூக்
குடைபோல் - அவற்றைக்
கவித்தபடி...

தொடர்ந்தான் - வசு
தேவன் செல்லும் தடங்களை!
'கடப்பது என்னணம்?' - எனக்
கலங்கியவாறு - யமுனைக்
கரையில் - வசுதேவன்
கணநேரம் நின்றான்; பிறகு -
'நடப்பது நடக்கட்டும்;
நாராயணன் செயல்!' என்று -
நதியில் இறங்கி -
நடந்து சென்றான்!

அடுத்த நொடி -
அதனை -
ஆரோ -
அணை கட்டிப் பிளந்தாற்போல்...

ஆறு - இரு
கூறு ஆகி -
வழி விட்டது; வசுதேவனுக்கு -
விசனம் விட்டது!

கோகுலமே - உறங்கிய
கோலத்தில் இருக்க...

வசுதேவன்
வெகு எளிதாக -
நந்தகோபன் மனைக்குள்
நுழைந்து...

தன் கையில் இருந்த -
திருச் சேயை...
அசோதையின்
அருகில் விடுத்தான்;
பிறகு - அவள்
பக்கம் படுத்திருந்த -
பெண் குழந்தையை -
பத்திரமாக எடுத்தான்!

யமுனை -
யாற்றை -

மறுபடி கடந்து - அவன்
மதுராபுரி வந்து -
புகுந்தான் சிறை; தானே -
பூட்டிக்கொண்டது அறை!

வசுதேவன் தேவகி கால்களில் -
விலங்குகள் - தாமே
பழையபடி போய்ப்
பொருந்திக் கொண்டன;
வசுதேவன் தேவகி - இருவர்
விழிகளும் -
அனைத்தையும்
ஆச்சரியமாய்க் கண்டன!

உடனே -
ஊரை -
மொய்த்திருந்த
மாயை விலக -
புதிதாய் வந்த
பெண் குழந்தை -
வாய்விட்டு
வீறிட்டு அலற -

காவலன் ஓடிப் போய் -
கம்சனுக்கு...

தகவல்
தந்தான்; அவன் -
வாளோடு
வந்தான்!

(தொடரும்)

## மாயா - மாயா!

குழந்தையின் - அழு
குரலைக் கேட்டவுடனேயே...

அடுத்த விநாடி - தன்
அண்ணன் வருவான்
அரிவாள் கொண்டு - என
அறிவாள் பெண்டு!

அவ் வணம்
அவன் வருமுன் - ஒன்றை
அறிவித்தது - அவளது
அந்தராத்துமா தேவகியிடம்;
அந்தராத்துமா
அறிவித்தால் -
அஃதை ஓர்
ஆணைபோல் ஏற்று...



செயல்படும் -
சேவகியிடம்!

"தேவகி!
தேம்பலை விட்டுத் துணிவை வகி;
உரைப்பது கேள்;
உனக்கு நான் உற்றதோர் சகி!

அண்ணனின்
அரிவாளிடம் -
ஒருசேர இழந்தையே
ஓராறு குழந்தையே...

முந்தி - கொதித்ததே
உந்தி; அந்த
சங்கடம் மீண்டும் வேண்டுமா?
சிந்தி!

போனது போகட்டும் -
பிற;
மரித்தவை மரித்தவையே - என
மற;

இதையும் விடுவதோ
'இற' என்று?
இதை யாகிலும் விடுமாறு



இர இன்று:

இல்லையேல்
இச் சேயை - அவன்
கண்ணில் படாமல்
கர இன்று!

கரத்தல் என்னும்
காரியத்தை -
இங்கு இயற்ற
இயலாது;

இரத்தல் என்பது
இயலு மாதலால்...

அதை இயற்றுவாயின் - உன்
அண்ணனின் இதயம் -
அனல் மெழுகாய் இளகி - அது
அச் சேயை அரிய முயலாது!



இறுகும் இதயம்
இளகலாம்;
இளகும் இதயம்
இறுகலாம்;

இதுதான்
இதயத்தின் குணம் - என
இறுதியிட்டுச் சொல்ல - அதன்
இயல்பு நிரந்தரம் அல்ல!

சொல்லும்
சொல் -
கனிவாயிருப்பின் - அதில்
கனியும் கல்!

ஆதலால் - உன்
அண்ணனிடம்...

கைக்குழந்தை
கணப்போதில் - ஒரு
பொய்க் குழந்தை - எனப்
போகும்படி - அதைக்

கோறாதே - எனக்
கோரு; நீ -
கோரக் கோரக்

கோறுவா னாயின் - அன்னணம்
கோறியது - உன்
கொடிய வினையென்று ஒரு!"

உள்மனம் - இப்படி
உரைத்ததும் - இதுகாறும்
உலைவிலிருந்த - தேவகியின்
உள்ளே தெறித்தது பொறி ஒன்று;

பெற்ற குழந்தை - இடம்
பெயர்ந்து போனபின் - தான்
பெறாத குழந்தை - இடம்
பெயர்ந்து வந்தபின் -

வாய்த்த குழந்தையை
வளர்க்கலாமே என்று!

கம்சன் வரும்போதே
காலைத்தடுக்கியது -
காராகிருகத்தின் வாசற்படி;
கழன்று விழுந்தது வயிரமுடி!

அவையெலாம் -
அபசகுனம் எனும் எண்ணம்...

அவனுள்
அறவே எழவில்லை;
அவனது
அடிமனம் - அதை
அவனுக்கு
அறிவுறுத்தியும்...

அவ் அறிவுரை -
அவன் காதில் விழவில்லை!

முன்னமே இருந்த
முனிவோடு - இன்னும்
மும்மடங்கு
முனிவு கூட;
மூக்கும்
முழியும் -
மிளகாய்ப் பழத்தை
மீறியதோர் செக்கர்கொண்டாட;

விழுந்த
வயிர முடியை
எடுத்தான் கரத்தில்;
ஏற்றினான் சிரத்தில்!

விரைந்து சென்று - பிள்ளையை
வெடுக்கெனப் பறித்தான்;
விழியாலேயே - அதை
விழுங்கி விடலாமா எனும்படி -
வெகுவாக
வெகுளி பொங்க வெறித்தான்!

தேவகி
திடுமெனத் -
தமையனின்
தாள்களைப் பற்றினாள்;

அவன் -
அசையா வணம்
கண்ணீர்க் கயிற்றை - அவன்
கால்களில் சுற்றினாள்!



'அண்ணா!
அருள் கூர்ந்து...

குழந்தையைக்
கொல்லாது விடு;
உருவிய வாளை
உறையினில் இடு!

உன் -
உதார குணத்தால்...

பிழைக்கட்டுமே - இந்தப்
பச்சைக் குழந்தை இன்று;
பிறங்கட்டுமே - நீயிட்ட
பிச்சைக் குழந்தை என்று!

தயைசெய்து - உன்
தங்கை சொல் செவியில் வாங்கு;
இது பெண்மகவு; நீ -
இதனால் பெறுவதுண்டோ தீங்கு?

பெண்சிசுவைக் கொல்லல் -
பெரும் பாதகம்;
நீ
நட்பு பாராட்டும்
நாரத முனி - உனக்கு

நவின்றதிலையோ இப் போதகம்?'

என இரப்பவள்போல்
ஏந்தினாள் இருகை;
அவளைப் புறம் தள்ளியது
அவனது இடக்கை!

'எனைக் கொல்லப் பிறந்த சிசு -
எப்பாலா யிருந்தா லென்ன?
அவ்
அரி -
எவ் 'வடிவிலும் வரலாமலவா -
என்னுயிர் தின்ன?'

என -
எரிந்தான்;

தூக்கிப் போட்டுத் - தலையைத்
துண்டிக்க எண்ணி...

இளந்தளிரின்
இருகால்களைப் பிடித்து -
ஒரு சுற்றுச் சுற்றி
உயரே எறிந்தான்!

அன்னணம்
அவன் -

எறிந்த குழந்தை
எடுத்தது துர்க்கை வடிவம்;
அம்மவோ!
அது...
எத்தகையது
என -
என்னால் எழுத
ஏலுமோ -

அன்னை
அவளது அருளார்ந்த படிவம்?

கண்முன் -
காட்சிதந்த -
கருப்பு
நெருப்பு; எழுதாக் -
கிளவிகள் அளக்கவொண்ணாக்
கனகப் பொருப்பு!

ஆடை அணிந்த
அழல்போல் தோற்றம்;
உதிரச் சிவப்பை
உள்வாங்கிய செய்ய விழிகள் -
உருண்டு உருண்டு
உமிழ்ந்தன சீற்றம்;
நெற்றிக்கண்
நெய்ப்பந்தமாய்க் கனலப் -
புறப்பட்டது
புகையின் நாற்றம்;

மகிடாசுரனை -
மர்த்தனம் செய்துவிட்டு...

மகிடம் இல்லாது; பாச
மணிக்கயிறும் இல்லாது; மணி
மகுடம் தரித்து - இம்
மண்மிசை வந்த கூற்றம்!

நெறித்த
நீலக் குழற் கற்றைகள் -
நீவி விடும் காற்றில்
நீந்தி நின்றன;



சங்கம்;
சக்கரம்;
சிலை;
சூலம்;
கத்தி;
கேடகம்;
கதை;
கழி;

என -
எட்டாயுதங்களை -
எட்டுக் கைகள்
ஏந்தி நின்றன!

சிரங்கள் கோத்த
சரங்கள் - அவளது
தோள்களி லிருந்து
தொங்கின;

அஃதன்றி -



அனேக அணிகள் -
ஆதி
அந்தம்...

பிரகாசப்
பிரவாகமாய்ப் பொங்கின;

வெண்கதிர் செங்கதிர்
விழிகளில் தங்கின;
ஆயினும் -
அவளது -
கண்விளக்குகள் முன் - அவ்
விண்விளக்குகள் மங்கின!

அவள்
அனலாலும் புனலாலும் -
மாயா
மாயா; நிலத்தில் -
சாயா
சாயா!

நீலி;
சூலி;
ஆரணம் ஏத்தும்
ஆலகாலி!

அகோரப் பற்கள் காட்டி -
அட்டகாசமாகச் சிரித்தாள்;
அதன்பின் -
அவள் வார்த்தையை விரித்தாள்!

'மூடனே!
மூர்க்கனே!

என்னைக் கொல்ல - உன்னால்
ஏலுமோ? பெரு -
வெற்பை வீழ்த்த - வீதிப்புழுதி
வழி கோலுமோ?

நீ
நீர்த்துளி;
கண கணவெனக்
கங்குகள் -
விட்டெறியும்
வடவைத்தீயை...

நீர்த்துளி ஆக்குமோ
நிர்த்தூளி?

என்னைத் தூக்கி
எறியும் போது -
என்கால்களைப் பற்றினாய்
என்பதால்தான்...

உன் உயிரை
உருவாது விட்டேன்;
கொஞ்சம்
கருணைவயப் பட்டேன்!

உன்னைக் கொல்ல -
உத்தேசித் திருப்பவன்...

வளர்கிறான்
வேறு இடத்தில்;
அவன் என்
அண்ணன்;
ஒரே சமயத்தில்
உறைவான் நூறு இடத்தில்!

முடிந்தால்
முயன்று - அவனைக்
கண்டுபிடி; உன் -

காலம் அவன் கணக்குப்படி!'

இன்னணம் -
இயம்பிவிட்டு...

மறைந்தனள்
மாயை;
கஞ்சன்
கண்களில் -
அப்பிச் சென்றனள்
அச்சமெனும் தீயை!

எரிச்சலும்
ஏமாற்றமும் - மன
உளைச்சலை
உண்டாக்க...

கோபம்
கொடிகட்டிப் பறக்க - உயிர்
நாடி துடித்தான்; பற்களை
'நறநற'வென கடித்தான்!

மெல்ல மெல்ல -
மெல்ல மெல்ல -
நிதானத்திற்கு வந்தான; சம -
நிலையை நெஞ்சுக்குத் தந்தான்!

மூடம் விலகியது;
மூர்க்கம் விலகியது; மாயை -
பாடம் புகட்டிப்
போன பிறபாடு - கரை சேர்ந்த
ஓடம் போல் - அவனுள்ளம்
ஒய்வாய் இலகியது!

வசுதேவன் தேவகியை
விடுவிக்க வேண்டி - அவர்தம்
கால்கை விலங்குகளைக்
கழற்றினான்;

துக்கம் -
தொண்டையை அடைக்க -
தொலைந்து போன
தங்கைப பாசம் - மீண்டும்

தோன்றித்
தோளிரண்டும் புடைக்க -



மிதமிஞ்சிய அன்பொடு -
மிழற்றினான்!

வாயிலிருந்து
வார்த்தைகள்
தெளிவாய் வர - சற்று
தாமத மானது;

இனி
இடமில்லை எனும்படி -
நீரால் அவன் விழிகள்
நிரம்பிப் போனது!

தேள் என்றிருந்தது - மறுபடி
தேள் என்றானதில் -

தேவகியும்; வசு -
தேவனும் வியந்தனர்;
கூடவே -
கொஞ்சம் பயந்தனர்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## கோகுலத்தில் கோலாகலம்.

உண்மையில் - கம்சனின்
உள்ளம் மாறிவிட்டது;

தங்கையையும் - அவள்
தலைவனையும் -
தளையிட்டு வைத்தும் -
தன்னைக் காத்துக்கொள்ளும்...

காரியம் - அவன்
கையை மீறிவிட்டது!

பிரியமாய் - ஒருகாலத்தில்
பேணி வளர்த்த...

தங்கையின்
திருக்கரங்களைப் -
பரிவொடு
பற்றிக் கொண்டான்; நீர் -
ஒழுகு கண்களில் - அவற்றை
ஒற்றிக் கொண்டான்!

'சகோதரி! என் -
சிந்தையை வெருட்டியது சாவு;
ஆதலால் - என் மனத்தில்
அற்றுப்போனது ஈவு; உன் -
ஆறு குழந்தைகளை
அநியாயமாய்க் கொண்டேன் காவு;

ஆத்திரமும்
அவசரமும் - என்



விதியால் - எனக்கு
விளைந்த நோவு!

என்னை நோகாமல்
என் உயிர்ப்பயத்தில் - நான்
உன்னை நொந்ததுதான்
உச்சமான பிழை;

இதை -
இப்போது நான் உணர்ந்தாலும்...

உன்னளவில் - என்
உணர்வு -
பருவம் தவறிப்
பெய்த மழை!

போனது
போகட்டும்;
இனியாவது உங்கள் வாழ்வு
இளவேனில் ஆகட்டும்!

எங்கு விருப்பமோ;
எப்படி விருப்பமோ;
அங்கு வாழுங்கள்;
அப்படி வாழுங்கள்!'

என்று சொல்லி - தேரில்
ஏற்றி அனுப்பினான்...

தங்கையையும் -
தங்கை மணாளனையும் -
கஞ்சன்; கனிந்த -
நெஞ்சன்!

அடுத்த நாள் - அவன்

16 கவிஞர் **வாலி**

அத்தாணி மண்டபத்தில்
அமர்ந்து - தனது
அத்தியந்த சகாக்களிடம்...

முதல் நாள் நிகழ்வுகள் -
முழுவதுமாய்ச் சொன்னான்;

அவர்களது
ஆலோசனைகளை
வேட்டான் - அடிபட்ட
வேங்கை அன்னான்!

சுற்றியிருந்தோர்
செப்பினர் -
தீய கருத்தை; அவர்களுக்கு -
ஏய கருத்தை!

'புகழ் முரசே - கேட்டுப் பழகிய
போஜர்களின் அரசே!

உன்னை - இவ்
உலகின் கண் -

ஒழிக்க ஒருவன்
ஒளிந்து வளர்கிறானென்றால்...

விந்தையான - இந்த
விஷயத்தை - நாம்
விளையாட்டா யெண்ணினால் - அது
வினையாகக் கூடும்; விதி -
ஒருவனைச் சாடுவதென்றால்
ஒளிந்திருந்துதான் சாடும்!

பட்டணங்களில்;
பட்டி தொட்டிகளில்;
பிறந்து -
பத்தே நாள்களான...

குழந்தைகள் அனைத்தையும்





குவிப்போம் கொன்று;
அதன்பின்
அச்சமின்றி -
மன்னா! நீ வாழலாம்
மரணத்தை வென்று!

விஷ
வித்து -
வேர்விட்டு - ஒரு
விருட்சமாய் வளருமுன்...

தொடக்கத்திலேயே - அதைத்
தோண்டி எடுத்துத் -
தொலைத்துத்
தலைமுழுகி விட்டால் -

நிம்மதி;
நீயிதற்குச் சம்மதி!'

கூட இருந்தோரின் - இந்தக்
கூற்றை...

பிரமாதம் எனக் - கம்சன்
பாராட்டினான்;

நீண்ட
நாள்களுக்குப் பிறகு -
அன்று இரவுதான்
அமளியில்...

அவன் -
அமைதியாய்க் கால்நீட்டினான்!

குழந்தை இடம் மாறிய -
கொஞ்ச நாழிக்கெல்லாம் -
மாயை விலகி - கோகுலத்து
மக்கள் விழிப்படைந்தனர்;

விடிந்ததும் -
வழக்கம்போல் -
தாழிகளில்
தயிர் கடைந்தனர்!

அசோதைக்கு -
ஆண் மகவு பிறந்த சேதியை...



காற்று - வீடு வீடாகக்
கதவு தட்டிக் கூறியது;
ஊரின் உடம்பில் - ஓர்
உன்மத்தம் ஏறியது!

நங்கை நல்லாள் - யசோதையின்
நாயகன் நந்தகோபன்...

குறுநிலமாகிய கோகுலத்தின் -
கொற்றவன்; அவனொரு -
சிற்றரசு ஆயினும் - இச்
சகத்தின் கண்...

பேரரசு
பெறாத -
பெருஞ் செல்வத்தைப்
பெற்றவன்;

வைகுந்தம்
வைகும் பெருமானையே - தன்
வாரிசாகப் பெற்ற
வகையினில் பார்க்கையில்...

ஆருளர் -
அவனைப் போல் நற்றவன்?

அஃதே போல் -
அசோதையும் -
அய்யிரு திங்கள்
அடிவயிறு சரிய...

சூல்கொண்டாள்; அவளுக்கு
சனித்த மகவு வேறு; ஆனால்
மால் கொண்டாள் - அவள் தன்
மடியில் தன் மகவுக்கு மாறு;

அது -
அவள்....

எப்பிறப்பிலோ -
எப்பொழுதிலோ -
நோற்றிருந்த
நோன்பினால் எய்திய பேறு!

அவரவர்
ஆற்றிய
அவம்; தவம்;
அவற்றைத் தழுவியே...

அவரவர்க்கு
அமைகிறது
அமோகமான வாழ்வு;
அதலபாதாளத் தாழ்வு!

தேவகியின்
திருமுலையில் -
திருமால் வைக்கவில்லை - தன்
திருவாயை;

அன்னணம் வைத்து -
ஆகாயம் ஏறியவள் ஒரு மாயை!

மாலுக்குரிய -
பாலுக்கு...

கொங்கை
கொடுத்தவள் -
யசோதையென்னும்
யாய்;
தனைப் பெறாத ஒருத்தியின் -
தனத்தில் தான்...

வைகுந்த
வாசி -
வைத்தனன் - தன்
வாய்!

பாரபட்சமற்ற -
பெருமான்... 124

'ஒருத்தி மகனாய்ப் பிறந்து -
ஒருத்தி மகனாய்ப் போனான்!' என -
ஒருத்தி -
ஒண்டமிழில் பாட்டெழுத -
ஒத்தாசை செய்த -
ஒருவனென்று ஆனான்!

ஆம்!
அவனை...

அன்னணம்
ஆண்டாள் -
அழகு தமிழில் வைத்து
ஆண்டாள்!

பிறந்ததுமே -
பெயர்ந்தான் இடம்;

பாலகனான
பிற்பாடு -
பயமின்றிப்
புரிந்தான்...

விடம் கொண்ட
படம் கொண்ட
நாகத்தின் மேல் -
நடம்;

நாளும் கையாடினான் -
நவநீதக் குடம்;

அவனால்
அழிந்தது - யாதவ
நங்கையர் கொண்டிருந்த
நாலில் ஒன்றான மடம்;

அவன்
அதரம் வைத்து -
ஊதிய குழலில்
உருகி உருகிக் -

கரைந்தது
கல்லாகிய சடம்;



குளிக்கும்
குமரியர் -
ஆடை திருடி - தர
ஆகாதெனப் பிடித்தான் அடம்;

அவனே - ஓர்
அவைக் கண்...

பூவையொருத்தியின்
பூவுடல் மறைக்கப் -
புடைவைகள் அளந்து
போக்கினான் அவள் சங்கடம்;

பின்னாளில்
பார்த்தனுக்காகப் -
பிடித்தான்
பூந்தேர் வடம்;

அவ் வமயம் -
அனைத்துயிர்க்கும்...

கீர்த்திமிகு
கீதை உரைத்துக் -
காட்டினான்
கடை நாள் நடைக்கு ஓர் தடம்;
தயை கூர்ந்து -
தந்தான்...

மனம் எனும்
மர்க்கடம் -
ஓடியாடிப் பெற்ற
ஓவா வலிக்கு -
ஓர் ஔடதம் அனைய
ஒத்தடம்!

இத்துணை சித்துகள் -
இயற்றப் பிறந்த சேயை...

ஆர் என்று -
அறியவொண்ணா அசோதை
ஆண்மகவு பிறந்ததே - எனும்
அளவிலேயே மகிழ்ந்து போனாள்;
ஆளனிடமும் -

அவள் -
அதைச் சொல்லிச் சொல்லியே -
அகம் நெகிழ்ந்து போனாள்!

கொண்டாட்டம்;
கும்மாளம்; என -
கோகுலம் முழுவதும் - ஒரே
கோலாகலம்;

கும்மி;
குலவை;
கோலாட்டம்; என்றிருந்தது -
கோபியர் குலம்!

வீடெங்கும்
விளங்கின தோரணம்;
மறையவர் நாவெலாம்
முழங்கின ஆரணம்;
வீதியெங்கணும்
விரவிக் கிடந்தது -
வஞ்சியர் வாரியிறைத்த
வண்ண வண்ணச் சூரணம்!

பிறந்த குழந்தையைப் -
பார்க்கும் பேரவாவில்...

நந்தகோபனின்
நெடிதுயர்ந்த மாளிகை நோக்கி -
நகர்ந்தது
நகர்;

இந்த
இனிய காட்சியைப் -
பரீட்சித்துக்குச் சொன்னார்
பரவசத்தோடு சுகர்!

கோயில் போலிருந்த - நந்த
கோபனின் கொற்றவாயிலில்...

மாகதர்கள்;
சூதர்கள்;
வந்திகள்; என்றெலாம்
விளிக்கப் பெறும் -

126

ி.ந்தேத்துவோர்
ிசை பெய்தனர்; அந்த -
ஙகலப் பாடகர்
ங்களைப் போற்றி -
கூரயாழை மீட்டி - பாட்டு
மாலைகள் நெய்தனர்!

ந்தகோபன் - தன்
நகரில் வாழும்...

லலார்க்கும் -
இல்லார்க்கும் -
ல்லார்க்கும் -
எல்லார்க்கும் -

பேதா பேதமின்றிப் -
பேருவகையோடு வழங்கினான்...

அன்னதானம்;
சொன்னதானம்;
கோதானம்;
பூதானம்!

நீத்தார் கடன்களை
நிறைவேற்றி;
அமரர்களுக்கு ஆன



அவியை -
அக்கினி மூலம்
ஆகாயம் ஏற்றி -

பூஜை
புனஸ்காரங்களோடு -
ஜனித்த குழந்தைக்கு
ஜாத கர்மம் நடந்தது;

கனகத் தொட்டிலில்
கிடந்த குழந்தை -
கண்களைக்
கொட்டிக் கொட்டி...

விழா நிகழ்வுகளை -
வேடிக்கை பார்த்துக் கிடந்தது!

'கிருஷ்ணன்!' என்று -
கீர்த்திமிகு பிள்ளைக்கு...

பெண்டிர் -
பெயர் இட்டனர்;

'வாழி! வாழி!
வாழி!' என -
வானோரும் ஏனோரும்
வாழ்த்தி...

ஆக்கை புளகம் எய்த -
ஆனந்தப் பட்டனர்!

அதே -
அமயம்...

வடமதுரையில் உள்ள -
வன்கணாளர் -
கோகுலத்திற்கு - ஒரு
கொடியவளை அனுப்ப -

எண்ணினர்;
எண்ணியபடியே பண்ணினர்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

**நண்பர்கள்.**

திருவிழாவாக; ஆயிரத்தில்
ஒருவிழாவாக; அவனி காணாப்
பெருவிழாவாக; ஆனந்தத்தைத்
தருவிழாவாக;

கண்ணன் பிறப்பை; கருநாவல்
வண்ணன் பிறப்பை;

கொண்டாடிய கையோடு
கோகுலம் விட்டு - நந்த
கோபன் கிளம்பினான் - அவனது
கொடி பறக்கும் கனகத் தேரில்...

வடமதுரை
வேந்து -
கம்சனுக்குக்
கப்பம் கட்ட;
திறை செலுத்த வேண்டிய
தினம் சமீபித்துவிட்டதை - மா
மன்னன் அனுப்பிய
மடல் சுட்ட!

கோகுலம் - ஒரு
குறுநிலம்;
அது - கம்சனின்
ஆளுகைக்கு உட்பட்டது;

ஆதலால் - அவனை
அரசுக் கரசாய்
ஒப்புக்கொண்டு - செங்கோல்
ஓச்சவேண்டிய நிலை...

நந்தகோபனுக்கு -
நேர்ந்துவிட்டது!

வண்ணமிகு
வடமதுரை -
நகர் போய்ச் சேர்ந்த
நந்தகோபன்...

கம்சனின்
கருவூலத்தில்
கப்பத் தொகையைக்
கட்டிவிட்டு...

தான் வழக்கமாகத்
தங்கும் மாளிகைக்குப் போனான்;

நண்பன்
நந்தன் -
வந்திருக்கும்
விவரம் அறிந்து...

விரைந்து போய் - அவனை
வசுதேவன் சந்திக்க -
நந்தகோபன் - அவனை
நெஞ்சாரத் தழுவி - எதுவும்

17 கவிஞர் **வாலி**

உரைக்கத் தோன்றாமல்
உணர்ச்சிப் பிழம்பா யானான்!

சில நொடிகள் -
சென்றபின்...

வசுதேவன்
வினவினான்
நந்தனிடம்; உயிர்
நண்பனிடம்!

'நந்தகோபனே!
நட்புக்கொரு ரூபனே!

நீ
நலமா? நின் -
நாயகி
நலமா?

நாடும் வீடும் -
காடும் மாடும் நலமா?
பெற்றம் மேய்த்துண்ணும் -
பெருங்குலம் முழுதும் நலமா?

நல்லவனே!
நற்றவனே!

உன் நிழலில்
உறைகின்ற - என் முதல் தாரம்
உரோகிணி நலமா? என் மகன் -
உயிரனைய பலராமன் நலமா?

பார்த்து
பல நாள்கள் ஆயின;
பகலும் இரவுமாய்ப்
பொழுதுகள் போயின!

என்னையும்
என் மனைவி தேவகியையும் - என்
மஞ்சன் கஞ்சன் - எங்கள்
மனம்போல் வாழ விட்டுவிட்டான்;

விட்டு
விட்டாலும்...

இடிப்பாரை - உடன்
இருத்திக் கொள்ளாது - தனக்கு
இனிப்பாரை - உடன்



இருத்திக் கொண்டு...

மீளமுடியாத அளவு -
மேலும் மேலும் கெட்டுவிட்டான்;
கொலை வெறியின் -
கொடுமுடியைத் தொட்டுவிட்டான்!'

இவ்வாறு
இயம்பிய வசுதேவன் -
இறுதியாய்ச் சொன்ன
இரு வாக்கியங்களை மட்டும்...

கற்சுவருக்கும்
காது இருக்கும் - என்று
குரல் தாழ்த்திக்
கூறினான்; அப்படிக் -

கூறும்போது
கூட -
அவன்
அச்சத்தில் ஊறினான்!

வசுதேவன் வினாக்களுக்கு -
விடையிறுத்தான்...

நவில இயலாத
நல்ல இயல்புடைய
நங்கை அசோதையின் காந்தன்;
நந்தகோபன் எனும் சாந்தன்!

132

'வசுதேவனே! ஒரு -
வசையில்லா ஜீவனே!
அன்பனே!
ஆருயிர் நண்பனே!

அடியேனும்;
அசோதையும்; நின்
அன்பால் -
அருளால் நலம்;

உன் மனைவி
உரோகிணியும்; உன் -
புதல்வன்
பலராமனும்;

எங்களைப் போலவே -
ஏற்றிருக்கின்றனர் நலம்!

நண்பா! எனை -
நாளும் வருத்துவது யாதெனில்...

நீயும் தேவகியும்
நிரம்பப்பட்ட பாடு;
அவை -
அனைத்தையும்...

எழுத்தாணி கொண்டு
எழுதப் புகுந்தாலும் -
எல்லாமும் எழுத
எங்கிருக்கின்றது பனை ஏடு?

தேவகியை நினைத்தாலே -
'திக்'கென நடுங்குமென் நெஞ்சு;

அவள் பெற்ற -
ஆறு பிள்ளைகளைக் -
கடிந்ததே
கம்சன் எனப்படும் நஞ்சு!

ஏழாவதாய் - அவள்
ஏந்திய கரு - அவன்
அச்சுறுத்தலால் அன்றோ
அஞ்சு திங்களில் கலைந்தது;

எட்டாவதாய்
எட்டிய -
பெண் குழந்தையும்
படிமிசை தங்காது தொலைந்தது!

இறைவன் - உங்கள்
இருவரையும் -
இத்துணை - கொடிய
இடர்க்கண் விட்டது...

ஊழ் என
உன்னுக; ஊழ்வினை
மாறும் எனும் கருத்தில்
மன்னுக!'

நந்தகோபன் -
நவின்றது கேட்டு...

வசுதேவன்
வெகுவாக மகிழ்வுற்றான்; பின் -
வேறொன்றை வினவினான்
வெளுத்த மனது உற்றான்!

'பிரியமுள்ள நண்பனே! அசோதை -
பெற்றெடுத்த நன்மகன்...

எப்படியிருக்கிறான் -
என்று ஏதும் சொல்லவில்லையே?
அவனது நலம் அறிந்தால் -
அகலுமென் ஆயிரம் தொல்லையே!'

வசுதேவன் - இன்னணம்
வினவுகையிலேயே -
வெளிப்போந்த நீரால் - தன்
விழிகளை நிறைத்தான்;

தன் மகன்தான், அவன் - என்பது
தெரிந்துவிடக்கூடாதே என்று...

வெகு
விரைவாக
விரல்களால் - தனது
விழிநீரை இறைத்தான்!

உடனே நந்தகோபன் -
உவகை பொங்க...

'வசுதேவா! நான் -
வாங்கிய வரம் -
வந்து பிறந்தான் - என்
வீட்டில் கண்ணன்;

வாசம்
வாசம் செய்யும் -

வாரிசம் போல்
வடிவார்ந்த கண்ணன்!

அவன் பிறந்த -
அந்த நாள் தொட்டு...

அசோதை
அவள் வசத்தில் இல்லை;

அவளது
அகமெல்லாம்
ஆனது - ஓர்
அந்திமந்தாரைக் கொல்லை!

குழந்தை பிறந்ததை - உளம்
குளிரக் குளிரக் கொண்டாடிக் -
கும்மாளம் போட்டபினும் - ஓசை
குறைந்திடாமல்...

கோதண்டன் பிறந்த
கோசலம் - எனக்
கோஷமிட்டுக் கிடக்கின்றது
கோகுலம்!'

என்று - ஓர்
ஏமாப்பொடு சொன்னதும்...

வசுதேவன் - முகை
விரித்ததுபோல் சிரித்தான்;

உடனே
உளத்தில் -
ஓர் அச்சம் உண்டாக
ஒரு கருத்தை விரித்தான்!

'நண்பா!
நீ -

வரி கட்ட வந்த வேலை
விக்கினமின்றி முடிந்ததால் -
வடமதுரையை
விட்டுவிட்டு...

கிளம்பிடு - இப்பவே
கோகுலம்;
ஏனோ -
என் மனத்துள்...

விளைகிறது -

விவரம் என்னென்று -
விளங்காத - ஒருவகை
வியாகுலம்!

உன்
ஊரில் -

சில
சங்கடங்கள் -
நேர்வதற்கான
நிமித்தம் தெரிகிறது;

பகுத்துணர்ந்து
பகர முடியாதபடி -
பயம் ஒன்று
பாம்புப் படமென விரிகிறது!

இனியும் நீயிங்கு
இருப்பது உசிதமல்ல;

நான்
நினைப்பது -
நடந்துவிடக்கூடும்
நேரம் செல்லச் செல்ல!'

வசுதேவனின் -
வெருவல் கண்டு...

என்ன -
ஏது -
என்றெலாம் - வினா
எழுப்பாமல்...

நந்தகோபன்
நீங்கினான் மதுரையை;

அவன்
ஆணைப்படி
துரிதமாய் ஓட்டினான் சாரதி
தேர்க் குதிரையை!

வசுதேவனிடம் -
வினவவில்லையே தவிர...

நண்பனுக்கு
நேர்ந்திருப்பது -
எதைப் பற்றிய பயம்
என்பது...

கொஞ்சம் யோசித்ததும் - நந்த
கோபனுக்குப் பிடிபட்டது;

கம்சன் - தனது
கிங்கரர்களை அனுப்பி -
புதிதாய்ப் பிறந்த
பிள்ளைகளை...

வெட்டிக் கொல்கிறான் - எனும்
வதந்தி ஊரில் அடிபட்டது!

கண்ணனுக்கும் -
கம்சனால் -

ஏதேனும் அசம்பாவிதம்
ஏற்பட்டு விடுமோ என்று -
நந்தகோபன்
நடுங்கினான்;

இருப்பினும்
இறை துணைநிற்கும் - எனும்
நம்பிக்கையை வளர்த்து - அதன்
நிழலில் ஒடுங்கினான்!

கோகுலத்திற்கு - நந்த
கோபன் போய்ச் சேருமுன்...

பூதனை -
புகுந்துவிட்டாள்
அவ் வூருக்குள் - ஓர்
அழகிய மாதாக;

அவளது
அசாத்தியமான அழகில்...

ஆயர்குலத்து
அரிவையர்
ஆடவர் - என
அனைவரும் மயங்கத் தோதாக!

பூதனைக்கு -
பூதகி என்றும் பெயர் உண்டு;
கஞ்சன் -
கட்டளைக் கேற்ப...

பேரூர் சிற்றூரெல்லாம்
போய்ச் சுற்றித் திரிந்தாள் -
பால் கொடுத்துப்
பல பிள்ளைகள் உயிர் உண்டு!

விரும்பிய வேளையில்
விரும்பிய வடிவத்தை -
வரித்துக் கொள்வதில்
வல்லவள்;

கம்சனின் வார்த்தை - ஒரு
கணையென்றால் - அதை
வாங்கிச் செலுத்தும்
வில்லவள்;

ஆக்கை கொண்டு
அம்புவி மேல் -
அசைந்து வரும்
அமாவாசை அல்லவள்;

அசுபம் -
அசுத்தம் -
அசுரம் -
அனைத்தும் உறையும் இல்லவள்!

முறை போல்
மூக்கு; முழ -
நீளத்திற்கு நீண்டு தொங்கும்
நாக்கு;

அசாத்திய
அழலை -
நொடியில் துப்ப வல்ல
நோக்கு;

விழித்துப் பார்த்தாலே
வீராதி வீரனுக்கும் -
வரும்
வயிற்றுப் போக்கு!

இத்துணை -
இலட்சணமுள்ள பூதனை...

புனைந்தாள்
புதுக் கோலம்; கோகுலம் -
புகுந்து
புரிந்தாள் மாய்மாலம்!



(தொடரும்)

136

# கிருஷ்ண விஜயம்

21-12-03



## பூதனை.

பூதனைக்கு உண்டு - ஒரு
பூர்வீகக் கதை;

சுகர்
சொல்ல -
சிரத்தையொடு பரீட்சித்து
செவி மடுத்தான் அதை!

முன்னம் -
மூவுலகத்தையும்...

ஒரு குடைக் கீழ்க் கொணர்ந்து
ஓச்சினான் கோல்; அந்த
ஒருவன் ஆணைக்குள் நின்றன
ஒன்பான் கோள்!

அவன் -
அவுணர்களின் அரசு;
அவனைக் கண்டு வெருவிய
அமரர் கரந்து வாழ - அவன்
அமராவதி நகர் புகுந்து
அடித்தான் வெற்றி முரசு!

மன்னவன் பெயர்
மாவலி;

18 கவிஞர் வாலி

எவரும்
ஏற்றதில்லை –
மண்மிசை விண்மிசை
மாவலி நிகர் மாவலி!

இந்த மாவலி – முனம்
இருந்த மன்னன் இரணியனின்...

பிள்ளைக்குப்
பிள்ளைக்குப்
பிள்ளை; அதாவது –
பிரகலாதனின் பேரப் பிள்ளை!

சூரப் பிள்ளை;
வீரப் பிள்ளை;
தீரப் பிள்ளை;
காரப் பிள்ளை;





ஆயினும் –
ஆர்வந்து அங்கை நீட்டினும்...

இல்லையென்று
இயம்பாது –
ஈயும்
ஈரப் பிள்ளை!

இத்தகு அசுரனை
இறுக்கவும்;
அமரர்கள் அச்சமின்றி
அமராவதியில் இருக்கவும்;

நெட்டையான நெடுமால்
குட்டையானான்;
பிட்சை எடுத்துண்ணும்
பிரமசாரிக் கட்டையானான்!

நருமதை
நதிக்கரையின் –

வடபுறத்தில் – ஒரு
வடவிருட்சத்தின்கீழ் – மனைவி
'விந்தியா வலி'யுடன்

வீற்றிருந்து...

மாவலி –
மகாமகம் நிகழ்த்துகையில்...

அவனிடம் – மூன்று
அடி மண் –
யாசகம் வாங்க வந்தான்; வேத
வாசகம் வாழ்த்தும் பெம்மான்;

அவன்
அழகு கண்டு –
மனம் உருகி நின்றாள்
மாவலி ஈன்றெடுத்த செம்மான்!

ஆம்;
அவள் –
ராஜன் மகள்; பெயர் –
ரத்தினமாலா;

சின்னஞ்
சிறு –
குறளனாய் வந்தவனின் –
குழந்தை முகங்கண்டு
தவித்துப் போனாள் – சிறு
தாவணி சூடிய சந்தனப் பேலா!

மூவடி மண் கேட்டு
முன்னால் நின்றவன் – உயரமே
மூவடி; முகையவிழ்ந்த
முளரிச் சிவப்பு சேவடி!

அவன் – ஓர்
அந்தணச் சிறுவனாய்...

முப்புரி நூல் அணிந்து வந்த
முன்னூல்; அவனை –
மூச்சுமுட்டப் பாடியும்
முடியாமல் நின்றன பன்னூல்!

கீர்த்தியைக்
காட்டிலும் – அவனது
மூர்த்திதான்
முழுக்காட்டியது...

மாவலியின் –
மகள் ரத்தினமாலாவை – ஒரு
மாறுபட்ட
மயக்கத்தில்;
அவள் இருந்தாள் –
அதன் இயக்கத்தில்!

வாமனனாய்
வந்து நின்ற பாலகனைத் – திரு
வதனத்தில் – பால்
வடியப் பார்த்தவுடன்...

'இதுபோன்ற
இறையம்சத்துடன்
பிறங்குகின்ற – ஒரு
பிள்ளைக்கு...
நான் பாலூட்டும்
நன்னாளும் எந்நாளோ?' என்று –
மெலிந்து போனாள்
மாவலியின் புத்திரி அன்று;



அவள்
அவாவை –
ஈடேற்ற
ஈசன் நினைத்ததால்தான்...

பூதனையாய்ப் –
பூத்தாள் புவிமிசை இன்று!

பூதனை – வாசப்
பூதனை –

குழல் முடித்து வருகிறாள்
கோகுலம் வீதியில்;

அப்படியோர்
அழகியை – ஆரும்
அதுகாறும் பார்த்ததில்லை
ஆயர் சாதியில்!

ஆதி அந்தம்
அவள் –

ஏந்தி நின்ற எழில் வெள்ளம்
மாந்தி மாளாது; அம்மவோ!

நகரத்தார் கண்கள் – அதில்
நீந்தி மீளாது!

வெண்ணிலவை சூரியனை –
விழிகளில் வைத்திருந்தாள்;

அவை
ஆகாயம் ஏற ஆகாவண்ணம் –
விழியோடு விழியாக
வைத்துத் தைத்திருந்தாள்!

அதில் –
அதிசயம் யாதெனில்...
வெளிச்சம்
விளைக்கும் –

இரு சுடர்
இரு விழிகளில் இருந்தும் –
ஒரு சுடராலும்
ஒழிக்க முடியவில்லை...

'அடடா! சுருட்டை!' – என்றிருந்த
அவள் கூந்தல் இருட்டை;
அமாவாசையிட மிருந்து – அவள்
அடித்திருந்த திருட்டை!

தொட்டுத்
தொட்டுத் –
தொட்ட இடமெல்லாம்
தொடி தோடு தொங்கட்டான் என்று...

நகை
நட்டு;
தெறித்தது அவற்றின் தேசு –
திக்கு எட்டு!

ஒரு மாதவிக்கொடி போல் – அவள்
ஒசிந்து ஒசிந்து வருகையில்...

விம்முவது –
வடிவது;

வடிவது –
விம்முவது;

என
ஏகத்திற்கு –
நாடகமாடிக் கொண்டிருந்தது
நகில்;

அதை
அடக்கும் முயற்சியில் –
தோல்வி முகம் கொண்டிருந்தது
துகில்;

'கச்சை –
கிழியலாம்;
வெளியே – கொங்கை
வழியலாம்!'

என்று –
நின்று –
வேடிக்கை பார்த்தவர்
விழிகளிலெல்லாம் ஒரு திகில்!

'இவள் – நம்
இனத்தைச் சேர்ந்த
யாதவப் பெண் அல்ல; யாரோ ஒரு –
மாதவப் பெண்!' என்று...

ஆய்ச்சியர்
அனைவரும் –
ஆச்சரியத்தில்
ஆழ;

அவர்களை – ஏதோ ஓர்
அறியாமை சூழ;

புன்முறுவல்
புரிந்தவாறே –
பூதனை
புகுந்தாள்...

நந்தர் தலைவன்
நந்தகோபன் திருமாளிகை;

பலராமன் கண்ணன் – எனும்

142

பவுர்ணமியும் அமாவாசையும்
ஒருசேர வளரும் -
ஒரு மாளிகை!

பலராமன்
பால் நிறத்தவன்;
கண்ணன்
கார் நிறத்தவன்!

உரோகிணி வயிற்றில் -
உதித்த பலராமன்...

கண்ணனைக்
காட்டிலும் -
மூன்று மாதங்கள்
மூத்தவன்;
கண்ணனுக்கு அண்ணன் - எனும்
கீர்த்தி பூத்தவன்!

பின்னாளில்
பல தருணங்களில் -
பலராமன் எனும்
பால்...

கோபக் கனல்
காய்ச்சுகையில் பொங்கும்;

கண்ணன் எனும்
கார்...

அதை
ஆரத்தழுவ -
அது கோபம் அடங்கி
அமைதியில் தங்கும்!

அரண்மனை
அந்தப்புரத்தில்...

பலராமன்
பக்கம் படுத்து உறங்க -
கண்ணனை மடிமீது வைத்துக்
கொஞ்சிக் கொண்டிருந்தாள் -

அசோதை; அனேக ஜன்மம் -
அருந்தவம் ஆற்றிய கோதை!

கூப்பிட்ட
குரலுக்கு -
ஏனென்று கேட்க; அசோதை
ஏவிக் கூவிப் பணி கொள்ள...

அஞ்சாறு
ஆயர்குலப் பெண்டிரும் -
ஆயத்த நிலையில் இருந்தனர்
அவ்விடம்;
அப்போதுதான்
அங்கு -
புகுந்தது
பூதனை என்னும் அவ் விடம்!

'அம்மா! வணக்கம்!' என்று -
அசோதைமுன் நின்றாள் பூதனை;

அசோதை
அறிந்தாளில்லை -
அவ்வமயம்
அவளைத் தேடி வந்துள சோதனை!

பேய்ச்சி குலத்தவளின்
பேரழகில் -
ஆய்ச்சி குலத்தவளும்
ஆடிப் போனாள்; ஆம்!

ஆனானப்பட்ட
அசோதையும் -
அவளைக் கண்டு - ஓர்
அவச நிலைக்கு ஆளானாள்!

சில நொடிகள்
சென்றபின் -
'ஆர் நீ?' என்று
அவள் வந்தவளை வினவ...

பூதனை -
பொலபொலவென்று
கண்ணீரை வடித்தாள்; தனது
கவலையைப் படித்தாள்!

'நான் மதுரை; எனையடித்தான் -

நான் மணந்த துரை,

கோபத்தில்
கொதிகலன் போல் வெந்தேன்; கைக் -
குழந்தையை விட்டுவிட்டு
கோகுலம் வந்தேன்!

பச்சைப் பிள்ளைக்குப் -
பாலூட்டாததால்...

பால் சுரந்து - என்
பருத்த தனம் வலிக்கிறது;
தனத்தின் கனம்
தாளாது -
மெல்லத் தொய்ந்து
மார்புக் கச்சை சலிக்கிறது;

காம்பு துடிக்கிறது;
கடுங்காய்ச்சல் அடிக்கிறது;
மேல்மூச்சும் கீழ்மூச்சும் -
மாறி மாறி வாங்கி
சுளுவாக - இடுப்பில்
சுளுக்குப் பிடிக்கிறது!

தாயே!
தயவுசெய்து...

உன் குழந்தையைக் - கொஞ்சம்
உதவு;
இரு முலைகளிலும்
இருக்கும் முழுப் பாலையும் -
ஓர்
ஓரமாய் -
உட்கார்ந்துகொண்டு - நான்
ஊட்டிவிட்டால்...

என் மார்புக்கு - ஓரளவு
ஏற்படும் இதவு!'
பூதனை - இவ்வாறு
புகன்றதும் -
அவள்பால்
அளப்பரும் பரிவு கொண்டு...

அவளுக்கு -
அறிவுரை சொன்னாள்
அசோதைப் பிராட்டி;
ஆயர்குலப் பெருமாட்டி!

'அம்மா! உன்
அழகுக்குத் தகுந்த -
அடக்கம் உன்னிடம் இல்லை;
அவசரமாய் விடலாமா இல்லை?

கணவன் அடித்தால் - நீ
காட்டலாமா முனிவு?
ஆளன் அடித்தால் - உனக்கு
அதிலென்ன தலை குனிவு?

மனைவி கணவன் பூசல்கள் -
மழைக் காலத்து ஈசல்கள்;

நிமிட நேரப் பிரிவை
நிரந்தரப் பிரிவாய் நினைத்து -
வெளியே வந்து
வாங்கிக் கட்டிக் கொள்வதா...

ஊரார்
உற்றார் ஏசல்கள்?

என் சொல்லை
ஏற்று -
ஊருக்குப் போய்விடு; போய்
உன் பிள்ளைக்குப் பால் கொடு!'

அசோதையின் - இவ்
அறிவுரையைப் -
பூதனை
பொருட்படுத்தாமல்...

கண்ணனை - அவள்
கைகளிலிருந்து -
திடும் எனத்
துணித்தாள்;

கண்ணன் திருவாயில் - முலைக்
காம்பைத் திணித்தாள்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

**ஆண்டு நிறைவு.**

**சி**ன்னக் கண்ணன்;
செல்லக் கண்ணன்;

அறிந்து கொண்டான் - அவள்
ஆர் என்று; தான் -
வாய் வைத்திருப்பது - கொடிய
விடம் கொண்ட மார் என்று!

'கண்ணப்பா! பால் -
உண்ணப்பா!
நான் -
நீ - பால்
உண்ணக் கொடுத்துவைத்த
பெண்ணப்பா!' என்று...

பூதனை - கொஞ்சிக் கொஞ்சிப்
புகட்டினாள் பாலை;

**19** | கவிஞர் **வாலி**

உறிஞ்சி
உறிஞ்சி
கண்ணன் முலையுண்ண; அதன் –
காரணமாய் அவள் கொலையுண்ண;

ஆவியிழந்து – கீழே
ஆக்கை விழுந்து – அவள்
அலகை வடிவாகி
அகட்டினாள் காலை!

குன்றின் மீது – சிறு
கொண்டல் மேவினாற்போல்...

அலகை மிஞ்சும் – அவ்
அலகை மேனியின் மீது –
குழந்தைக் கண்ணன்
குப்புறக் கவிழ்ந்து கிடக்க –



பாய்ந்து சென்று
பிள்ளையை...

அள்ளினாள்
அசோதை –
அவளது
அன்புசால் நெஞ்சம் –

காற்றில் வைத்த
காடாவிளக்காய்ப் படபடக்க!

பேய்ப்பால் உண்ட கையோடு
பேய்ச்சியையும் உண்ட கண்ணன் –

தாய்ப்பால் உண்டபடி – அசோதை
தழுவலில் கிடந்தான்;
கம்சனால் விளைந்த – முதற்
கண்டத்தைக் கடந்தான்!

வடமதுரையிலிருந்து –
வந்து சேர்ந்த நந்தகோபன்...

விவரம் அறிந்து
வெதும்பினான்;
விழிகளில்
வெந்நீர் ததும்பினான்!

மனைவியின் –
மடியில் கிடந்த கண்ணனின்...

நீலக்குழலைப் – பாசமொடு
நீவினான்!

பின்பு –
பிள்ளையின்
முகம் முழுக்க
முத்தப் பூக்களைத் தூவினான்;

அடுத்த கணம்
அரண்மனைப் பெண்டிரின் –
அஜாக்கிரதையைச் சுட்டி
ஆத்திரம் தீரக் கூவினான்;

பேய்ச்சியின்
பிரேதத்தை –
எடுத்துக்கொண்டு போய்
எரிக்க ஏவலரை ஏவினான்!

அவர்கள்
அரக்கியின் பிணத்தை –
இழுத்துப் போய்
இடுகாட்டை ஒட்டியிருந்த –

அத்துவானத்தில் கிடத்தி
அரிந்து பல கூறுகளாக்கி –
எண்ணெய் ஊற்றி
எரியூட்டினர்;

எரிய
எரிய –
கஸ்தூரி மணம்
கமழ்வது கண்டு –
வியப்பை
விழிகளில் காட்டினர்!



பூதனையின்
பூத சரீரம் –
திருமாலால்
தீண்டப் பெற்றதால்...

வீசியது – கஸ்தூரி



வாசம்; அவளுக்கு –
வாய்த்தது – வைகுந்த
வாசம்!

கண்ணனுக்கு அசோதை
கண்ணேறு கழித்தாள்;
கருஞ்சாந்தை – ஆள்
காட்டிவிரலால் எடுத்து –
கண்ணனின்
கன்னத்தில் சுழித்தாள்!

பிள்ளையின்
பாதாதி கேசம் –

பன்னிரண்டு இடங்களில்
பசுஞ்சாணத்தினால் –
பகவான் பேர் சொல்லிப்
பொட்டுகள் இட்டாள்;

பசுவின் – கால்
புழுதியைக் கொணர்ந்து –
சிசுவின் தேகமெங்கும்
சிறுகச் சிறுகத் தூவிவிட்டாள்!

உப்பு மிளகாயைத் – தன்
உள்ளங்கையில் வைத்து – அதில்
'துப்பு' என்று – கண்ணனைத்
துப்பச் சொல்லி...

அதைக் கொண்டுபோய்
அடுப்பு நெருப்பில் போட்டாள்;

நெடி வராமல் – 'எப்படி
நிறைய திருஷ்டி?' என்று –

தனக்குத்
தானே கேட்டாள்!

நந்தகோபன்
நிறைய –
எடுபிடிகள் கெடுபிடிகள்
ஏற்படுத்தினான்...

அல்லும் பகலும்
அரண்மனையைச் சுற்றி;
அன்னணம் – ஓர்
அச்சம் –
அமர்ந்திருந்தது –
அவனது தோள்களில் தொற்றி!

பூதனை –
போய்ச் சேர்ந்தாள் பரலோகம் –

எனக் கேள்விப்பட்ட கம்சன் –
எகிறிக் குதித்தான்;
தாளாத கோபத்தில் –
தரையை ஓங்கி மிதித்தான்!

'முலையில் வாய் வைத்த
மூன்று மாதக் குழந்தை – ஈரல்
குலையில் வாய் வைத்துக்
குடித்ததா உயிரை?

மதலை – தன்
மலர் வாயை –
மத்தாக்கி
மளமளவெனக் கடைந்ததா...

பூதகியின் –
பூதவுடல் எனும் தயிரை?

அசுரப் பெண்ணை –
ஆவின் வெண்ணெய் –

என விழுங்க வல்லவன் –
என்னணம் விளங்க முடியும் –
ஒரு சிசுவாக? விரும்பினானோ –
ஒருவேளை ஒருண்மை ருசுவாக?

அறிந்து கொண்டேன்;

அவன்தான்...

என்னுயிரை
எடுத்துப் போகத் –
தரையிறங்கிய
திருமால்;

ஓராயிரம் நாமம் உடைய –
ஒருமால்!

நன்கு புரிந்தது; அங்கை
நெல்லியென நன்கு தெரிந்தது;

கோகுலத்தில் வளரும் – நந்த
கோபனின் வாரிசுதான் –
என் உயிர்க்கொல்லி; நான்
எடுப்பேன் அவன் உயிர் கல்லி!'

இவ்வாறு – உடன்
இருந்த சகாக்களிடம்...

பிரதிக்ஞை செய்து
பேசினான் கஞ்சன்;
வஞ்சன்;
நஞ்சன்;

தீய நெஞ்சன்; வசு –
தேவனின் மஞ்சன்!

அகவை ஒன்று
ஆனது –
கண்ணனுக்கு;
காயாம்பூ வண்ணனுக்கு!

அந்த நாளை
ஆசைதீர –
கோகுலம்
கொண்டாடித் தீர்த்தது;

வைத்த
வாணங்களும் –
விட்ட
வெடிகளும் –

ககன விட்டத்தின்
காரையைப் பேர்த்தது!

தோற்பைகளில் – வண்ண
தீர்த்தங்களை நிரப்பி –

ஆய்ச்சியர் –
அடுத்தவர்மேல்
பீச்சி அடித்தனர்;
ஆனந்த லாகிரியில்
ஆட்டம் போட்டு –
தங்கள் இடுப்புகளைத்
தாங்களே ஒடித்தனர்!

அசோதையும் நந்தகோபனும் –
அரண்மனையில்...

ஆசார
அனுஷ்டானங்களோடு –
அனைத்துச் சடங்குகளையும்
ஆற்றினர்;
திருமாளிகை பூராவும்
திருவிளக்குகள் ஏற்றினர்;

வேதியர்க்கும்; பிற
சாதியர்க்கும்;

பேதா பேதமின்றி
பல்வகையான –
தானங்கள் தந்து – அவர்தம்
திருவடிகளைப் போற்றினர்;

உற்றாரும்
ஊராரும் – அவ்
விழவில்
வெகுவாகக் கலந்துகொண்டு...

மஞ்சள் கலந்த
மந்திராட்சதைகளைக் –
குழந்தை கண்ணன்
குடுமியில் தூவி –

'வாழி! வாழி!' என –
வாழித் திருநாமம் சாற்றினர்!

அன்னப்பிராசனம் முடிந்து –

ஆயாசமா யிருந்த...



கண்ணபிரானின்
கண்களில் –
அரைகுறைத் தூக்கம்
அப்பிக் கிடந்தது;

அதை
அறிவிக்கும் முகத்தான் –
தூமலர் வாய் – கொட்டாவியைத்
துப்பிக் கிடந்தது!

விழா முடிந்தது;
விருந்து வெள்ளம் வடிந்தது!

இலேசாக
இருள் படர;
அந்த இருளை
அம்புலி தொடர;

அரண்மனை அடுக்களையை
அடுத்திருந்த –
காவற்சோலையில்
கட்டிக் கிடந்த –

கனகத் தொட்டிலில் – அசோதை
கண்ணனைக் கிடத்தினாள்;

சிறுகால்
சில்லென்று வீச – அது
சிசுவின்மேல்
சிலுசிலுப்பைப் பூச –

தாலாட்டுக் கச்சேரியைத் –
தாய் அசோதை நடத்தினாள்!

'ஆரோ!
ஆரிரரோ!
ஆரமுதே!
ஆராரோ!

உலக
உருண்டைக்குள் –
உதிப்பாரும் உதிர்வாரும்
உனக்கிணையாய் ஆவாரோ?

ஈச்சம் பழச்சாற்றை –
ஈரிதழில் ஈவாரோ?

ஊரார்
உளமெல்லாம் – வேலின்
கூரார் விழியழகால்
களவாடிப் போவாரோ?

உறுகண்
உறுகண் கண்டால் –
உன்போல்
உடன் வந்து காவாரோ?

ஆரோ!
ஆரிரரோ!
ஆரமுதே!
ஆராரோ!

செயிர்கடைந்து கண்விழிகள்
சிவப்பேறக் கனகனவன் –
உயிர் கடைந்து கோளரியாய்
உறுமியவா! கேழ்வரகுப் –
பயிர் கடைந்து குருவியெலாம்
பசியாறும் கோகுலத்தில் –
தயிர் கடைந்து பிழைக்கின்ற
தனிக்குலத்தில் பிறந்தாயோ!

ஆரோ!
ஆரிரரோ!
ஆரமுதே!
ஆராரோ!



கருப்பை விரலிடுக்கித்
தவ வேள்வி வேட்பதற்கு -

நெருப்பை வளர்ப்போரும்
நெடுநாளாய் உன்னுடைய -
இருப்பைத் தேர்ந்தாலும்
இருப்பிடத்தைத் தேடுகையில் -

கருப்பை குடிபுகுந்து
கவுரவத்தைக் கொடுத்தவனே!

ஆரோ!
ஆரிரரோ!
ஆரமுதே!
ஆராரோ!

அழுக்கு நிலா என்றாலும்;
அமுதத்தை எல்லியெலாம்
ஒழுக்கு நிலா என்றாலும்;
ஒரு நாள்தான் வாராமல்
வழுக்கு நிலா என்றாலும்;
வரதா! உன் வனப்பின் முன்
இழுக்கு நிலா என்றாகி
எழிலியிலே ஒளியாதோ?

ஆரோ!
ஆரிரரோ!
ஆரமுதே!
ஆராரோ!

கண்ணழகன் என்பதனால்
கண்ணனெனப் பேர் வைத்தேன்;
கண்ணனையன் என்பதனால்
கண்ணனெனப் பேர் வைத்தேன்;

கண்ணிறைந்து காண்பதனால்
கண்ணனெனப் பேர் வைத்தேன்;
கண்ணெடுத்துக் காண்பதனால்
கண்ணனெனப் பேர் வைத்தேன்!

ஆரோ!
ஆரிரரோ!
ஆரமுதே!
ஆராரோ!'

ஏடு மேய்ப்பதற்கு
எழுத்தறிவு பூத்திருக்க;
நாடு மேய்ப்பதற்கு
நாற்காலி காத்திருக்க;
வீடு மேய்ப்பதற்கு
வைகுந்தம் வாய்த்திருக்க;
மாடு மேய்ப்பதற்கு
மனமிரங்கி வந்தாயோ?

ஆரோ!
ஆரிரரோ!
ஆரமுதே!
ஆராரோ!'

அன்னையின் - இந்த
அமுதத் தாலாட்டில்...

கனிந்து
கனிந்து
கண்ணன் கிறங்கினான்; பின் -
கண்கள் உறங்கினான்!

காவற்சோலையில் -
காற்று வெளியில் -
கண்ணனைக்
கண்ணுறங்க விட்டுவிட்டு...

அசோதை - தன்
அந்தப்புரம் போனதும் -

வண்டிச்சக்கரம் ஒன்று -
வந்தது விரைந்து...

திடுதிடுவென்று
தொட்டிலை நோக்கி; அது
தூளாக்க முயன்றது
தொட்டிலைத் தாக்கி!

(தொடரும்)

சகடாசுரன்.

உண்ணவும் விடாது;
உறங்கவும் விடாது; வேறெதும்
பண்ணவும் விடாது;
பாடாய்ப் படுத்தியவாறு...

தினம் தினம்
தனது –
மனத்திற்கு
மரணம் என்னும் குளிரை –

ஊட்டியபடி கோகுலத்தில்
ஊர்ந்து கொண்டிருக்கும் –
கண்ணன் என்னும்
கருந்துளசித் தளிரை –

என்னவணமேனும் –
எவரைக் கொண்டேனும் –
கிள்ளியெறிய வேண்டுமெனக்
கம்சன் நினைத்திருக்கையில்...

அவன் கவனத்திற்கு வந்த –
அவன்தான்...

சகலவித
சாலக்குகளும் –
செய்வதில்

## 20 கவிஞர் வாலி

சமர்த்தனான சகடாசுரன்;

எருமைத் தலையை –
ஏற்கவில்லையே தவிர...

தவங்கள் புரிபவர்
தவத்திடைப் புகுந்து –
அவங்கள் புரிவதில்
அவன் இன்னொரு
மகிடாசுரன்!

ஆகா எனும்படி – அவன்
ஆகாரம்; ஓர்



# கிருஷ்ண விஜயம்

அளவில் அடங்காது – அவன்
ஆகாரம்!

'கொன்று வா!' எனக் – கம்சன்
கோருவானாயின் – அஃதைக்
கொன்று வருவான்; கொன்றதைத்
தின்று வருவான்!

ஊண் என்று – நிதம்
ஊன் தின்று – நிலம் விழுந்த
தூண் என்று – மல்லாந்து
தூங்குவான் எழுப்பும் வரை;

அவனை
அவசரமாக –

அழைத்துவர
ஆணையிட்டான்...

கம்சன் – தன்
காவலில் நிற்கும் கிங்கரரை!

அடுத்த நொடி – சகடாசுரன்
அலறிப் புடைத்துக்கொண்டு –

காற்றெனக்
கடுகி வந்தான்;
கம்சனுக்குக்
கைகூப்பு தந்தான்!

விரல்களால் – தனது
வீசையை வருடியவாறு –
பேசலானான் கம்சன்;
போஜ வம்சன்!

'சகடாசுரா! வண்டிச் –
சக்கரம் போல் உருள்;

உருளும்
உன் வேகம் கண்டு –
கோகுலத்தின் முகத்தில்
கொப்புளிக்க வேண்டும் மருள்;

நீள உருண்டு –
நீ நந்தன்மனை புகுந்தால்...

காணக்
கிடைக்கும்
கனகத் தொட்டிலில் – சிறு
கால்கை முளைத்த இருள்!

சின்னஞ்
சிறு –
குழந்தையாயிற்றே – எனக்
குமையாதே; அதன்
வனப்பில்
விக்கித்துப் போய் –

சலனமற்ற சிலையாய்ச்
சமையாதே; நான்
இட்ட பணியை
இனிதே முடிக்கும் வரை –
இரு விழிகள்
இமையாதே!

புயல்வேகத்தில்
புறப்பட்டுப் போய்...

பிள்ளை
படுத்திருக்கும் –
தொட்டில் மேல் மோது; பிள்ளை –
தொலைந்த சேதி எனக்கு நீ ஓது!

உன்னை அறிவேன்;
உன் முயற்சி தோற்காது; நீ –

தோற்பா யென்று
தொள்ளாயிரம் பேர் சொன்னாலும் –
எள்ளளவும் அதை
ஏற்காது எனது தோற்காது!'

கம்சன் – இப்படிக்
கண்ட மேனிக்கு...

சகடாசுரனின் – கொம்பை
சீவி விட்டான்;

'பூதனை உயிரைப்
புசித்தவன் உயிரை – ஒரு
சாதனை போல நீ
சாப்பிட்டு வா!' என்று...

அசோதை மைந்தனைக் கொல்ல –
அசுரனை ஏவிவிட்டான்!

கம்சனின் –
கட்டளைப்படி....

சகடாசுரன் – வண்டிச்
சக்கரம் ஆனான்;

வீதியெலாம்
வியக்க – ஆயர்
சாதியெலாம்
சிந்தை திரிந்து வியர்க்க –

உருண்டு உருண்டு
ஊர்க்குள் போனான்!

கதிரவன் தேரின் – ஓராழி
கழன்று தரை விழுந்தாற்போல்...

செவி பிளக்கச்
சத்தம் எழுப்பியவாறு –



சக்கரம் ஒன்று
சோலைக்குள் வருவது கண்டு –

அங்குளோர்
அலறி ஓடினர்;

சக்கரத்தில்
சிக்கிச் –
சக்கையாகிச்
சாகாமல் –

ஒவ்வொருவரும்
ஒளிய இடம் தேடினர்!

'அய்யோ!
அய்யகோ!
குழந்தை!
குழந்தை!' என்று...

கூவினர் சிலர்;
கூவிக் கூவிக் கேவினர் சிலர்;

சம்பித்துவிட்ட
சக்கரத்தைத் –

தடுக்க வக்கின்றி; தாம் –
தப்பவும் திக்கின்றி;
தருக்கள் மீது –
தாவினர் சிலர்!

வாயு வேகத்தையும்
விஞ்சி –
வண்டிச் சக்கரமாய்
வந்த சகடாசுரன்...

கண்ணபிரான்
கண்ணுறங்கும் –
கனகத் தொட்டிலைக்
கணத்தில் எட்டினான்;

தொட்டிலைத்
தூளிதம் செய்ய வேண்டி –
முழுபலத்தோடு
மூர்க்கத்தனமாய் முட்டினான்!

அறிந்தான்
அறிதுயில் கொண்டிருந்த அரி;

அவன்

அறிந்து கொண்டபின் –
அந்த விஷயம்
ஆகாதிருக்குமா சரி?

செம்பொன்னால் –
செய்த...

கொலுசுகள்
கொஞ்சும் –
குழந்தை கண்ணனின்
குங்குமக் கால் விரல்...

எதிர்நின்ற சக்கரத்தை
எற்றிற்று;

அடடா!
அவ்வளவுதான்!

அசுரனின்
அட்டகாசமான
அம்புவி வாழ்வு
அத்தோடு முற்றிற்று!

சக்கரமாய் வந்த
சகடாசுரன் –
சில்லு சில்லாய்ச்
சிதறுண்டதும்...

வழமையான வடிவம்
வரப் பெற்று –
உதரம் வழியே
உதிரம் வழிய –

பிலம் போன்ற
பேழ்வாய் பிளந்தபடி –
பிரேதமாய்ச் சாய்ந்தான்; எம் –
பிரான் காலால் மாய்ந்தான்!

விஷ்ணுச் சக்கரம்
வாங்கி நிற்பவனைக் – கேவலம்
வண்டிச் சக்கரம்
விழுங்குதல் சாத்தியமோ?

ஈர்க்கால் ஈட்டியை
ஈர்க்கலாம் என்னும் –
கடைந்தெடுத்த மடத்தனம்
கம்சனுக்கே பாத்தியமோ?

அசுரனின் ஆக்கை
ஆவி நீத்து –

வெட்டுண்ட விருட்சம் போல்
விழுந்ததால் விளைந்த
பேரரவம் – வண்ணப்
பெருநகரம் பூராவும் கேட்டது;

ஊர்;
உறவு; என –
வேண கூட்டம்
விரைந்து வந்து –

கண்ணன் தொட்டிலிட்ட
காவற் சோலையில் முகாம் போட்டது!

அசோதை
அலமந்து ஓடிவர;

அவளைத் தொடர்ந்து
அவளது ஆளன் –
நந்தகோபனும் பிறரும்
நெருக்கியடித்துக் கூடிவர;

கால்
கட்டை விரலைச்
சூப்பியவாறு – இளஞ்
சூரியன் போல்...

கனகத் தொட்டிலில்
கிடந்தான் –

குட்டிக் கிருஷ்ணன் – கண்கள்
குறுகுறுக்க; சின்னத்
துடையிரண்டும் நிலைகொள்ளாது –
துறுதுறுக்க;

பெரும் அரக்கனின்





பிரேதம் அருகிருக்க;

பார்த்தவர் – அதன்
பயங்கரத்தை – மேலும்
பார்த்திடப்
பிடிக்காமல்...

கும்பி –
குமட்ட அருவருக்க!

அன்னை
அசோதை –
அலுங்காமல் குலுங்காமல்
அப்படியே...

பூமி தோண்டி – எடுத்த
புதையலைப் போலே –
வாரி யெடுத்தாள்
வண்ணக் கண்ணனை;

வாய் வெடித்த
வாரிசத்தை –
வெள்கும்படி
விக்கும் கண்ணனை!

அவளது
அன்பு விழிகள் –
அருவியாய்
ஆனந்தக் கண்ணீர் வடிக்க –

'இச் இச்' சென்று
இட்டாள் –
பச்சைக் குருத்தின்
பவழக் கன்னங்களில்...

உப்பு முத்தங்கள் –
உள்நாடி உயிர்நாடி துடிக்க!

'என்ன நேர்ந்தது –
என் நிலவுக்கு?
அகவை ஈராறு மாதங்கள்
ஆன என் ஈச்ச மலருக்கு?

காவற் சோலையில் – வாவிநீர்
கறுக்கும் மாலையில் – என்
நாவற் கனியை; வாய்மலர்ந்து
நகைக்கும் பனியை;

தொட்டிலில் – தனியே
தூங்கவிட்டுப் போனது – இத்
தாய் செய்த –
தலையாய குற்றம்; நான் –
தலைகுனிய – இதனினும் உண்டோ
தலையாய அற்றம்?

பெறற்கரிய
பிள்ளைச் செல்வமே!

நீ
நிலம் தவழ்ந்தால் –
நானும் – என்
நாயகனும்...

நீ செல்லுமிடமெல்லாம் – உன்
நீழல்போல் செல்வமே!

அன்னணம் இருக்க –
அய்யா! உனை –
முதன்
முதலாய்...

நீங்கி நின்று
நான் பிழைத்தேன் இன்று;

காவற் சோலையில் – தெய்வம்
காத்து நின்றதால் – திரும்ப

டைக்கப் பெற்று
நான் பிழைத்தேன் இன்று!'

என
ஏகமாய்ப் –
புலம்பித் தீர்த்தாள்
பூவை வண்ணனைப் பெற்ற பூவை;
யதுகுலத்தார் ஏத்தும்
யசோதை என்கின்ற பாவை!

நந்தகோபன் விழிகள் –
நிலைகுத்தி நின்றன...

உயிர்நீத்த
உடலத்தின்மீது;

மண்தரையில்
மல்லாந்து கிடந்த –
சகடாசுரனின்
சடலத்தின்மீது!

அதைப் பார்த்தபடி – சற்று
ஆழ்ந்து...

யோசிக்கலானான்
யசோதை மணாளன்;
குன்றிமணி யளவும்
குறையில்லாக் குணாளன்!

"குழந்தை உயிரைக்
குடிக்க வந்த...

இந்த
இராக்கதன் –

நமனின்
நகல்;

இவனுக்கும் நமக்கும் – என்ன
இகல்?

எவன் இவனை
ஏவியவன்?

பச்சைத் தளிரின் – உயிரைப்
பறிக்கத் துணிந்த –
பாவியினும்
பாவியவன்!



வடமதுரையில் –
வசுதேவனை சந்தித்தபோது...

'தீய நிமித்தங்கள்
தோன்றுகின்றன; உடனே –
திரும்புக – உன்
திருநகருக்கு!'

என்று சொன்னது – இவற்றை
எண்ணித்தானோ?

நல்லவேளை; கண்ணனை
நாரணன் காத்தான்; தீங்கு
ஏதேனும் ஆகியிருந்தால் – நான்
என்ன வாவேனோ?" என்று...

நந்தகோபன்
நீண்ட பெருமூச்சு விட்டான் –
பிள்ளை
பிழைத்ததற்காக;

அதே நேரத்தில் –
அங்கு...

கம்சனும்
கனல் மூச்சு விட்டான் –

பிள்ளை
பிழைத்ததற்காக!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

21 கவிஞர் வாலி

திருணாவர்த்தன்.

'குழந்தை கண்ணனைக்
குறி வைத்து...

எங்கிருந்தோ
எவரோ -
எவரெவரையோ
ஏவுகிறார்களோ? அன்னணம் -
ஏவப்பட்டோர் - இங்கு
எவ்வாறோ கால்பாவுகிறார்களோ?

சீச்சீ!
சின்னப் பிள்ளையின் -
சீவனைப் பறிக்கும் அளவு
சிந்தை கெட...
ஆர்க்கு
அப்படியோர் -
அவசியம்
அவசரம் இருக்கக் கூடும்?

இல்லாததை
இருப்பதாக நினைத்தால்...

இப்போது



இதயத்தில் -
இருக்கும் நிம்மதியும்
இருக்க மாட்டேனென்று ஓடும்!

காகம் உட்கார் - பனம்பழம்
கீழே உதிர்ந்த கதை மாதிரி...

ஆரோ
அசுரன் -
ஆராலோ
அடிபட்டு...

இங்கு வந்து
இறக்கவும்;

கண்ணயர்ந்த
கண்ணன் - அந்தக்
களேபரத்தில்
கண்கள் திறக்கவும்;

சரியாக இருந்தது - என்பதே
சரி;
ஆதலால் -
அலைபாயும் நெஞ்சே! உன்
சஞ்சலத்தைக் - கீழே
சரி!'

என்று

ஏதேதோ விஷயங்களைத்
தானே – ஒரு
தராசாகி...

நிறுத்துப் பார்த்து
நிம்மதியடைந்தாள்
அசோதை;
அகன்றது அவள் வாதை!

இருப்பினும்
இவ்வூர் இடைச்சியரின் –

கண்ணெச்சில்
கண்ணன் மேல் பட்டுக்
கஷ்டத்திற்கு மேல்
கஷ்டமாக...

பிள்ளையைப்
பீடிக்கிறது என்று –
பெரிதும் நம்பினாள்;
பேதை மனம் வெம்பினாள்!





தத்தித்
தத்தி –

எழுந்து
விழுந்து –
விழுந்து
எழுந்து...

நடை பழகும்
நந்த குமாரனை...

உச்சிமுதல்
உள்ளங்கால் வரை –
வைத்தகண்
வாங்காமல் பார்த்தாள்;

'அச்சோ!
அச்சச்சோ!

அழகோ –
அழகு!' என –
அக்கணமே
அசோதை வேர்த்தாள்!

சுட்டிநிலா எனும் குட்டிநிலா –
சுவர் பிடித்து நடக்க;
குதித்துக்
குதித்து நடந்து –

குருதிச் சிவப்பேறிக்
குதிகால்கள் –

கனல் துண்டாய்க்
கன்றிக் கிடக்க;

சின்ன –
செம்பொற் சொம்புகளைக் –
குப்புறக் கவிழ்த்தாற் போன்ற
குண்டிகள் நடுவே...

பட்டுப்
பீதாம்பரக்
கோவணம் – சிறு
கோடுபோல் ஓட;

இடுப்பைச் சுற்றி
இருக்கும் –
அரைஞாண் கயிற்றின்
ஆணிமுத்துக்களும்; சற்று
மேலிருக்கும் – மணி
மேகலையின் பொற்காசுகளும்...

ஒன்றை
ஒன்று –
உராய்ந்து
உராய்ந்து –

நவரச –
நர்த்தனம் ஆட;

நெய் தடவி –
நீவி –

குடுமியாய் முடியப்பெற்ற

குஞ்சியின் மீது –

ஒழுங்காய்ப் பொருந்திய
ஒற்றை மயிற்பீலி –

தன்னைக் – கண்ணன்
தாங்குகிறான் எனும் –
தருக்கில் செருக்கில்
தள்ளாட்டம் போட;

வகை
வகையான –
திருவாபரணங்களைத்
திருமேனி சூட;

கண்ணன் அழகில்
கருத்தழிந்து கிடந்தாள்...

நந்தகோபனின்
நாயகி; வைகலும் –
கண்ணன் கீர்த்தி பாடும்
காயகி!

சில நொடிகளில் –
சுய உணர்வு வரப் பெற்று..

'தன் கண்ணே
தன் பிள்ளைமேல் படும்;
அதனால் – அவனது
ஆரோக்கியம் கெடும்!' என்று...

அவள் –



ஆய்ந்து முடிவு செய்தாள்;
வன்கண் இழைக்க
வல்லது –
தன்கண் என்றறிந்து
தன் கண்ணைத் தானே வைதாள்!

அடுத்த நாள்
அதிகாலை...

குழந்தை – எந்தக்
குறையுமின்றி –
வாழவும்; அதை
வையத்து வளமெலாம் சூழவும்;

வேண்டித் தொழ – அசோதை
விஷ்ணு கோயில் சென்றாள்;

சகஸ்ர நாமம்
செய்யச் சொல்லி –
சிரந்தாழ்த்திக் கரங்கூப்பி
சேவித்து நின்றாள்!

புளியோதனம்; ததியோதனம்;
படைத்தாள்;
ஒருநூறு சூறைத்தேங்காய்
உடைத்தாள்;
சரிகை வஸ்திரம்
சாத்தினாள்;
எட்டுமுக விளக்குகள்
ஏற்றினாள்!

மறையோர்
மந்திரித்துத் தந்த –
ரட்சையை
ராம நாமம் சொல்லி –



கண்ணன் கையில்
கட்டினாள்;
குழந்தையைக்
கீழே விடாது –
மாலையும் காலையும்
மார்போடு ஒட்டினாள்!

தானே
தெய்வமா யிருக்க –
தன்னை
தெய்வம் காக்க வேண்டி –

தன்
தாயார் –
திருக்கோயில் சென்று
தொழுததை சிந்தித்து...

குறுநகை புரிந்தான்
குழந்தைக் கண்ணன்;
குறும்புக்குப் பெயர் போன
கும்மிருட்டு வண்ணன்!

இது –
இப்படியிருக்க...

இரண்டாம் தடவையும் – தான்
இயற்றிய திட்டத்திற்கு –
இழிவு நேர்ந்ததே –
இலகுவாக அழிவு நேர்ந்ததே...

என்று – கம்சன்
ஏகமாய்க் காய்ந்தான்;

உடனிருந்து
உபதேசித்தவர்களின் மேல் –
வெகுளியும்
வெறியும் கொண்டு பாய்ந்தான்!

'ஒரு குழந்தையை
ஒழித்துக் கட்ட – உங்கள்
ஒருவராலும்
ஒல்லவில்லை யென்றால்...

தானவர் குலத்திற்கே
தலைகுனிவு;

எண்ண
எண்ண
ஏறிக்கொண்டே போகிறது
என் முனிவு!

மா வீரர்கள்;
மகா சூரர்கள்;;
மண் விண் காணா
மாயக் காரர்கள்;

இத்தகு
இசைகொண்ட –
இராக்கதர் நீங்கள்



இருக்கின்றீர்கள் நாளும்...

பக்க
பலமாக; இருந்தும்
நானில்லையே
நலமாக!

வர
வர – அதிகம்
வெளிப்படுவது – உங்கள்
வாய்சாலம்;
மற்றப்படி
மண்டியிட்டுவிட்டது – ஒரு
மழலையிடம் – உங்கள்
மாய்மாலம்!

கண்ணன் விளைந்தது
கருவுள்தான்; அன்னணம்
கருவுள் விளைந்தாலும் – அவன்
கடவுள்தான்!

காலங்காலமாய்க்
கடவுளோடு –
அசுரர்கள்
அஞ்சாமல் பொருதவில்லையா?

இரணியன்;
இராவணன்;

இந்த வரிசையில் – நீங்களும்
இருப்பதாய்க் கருதவில்லையா?

கோகுலம் சென்று – அந்த
கோபாலனைக் கொன்று –

இந்தக் கம்சனின்
இரு காதுகளிலும் – அந்த
நல்ல செய்தியை
நறவமாய்ப் பெய்ய...
வல்ல அரக்கர் – இவ்
வையத்தில் இல்லையா?
கண்ணன் எனக்குக்
காலத்திற்கும் தொல்லையா?' என...



நீண்ட உரை
நிகழ்த்திய –
கம்சன் பால்
கழிவிரக்கம் கொண்டு...

'நானிருக்கிறேன்!' என –
நின்றான் எழுந்து –
'திருணாவர்த்தன்' எனும்
தீக் கொழுந்து!

அவன் –
அசுரர்க்கெல்லாம் அசுரன்;
முணுக்கென்று கோபம் வரும்
மூர்க்கமான முசுடன்!

சகடாசுரனின்
சகா; அவன் –
செவிக்குள் – அறச்
சிந்தனைகள் புகா;

யாளியை –
யானையை – இரு
தோளினில்
தூக்க வல்ல –
அவன் பலத்தை விட – பிற
அசுரர்களின் பலங்கள் மிகா;
அவன் வருவதை
அறிந்தால்...

மாலையில்
மடலவிழ்ந்து –
சோலையில் நகும்
சுந்தரப் புஷ்பங்களும் நகா!

ககனத்தில்
காற்றாய்த் திரிவான்;
அன்னணம்
அலைந்து –
கூடார் உயிர்களைக்
கூற்றாய் அரிவான்!

'போஜ மன்னா!
போதும் புலம்பல்;

ஆகும் என்னால் – உன்
அகத்துள் இருக்கும் –
அச்சமெனும்
அழுக்கை அலம்பல்!

கணத்தில் – நான்
காற்றாய் மாறுவேன்;

மாட –
மாளிகைகள் –
கூட –
கோபுரங்கள் –

மலிந்து காணப்படும்
மாநகரம் கோகுலத்தில் –
புகுந்து
புயலாய்ச் சீறுவேன்;

நந்தன் மனையில்
நடை பழகும் கண்ணனை –
அள்ளிக் கொண்டு
ஆகாயம் ஏறுவேன்;
குழந்தையை அங்கிருந்து – கீழே
குப்புறத் தள்ளிக் கோறுவேன்!'

திருணாவர்த்தனின்
திட்டம் கேட்டு...

கம்சன்
களிப் புற்றான்; போஜ –
வேந்திடம் – அசுரன்
விடை பெற்றான்!

நந்தவனத்தில் –
நந்த குமாரனை –

மடியில் வைத்துக் கொண்டு
மாளாத வாஞ்சையுடன் –
கொஞ்சிக் கொண்டிருந்தாள்
கோபன் மணமுடித்த கோதை;
அவ் வமயம்
அவ்வூரே வெருவும்படி –
எங்கிருந்தோ
எழுந்தது பெரும் ஓதை!

திருணாவர்த்தன் – புயலாய்த்
திருநகர் புகுந்து விட்டதை...

கண்டு கொண்டான்
கண்ணன்;
தாய்மடியில் தவழ்ந்திருந்த
தாமரைக் கண்ணன்!

அடுத்த நொடி –
அசோதையின் –
மடியில் கிடந்த கண்ணன்
மலையாய் கனத்தான்;
மெல்லிய –
மலரின் இனத்தான்!

பிள்ளையின்
பாரம் –
தாங்க வொண்ணாது – அசோதை
தன் மடியிலிருந்து – அந்த
தங்க விக்கிரகத்தைத்
தரை இறக்க...

கணத்தில் – புயல்
காற்றாய் வந்த திருணாவர்த்தன் –
கண்ணனைக் கவர்ந்து கொண்டு
ககனத்தில் பறக்க...

தம்பித்து நின்றாள்
தாய்; எனவே
வார்த்தையை இழந்தது
வாய்!

(தொடரும்



168

# கிருஷ்ண விஜயம்

**புயலும் –**
**புயல் வண்ணனும்.**

பொல்லா அரக்கன் –
புயலாக;

நீர்
நிலைகளின்...

மடையெலாம்
மளமளவென –
உடைப்பெடுத்து
ஊர்முழுக்கக் கயலாக;

சேறும்
சகதியுமாய் –
வீதிகளே
வயலாக;
சேதப்படுத்துவதே – சூறையின்
செயலாக;

விண்மாரி யின்றியே – ஊர்
வெள்ளத்தில் விழ;
மண்மாரியோ என
மயங்கும்படி –

புழுதிப் படலம்
பூமியில் எழ;

இருந்த விருட்சமெலாம்
இறக்கை முளைத்து வான்ஏற;

தூசி
தும்பெல்லாம்
வீதி விட்டு – ஊரவர்
விழியேற;

கோபர்கள் வசிக்கும்
கோகுலத்தின்
சுந்தர கோலம் – ஆனது
சுந்தரகோலம்!

வாரி நிறத்து
வண்ணக் கண்ணனை –
வாரி எடுத்து
வான் பறந்த திருணாவர்த்தன்...

குழந்தை
குரல்வளையைக் –
கொடூரமாய் நெரித்துக்
கொல்ல முயலுகையில் –

எம்பிரான் கண்ணன் – தன்
எடையைக் கூட்டினான்;

மலைக் கனம் – என
மதலைக் கனம் ஆனதும் –
தலைக்கனம் பிடித்த

22 கவிஞர் **வாலி**

தருக்கன்...

பிள்ளையைப்
பிய்த்தெறிவதில் –
கடும் முயற்சி
காட்டினான்!



அதற்குமேல்
அவனை விட்டு வைத்தல்...

தவறு எனத்
தீர்மானித்துக்
கண்ணன் – அசுரனின்
கழுத்தை இறுக்கினான்;

ஈரத் துணியை
ஈரம் போகப்
பிழிதல்போல் – அவன்
பிடரைப் பிடித்து முறுக்கினான்!



'அய்யோ! அய்யோ!' என
அசுரன்...

விழிகள்
வெளிப் பிதுங்க;

மெல்ல
மெல்ல
மூச்சுக் காற்று
மூக்கினின்றும் ஒதுங்க;

கதறினான்;
பதறினான்;
கழுத்தைக்
கட்டியிருக்கும் –
கண்ணனைக்
கை கழுவ எண்ணி உதறினான்!

அவனால்
அது –
முடியவில்லை; அவனை
முடித்தது அசோதை பிள்ளை!

உடனே
ஊரில் வீசிய புயல்...

ஓய்ந்தது; அமைதி
வாய்ந்தது;
புழுதிப் படலம் – திரும்ப
பூமியில் தோய்ந்தது!

'எங்கே கண்ணன்?
எங்கே கண்ணன்?'
என
எல்லோரும் தேடிவர...

கோகுலத்தின் – எல்லைக்
கோட்டருகே –

வெட்ட வெளியில் –
விளையாடிக் கொண்டிருந்தான் –
குட்டிக் கண்ணன்; படு –
சுட்டிக் கண்ணன்!



'அப்பா! கண்ணப்பா! மீண்டும் –
அடைந்தேன் என் கண்ணப்பா!'

என
எடுத்து –
அசோதை
அவனை...



முத்த வெள்ளத்தில்
முக்கி எடுத்தாள்;
விசனத்திற்கு
விடை கொடுத்தாள்!

அருகில் – உயிர்
அற்றுக் கிடந்த அசுரனை...

நகரத்தாரும் –
நந்தகோபனும் –
கண்டு பயந்தனர்; பிழைத்த –
கண்ணனை எண்ணி வியந்தனர்!

'அழகிய கண்ணனுக்கு –
ஆபத்து நேரும் காலமெலாம்...

தெய்வம் வந்து
தீர்க்கிறது இடரை;
எனவே
எல்லா ஆலயங்களிலும் –
ஏற்றுங்கள்
ஏராளமான தீபச் சுடரை!'

என்று – தன்
ஏவலர்க்கு –

கட்டளையிட்டான் – நந்த
கோபன்; அது கேட்டு –
களங்கமின்றிக்
'களுக்'கென்று சிரித்தான் –
வைகுந்தம் விட்டு
வையம்வந்த பதுமநாபன்!

மூன்றாம்



முறையாக –
மூக்குடைந்து போன
முனிவில் இருந்தாலும்...

கம்சன் – கொஞ்ச
காலத்திற்கு – இந்த
விஷயத்தை
விட்டுப் பிடிக்க எண்ணினான்;

வேறு
விதமாக...
எப்போது
எவ்வழியை –
ஏற்கலாம்
என்று யோசனை பண்ணினான்!

அவசரப்பட்டு
அவசரப்பட்டு –
அவன்
அடிவாங்க விரும்பவில்லை;
ஆற அமர
அவன் ஆலோசித்தும் –
அரிய சிந்தனை எதும்
அவன் புந்தியில் அரும்பவில்லை;

ஆயினும் –
அவன் மனம்...

கோகுலத்தையே – குறிக்
கோளாகக் கொண்டு – அங்கேயே
முகாமிட்ட பின் – வட
மதுரைக்குத் திரும்பவில்லை!

அதற்குக் காரணம் –
அவனது கணக்கில் –

அசோதையின்
அருமைப் பிள்ளை –
பாலன் அல்ல;
காலன்!

அத் தகவல் –

அவனுக்கு....

நாரதர்
நவின்றது;
மாயை
மொழிந்தது;
ஆதலால் தான்
அவனது –
மனத்திலும் முகத்திலும்
மரண பயம் வழிந்தது!

வாரம்;
மாதம்;
வருடம்; என –
வழி நடந்தது காலம்; அது –
போகும்
போக்கில்
புனைந்தது – இரு
பிள்ளைகளுக்கும் புதுக் கோலம்!

ஏழ்ந்த நிலைமாறி –
ர்நடையும் மாறி –
ஆ யாடும்
அ ரந்து அகவையை எட்டினர்...

இல்வண்ணனும்; அவன்
இ னவன் கண்ணனும்!

அவரும்
அ டச்சியர்க்கு
ஓங் டம் ஆயினர்; அவர்கள்
ஓலெங்களுக்குப் போயினர்!

அ ாமனும்
அ கிருஷ்ணனும்
ம்பாலான
'அ ழுதுகளை –
அம்
அ வியரோடு
அ தேனர்; அவர்கள்
கடைந்து
அவ களுக்குள் –



வைத்திருக்கும் வெண்ணெயை
வழித்தனர்;
அவர்கள் இல்லத்து
ஆசார வாசலில் –
அழகாயிட்ட கோலங்களை
அழித்தனர்;
கோபிக்காமல்
கோபியர் – அந்தக்
குழந்தைகளுக்குக்
கணணேறு போகவேண்டி...

கன்னங்களில் –
கருஞ்சாந்தால் சுழித்தனர்!

பொதுவாகப் –
பின்னவனும் முன்னவனும்...

ஊரார் பிள்ளைகளாகவே
உலா வந்தனர்; ஊரவர்க்கு –
உவகை தந்தாலும் – கூடவே
உபத்திரவமும் தந்தனர்!

கோபியர் சிலர்
கோபாலன் மீது –
கூடை கூடையாய்க்
குற்றம் சாட்டினர்;
பட்டியலிட்டு – அசோதையின்
பார்வைக்கு நீட்டினர்!

'அம்மா! உன்
அருமந்த புத்திரன் –
கண்ணன் இருக்கிறானே
கண்ணன் – அவன்
கள்ளர்க் கெல்லாம் – மேலான
கள்ளன்!

அவன் – எங்கள்
அகம் புகுந்து...

செய்யும்
சேட்டைகளை
சொல்லி மாளாது;



சொல்லாமலிருப்பினும் தாளாது!

மாடு கறப்பதற்கு
முன்னதாகவே –
கன்றை அவிழ்த்துக்
குடிக்க விடுகிறான்;

கேள்வி –
கேட்டால்...

சரியான
சமயம் பார்த்து –
சாணத்தால் – எங்கள்
சேலைகளில் கோலம் இடுகிறான்!

தயிர்த்
தாழிகளையும்;
பால்
பாத்திரங்களையும்;

ஒட்டச் சுரண்டி –
உண்ணுகிறான்;

விஷயம் – எங்களுக்கு
வெட்ட வெளிச்சமான பின்...

அவனை
அழைத்து விசாரித்தால் –
அப்பாவி போல்
அபிநயம் பண்ணுகிறான்!

உயரத்தில்
உறியில் வைத்தாலும்...

நண்டுஞ் சிண்டுமாக
நாலஞ்சு சிறுவர்களோடு வந்து –

ஒருவர் மேல்
ஒருவரை உட்கார்த்தி –

இவன் மேலேறி – உறியில்
இருப்பதைத் திருடுகிறான்;

பாய் போட்டுப்
பகல் உறக்கத்தில்
இருக்கும் நாங்கள்
இடையில் விழித்து விடாமல்...

அவ்வப்போது
அழகழகான –
மயிலிறகால் எங்கள்
மேனிகளை வருடுகிறான்!

கிறக்கம் வர – எங்களுக்கு
உறக்கம் வர....

அவன்



அவன் சகாக்களோடு –

மூக்கு
முட்ட –
தின்று
தீர்க்கிறான்; இன்னும்
எங்கெங்கே என்னென்ன – என்று
எட்டி எட்டிப் பார்க்கிறான்!

போதாக் குறைக்குப்

பொய் சொல்லுகிறான்;
உண்மையை
உள்ளே விழுங்கி மெல்லுகிறான்!

பொய் சொன்ன வாய்க்கு
போஜனம் –
எப்படித்தான் கிடைக்கிறதோ?
எந்த தெய்வம் படைக்கிறதோ?

அம்மா! உன்
அருமைப் பிள்ளையை –
நாலு தட்டு தட்டிவை; இல்லை –
நடுக்கூடத்தில் கட்டிவை!

அரண்மனை மாதிரி வீடும்; தினம்
ஆறு குடம் கறக்கும் மாடும்;

இங்கே
இருக்க; உன் மகன்
எங்கே எது கிடைக்குமென்று
ஏன்...

ஆலாப் பறக்கிறான்? எங்கள்
அடுக்களையைத் திறக்கிறான்?'

இன்னணம் – கோபியர்
இடித்துரைத்துச் சென்றதும்...

அசோதை – கண்ணனை
அடிப்பதற்கு –
ஓங்குவாள் கையை; அவன்
ஓவென்றலறிச் சொல்வான் பொய்யை...

அவள்
அடிக்கு முன்பே...

'அம்மா! வலிக்கிறது!
அம்மா வலிக்கிறது!' என்று;
அவ்வளவுதான்;
அசோதை...

அவனை
அள்ளியணைத்து –
வாஞ்சை பொங்க
வினவுவாள் –

'எங்கே வலிக்கிறது?
எங்கே வலிக்கிறது?' என்று!

'அம்மா! நான் சொன்னேன் –
சும்மா!' என்று –

சிரிப்பான்
சேய்; அதில் –
தடுக்கி விழுவாள்
தாய்!

ஒரு நாள்
ஒரு பையன்
ஓடி வந்து – அசோதைக்கு
ஒரு தகவல் தர...

அவள்
அக்கணமே –
கண்ணனைக்
கையும் களவுமாய்ப் பிடித்து...

'வீதி மண்ணைத் தின்றாயாமே?
வாயைத் திற!' என்றாள்;
வாயைத் திறந்தான்
வாசுதேவன்;
அசோதை –
அதிர்ந்து போய் நின்றாள்!

*(தொடரும்)*



## வாய்க்குள் – ஒரு விசுவரூபம்!

பறவைமேல் ஊரும்
பரமாத்துமா; பால் –
பரவைமேல் உறங்கும்
பரமேட்டி;

கறவை மேய்க்கவும்;
கம்சனை மாய்க்கவும்;
காசினி இறங்கினான்; பேர் –
கண்ணனெனப் பிறங்கினான்!

ஒரு
கருமூலம் வந்த
திருமூலம் – வாய்திறந்து
காட்டியது தனது
கருவூலம்!

பூ மேய்த்துப்
புரக்கும் மாதவன் – ஆனான்
ஆ மேய்க்கும்
ஆய்ப்பாடி யாதவன்!

அசோதை – அதனை
அறியமாட்டாள்;
ஆதலால்தான்
'ஆக்காட்டு' என்று –
அன்பு மகனை
அவள் கேட்டாள்!

'வெண்ணெய் உண்ட வாய் –
மண்ணை உண்டிருக்குமோ?' என்று...

ஐயை
ஐயம் கொண்டாள்; அன்னணம் –
ஐயம் கொண்ட
ஐயை –
ஐயன் வாய்திறக்கவும்
ஐயன் வாயில் வையம் கண்டாள்!

வியப்பில் –
விதிர் விதிர்த்தாள்;
வியப்பில் விளைந்த
வெருவலில் –
வியர்ப்பை
வெகுவாய் உதிர்த்தாள்!

திருமாலின் –
திருவாய்க்குள்...

ஊழியில்
உலகெலாம் –
உண்டு
உமிழ்ந்திடும் –

ஓதற்கரிய பெம்மானின்
ஒரு வாய்க்குள்...

பூவுலகு பூராவும்



புலப்பட்டது;
அனைத்தும்
அவனுள் –
அடக்கம் என்பது
அச்செயலால் பலப்பட்டது!

அடடா! அந்த –
அற்புதம்தான் என்ன!
நான் கற்ற – விரல்
நகத்தளவு தமிழ் –
போதுமா – அந்தப்
பொன்னெனுங் காட்சியைப் பன்ன?

வண்ணப் பீலி – தலைமுடியில்
வாங்கி வைத்த வனமாலி –
வாய்க்குள் காட்டினான் – ஒரு
விசுவரூபம்; அதை –
உளக் கண்ணால் –
உணர்ந்து கண்டாலே –
உலர்ந்து போகும் – நம்
உடன்வரும் வெய்ய பாபம்!

ஒன்றன் பின்
ஒன்றாய் –
எத்துணை!
எத்துணை!

வாரிகள்;
வரைகள்;
வாவிகள்;
வனங்கள்;

நாடுகள்;
நகரங்கள்;
நாஞ்சில்கள் கீண்டும் –
நன்செய்கள்; புன்செய்கள்;
நாஞ்சில்கள் காக்கும் –
நெடிய மாடங்கள்; கூடங்கள்;

காவற் சோலைகள்;
கல்விச் சாலைகள்;
கன்னல் ஆலைகள்;
கானல் பாலைகள்;

கரிகள்;
பரிகள்;
அரிகள்;
நரிகள்;

கொண்டல் தடவி –
கொஞ்சும் அடவி;
குருகு; குருவி;
குளிக்கும் அருவி;

இன்னோரன்ன; விரியும் –
இன்னும் பன்னப் பன்ன!

சீவன் உள்ளவை;
சீவன் அற்றவை;
சித்துகள்; அ –
சித்துகள்;

இத்தியாதி...
இத்தியாதி...

கோபாலனின்
கொவ்வைச் செவ்வாய்க்குள்...

மேலுலகு;
கீழுலகு;
என இருக்கும் – ஈர்
ஏழுலகு விரிய –

அதிசயங்கள்;
ஆச்சரியங்கள்;
அடுக்கடுக்காய்
ஆரம்பித்தன தெரிய!

இரும் விசும்பில் –
இருக்கும்...

இரவி;
இந்து;
இவை
இரண்டைத் தவிர...

வடமீன் எனப்படும்
வசிட்டன் மனைவி அருந்ததி;
உத்தான பாதனின்
உத்தம புத்திரன் துருவன்;

இவர்கள்
இருவரும் –
ஒருசேர மின்னினர்

ஒருகோடி உடுக்கள் நடுவில்...

தூய கற்பில்
தூசி படாத –
பருவ நட்சத்திரமாகவும்;
துருவ நட்சத்திரமாகவும்!

முத்தொழில் புரியும் –
மூவர் தெரிந்தனர்;
முப்பத்து –
முக்கோடி தேவர் தெரிந்தனர்;

அசுவத்தாமன்;
மாவலி;
வியாசன்;
அனுமான்;
விபீடணன்;
கிருபாசாரியன்;
பரசுராமன்;

எனும் சிரஞ்சீவிகள் –
எழுவர் தெரிந்தனர்;

இந்திரன்;
அக்கினி;
யமன்;
நிருதி;
வருணன்;
வாயு;
குபேரன்;
ஈசானன்;

எனும் திசைக்காவலர் –
எண்மர் தெரிந்தனர்!

அத்ரி;
வசிட்டர்;
கச்யபர்;
கெளதமர்;
பரத்வாஜர்;
விஸ்வாமித்ரர்;
ஜமதக்னி;

எனும் – ரிஷிகள்
எழுவர் எதிர்வந்தனர்;
வானோர்
வாழித் திருநாமம் பாடி – அந்த

மகரிஷிகளுக்கு
மரியாதை தந்தனர்!

வியனுலகத்து –
விருட்சங்களான...

சந்தானம்;
தேவதாரம்;
கற்பகம்;
மந்தாரம்;
பாரிஜாதம்;

ஆகிய
அஞ்சும் –
தண்ணிழலைத்
தரையில் பரப்ப...

காமதேனுவும்; அதன் –
கன்று நந்தினியும்; அந்த –
விருட்சங்களிலிருந்து
விழுந்த தழைகளை –
வாயார உண்டு
வயிற்றை நிரப்ப...

அமரர்;
அசுரர்; பால்
ஆழியைக் கடைந்த நாளில்
அதில் தோன்றிய...

விண்வேழம் என்றிருக்கும்
வெண் வேழம் –
'அயிராவதம்' – நான்கு கொம்பொடு
ஆடிவர;
அஃதே போல் – பால்
ஆழி பயந்த...

விண்புரவி என்றிருக்கும்
வெண்புரவி –
'உச்சைச்சிரவம்' – உவகை மேவி
ஓடிவர;

நாடகத் தரம்பையர்
நால்வரான...

உருப்பசி;
மேனகை;
அரம்பை;

திலோத்தமை;

யாவரும் –
யட்சகானம் பாடிவர;
பாட்டோடு – கிம்புருடரின்
பல்லிய நாதமும் கூடிவர;

அமராவதி நகரின் –
அழகிய வீதியில்...

புரந்தரன்
பூந்தேரில் உலாவர; அவன்
இடப்புறத்தில்
இந்திராணி என்னும் நிலாவர;

உம்பர்
உலகத்து –
நிகழ்வுகள் யாவும்
நிதர்சனமாகத் தோற்றின...

வாசுதேவன்
வாய்க்குள்; அவை
திகைப்பை ஊட்டின
தாய்க்குள்!

அது
அடங்குமுன்...

சதுர்முகனின்
சத்தியலோகக் காட்சிகள்
விரிந்தன; அசோதையின்
விழியில் அமுதம் சொரிந்தன!

ஏடெடுத்து
எழுதுதல் போல் – கபால
ஓடெடுத்து
ஒவ்வோர் உயிர்க்கும் –

விதியெழுதும்
விரிஞ்சன்...

வெண்டாமரையாள்
வீணை நரம்பை விரலால் தடவி –
வழங்கும் மெல்லிசையால்
விழிகள் மயங்குகிறான்;
மயங்கி – கலை
மடந்தையோடு முயங்குகிறான்!

அஃதேபோல் – பனி
அடர்ந்த...

கயிலையில் – முக்
கண்ணன் கூத்தாட;
மலையரையன் மகளின்
மருங்கினைக் கோத்தாட;

சிவகணங்கள்
சிரக்கம்பம் செய்கின்றன;
நாதமழையும் கீதமழையும்
நெடுகப் பெய்கின்றன!

வைகுந்தத்தில் –
வைனதேய வாகனன்...

அரவு
அணைமீது –
ஒருகை தலைக்குக் கொடுத்து
ஒருக்களித்தவாறு படுத்து –

துயில்கிறான்; பொய்த்துயில் –
பயில்கிறான்!

சீதக்கமலம் நிகர்த்த
பாதக்கமலம் தன்னை –

ஸ்ரீதேவி;
பூதேவி;
நீளா தேவி;

மூவரும்
மாற்றி மாற்றிப் –



பதமாக இதமாகப்
பிடித்து விடுகின்றனர்; மேலும்
பிடித்து விடப்
பிரியப் படுகின்றனர்!

நித்ய சூரிகள்
நீள நின்று –

நாலிரண்டெழுத்தை
'நாராயணா நாராயணா' என்று...

பாராயணம் செய்கின்றனர்;
பரவசத்தில் நைகின்றனர்!

இதுகாறும் –
இடையறாது –
யாவும் கண்ட
யசோதை...

கண்ணன் வாய்க்குள்
கண்டாள் தன்னையும்;

தன்முன்
திருவாய் திறந்து காட்டும் –
பத்தரை மாற்றுப்
பசும் பொன்னையும்!

அன்னையின்
அவச நிலை கண்டு –
சின்னக் கண்ணன்
சித்தம் துடித்தான்;
மறு நொடியே – ஒரு
மாயை போல் – தன்
மாதா பார்த்தவற்றை
மறக்கடித்தான்!

தன் கன்று – மண்
தின்னவில்லை என்று...

அசோதை
அமைதி யானாள்;
இப்படி –
இல்லாததும் பொல்லாததும் –
தன் மகன்மேல் சொல்லும்
தெருப் பிள்ளைகளை...

வைது கொண்டே –

வீட்டுக்குள் போனாள்!

'ஓயாது போலிருக்கிறதே – இந்த
ஓமலிப்பு!'

என்று
எண்ணினாள்; மீண்டும்
கண்ணனுக்குக்
கண்ணேறு கழிக்கும்
காரியங்களைக்
கவனமாகப் பண்ணினாள்!

இந்த –
இடத்தில்...

பரீட்சித்து மன்னன் – சுகப்
பிரம்மத்திடம் – ஒரு
வினாவைக் கேட்டான்;
விடையை வேட்டான்!

(தொடரும்)



# கிருஷ்ண விஜயம்

184



## துரோணரும் – வசுமதியும்.

ஸ்ரீமத் பாகவதத்தை –
ஸ்ரீ சுகப்பிரம்மம் சாதிக்க....

கங்குலும் பகலும்
கண்ணுறக்கமின்றிக் –
கேட்டுக் கொண்டிருக்கும்
காவலன் பரீட்சித்து...

எவ்வப்போதெலாம் – ஐயம்
எழுகிறதோ –
அவ்வப்போதெலாம் – மிக்க
அடக்கத்துடன்...

அஞ்சுகமுகத்து
அருந்தவசியிடம்
கேட்பான் – தனக்குக்
கிளத்தல் வேண்டி;
இப்பொழுதும் – அந்த
இயல்பை ஒட்டியே...

பிரார்த்தித்தான்
பகவான் சுகரிடம் – தன்
பால் அவர்க்கிருக்கும்

**24** கவிஞர் **வாலி**

வாய்க்குள்
வையம் காட்டிய
வரதனின் – லீலா
வினோதங்களில்...

தன்னையே இழந்திருந்த
தவசி –

வேந்தன் –
வினாயெழுப்பியதை ஒப்பினான்;
சக்கரவர்த்தி – தன்
சமுசயத்தைச் செப்பினான்!

விளக்க வொண்ணாது –

தொல்லைக் கெல்லாம்
தொல்லையாய் நிற்கும்
தொல்லைப் பொருள்; தொழுவார்தம்
தொல்லை தொலைக்கும் திருவருள்;

ஆரம்பம்; நடு;
அந்தம்; ஆகிய
மூன்றும் அற்ற –
மூலச் சோதி;



'சுத்த –
சுயம்புவாய்ச் –
சுடரும் –
சுகப் பிரம்மரே!

முனிவு மேல் முனிவு கொண்டு –
முனிவை வென்ற முனிபுங்கவரே!'

என்று –
எங்கே –
என்னனம் –
எதனிடம்...

விளைந்ததென்று – சுருதிகளும்

தங்கள்
தந்தையார் –
தொகுத்துத்
தந்த...

இருக்கு முதலான – ஈர்
இரு மறைகளாலும்
முழங்க முடியவில்லை – அதன்
முழுக்கியாதி;

வலம் வரும்...

பரம
பதத்தின் கண் –
எழுந்தருளி யிருக்கும்
எட்டெழுத்து; அதன் –
ஏற்றம் கூற
ஏதெழுத்து?

அத்தகு –
அருளார்ந்த...

ஆரணனை;
பூரணனை;
காரணனை;
நாரணனை;

சதா –
சர்வகாலம் –
சிந்தித்து
வந்தித்து...



அஞ்சவித்து; பகை
ஆறவித்து; பிறப்பு
ஏழவித்து; பரமபதம்
எட்டும் பிரயத்தனத்தில்...

அருந்தவம்
ஆற்றவல்லார்க்கே –
அவனை
அடைதல் அரிதாயிருக்க –



நந்தகோபனும்; அவன்
நாயகியும்; தமது
நந்தனாய்ப் பெற்ற விந்தை –
நேர்ந்தது எவ்வாறு?

அண்ட சராசரங்களுக்கும் –
அம்மையாய் அப்பனாய்
அமைந்திருக்கும் – அவ்
ஆராவமுதன்...

'அம்மா! அப்பா!' என்று
அவர்களை அழைப்பதற்கு –

அவர்கள் என்ன செய்து
அடைந்தனர் அப்பேறு?

தொல்மறை
தொடாதவனை; மூன்று –
பத்தினியார் விரல் தவிர
பிறர் விரல் படாதவனை;

அசோதை
அள்ளி எடுக்கிறாள்; தன் –
முந்தானை நீக்கி
முலை கொடுக்கிறாள்;

'உண்! உறங்கு!' என்று –
விதிக்கிறாள்;
உடம்பெல்லாம் –
உப்பு முத்தம் பதிக்கிறாள்;

கடவுள் – அவளது
கைக்குழந்தையாக...

அசோதை என்னும்
ஆயர்குலப் பாவை – முனம்
ஆற்றி முடித்த
அறங்கள்தாம் யாவை?'

புரவலன்
பரீட்சித்து –
கேட்ட கேள்விகளுக்கு...

ஒரு –
வரலாற்றையே
விடையாகச் சொன்னார் –
கீர்த்திமிகு சுகர்;
கிளி முகர்!

"முன்னொரு காலத்தில் – ஒரு
முதுவனத்தில்...

துரோணர் என்றொரு
தீர்த்தர் இருந்தார்;

வைகலும் –
வைகறையில் – அவ்
வைதிக

வைணவர் –

வைகுந்தம் தனில்
வைகும் –
வைனதேய வாகனனுக்கு
வைதாளி பாடாமல்...

திலமளவு
தீர்த்தம் அருந்தார்!

இறை;
மறை;
இவை
இரண்டின் மாட்டு – அவர்
இழந்திருந்தார் தனை; அறம் –
இன்னதென்று –
இசைத்தவா றியற்றினார் வினை!

வேள்வி
வேட்டல்;
வானம் வரை – சாம
கானம் நீட்டல்;

தன்னைத்
தானே –
ஆன்ம விசாரம் கொண்டு
ஆரென்று –

கேள்வி
கேட்டல்;
வேணும் அளவு பொருள் ஈட்டல்;
வேண அளவு அருள் ஈட்டல்;

ஆறாம்
அறிவை –
சத்தியத்தில்
சாணை பிடித்துக் கூர்தீட்டல்!

இத்தகு
இயல்புகள் உடைய –

துரோணருக்குத்
துணை நின்றாள் – அவரது
வாழ்க்கைத் துணைவி வசுமதி;
வான்மதி நிகர்த்த ஊன்மதி!

அநசூயை;
அருந்ததி;
அவர்கள் அனைய
அரிய சதி;

கற்பு பொற்பு – இரு
கரைகளாய்க் கொண்டு
கானில் சஞ்சரித்த –
கங்கா நதி!

இருவரும் – உலக
இச்சையை விட்டனர்;
நீர்க்கோலம் அனைய
நிலவுலக வாழ்வை விடுத்து –
நித்திய சூரிகளாய்த் திகழ
நிர்ணயம் செய்துகொண்டு...

அன்னபானமின்றி
ஆண்டுக்கணக்கில் –
ஈடற்ற தவத்தில்
ஈடுபட்டனர்!

பற்றற்றான் மீது
பற்று வைக்க; அன்னணம்
பற்று வைத்த மேனிகளில் – மண்
புற்று வைக்க;

நான்முகன் – ஒரு நாள்
நேர் வந்து நின்றான்;
'என்ன வேண்டும்?'
என்றான்!

இருவரும் – விழிநீர்
இழிய...

விரிஞ்சனை
வணங்கினர் –
வரமெதும்
வேண்டாது; ஆயினும் –

நான்முகன்
நல்கினான் –
நல்ல வரம்; அந்த
நல்ல வரத்திற்கு நிகர்...

வையமிசை –
வேறேது?

'துரோணரே!
துரோணரின் துணையே!
கடுந்தவம் புரிவதிலும்
கருத்தொருமித்த இணையே!

திருமாலையே –
திருமகனாய்ப் பெற்று...
வளர்க்கும் பேறு – உங்களுக்கு
வாய்க்கப் போகிறது;

வந்த பிள்ளை – தான்
வைகுந்த வாசன்
என்றுணர்த்தாது – உங்களை
ஏய்க்கப் போகிறது!'

இன்னணம் –
இயம்பி...
மலரவன் போனான்
மறைந்து;

முனிவரும்
முனிபத்தினியும் –
நின்றனர்
நெஞ்சு நிறைந்து!

பரீட்சித்து மன்னா!
பிரமன் சொன்னால் –
பொய்த்துப்
போகுமோ பின்னால்?

காலம் கடந்தது; எண் –
கண்ணன் சொன்னது நடந்தது!
துரோண முனிதான்
துலங்குகிறான் நந்தகோபனாக;

மாமுனியின்
மனை –
வசுமதிதான்
விளங்குகிறாள் அசோதையாக!"

வேந்தன்

வினாவிற்கு –
விரிவான
விடையைத் தந்துவிட்டு...

பாகவதத்தை – மீண்டும்
போதிக்கலானார் –
பரப்பிரம்மம் – நிகர்த்த
சுகப்பிரம்மம்!

அடுத்தடுத்து –
அடுத்தடுத்து –

கண்ணபிரானின்
கணக்கற்ற லீலைகளைக்
காது குளிரக் குளிரக்
கேட்டான்...

பரீட்சித்து – இரு

ஒரு நோக்கமும்
இல்லாமல் வெறுமனே
இலக்கியத்தைப்
படிப்பதைவிட, நல்ல
விவேகத்துடன்
கைத்தொழில் பயிற்சி
பெறுவது, அறிவை
விசாலப்படுத்த எவ்வளவோ
உதவியாயிருக்கும்.



பார்வைகள் பனித்து!

ஒரு நாள் அசோதை – தன்
ஒக்கலில் –
சேலையை வரிந்து
செருகிக் கொண்டு –

தானே –
தாழியிலிருக்கும் –
தயிரைத்
தாம்பு கொண்டு கடையலானாள்;

அவ்வமயம்
அவள் –

190

பக்கமிருந்த
பணிப் பெண்டிரிடம் – கண்ணன்
படுத்தும்
பாடுகள் பற்றி –

கதை கதையாய்ச் சொல்லிக்
கரைந்து போனாள்!

'அம்மம்மா!
அவன் அழைத்து வரும்...

ஊர் வம்பை
உட்கார்ந்து தீர்ப்பதற்குள் –
உன்னைப் பிடி, என்னைப் பிடி என்று
உயிர் போகிறது;

அன்றாடம்
ஆயிரம் பஞ்சாயத்து என்றால் –
அம்மாடி!
ஆரால் ஆகிறது?

மாற்றார் வீட்டு
மாட்டுத் தொழுவங்களில் –
பூனை போல்
புகுந்து...

கறக்கவும் பாலின்றி;
கன்றுக்கும் பாலின்றி;
கறவையின் –
காம்புகளில் வாய் வைத்து –

உள்ள பாலை யெல்லாம்
உறிஞ்சிக் குடிக்கிறான்;

கையும்
களவுமாய்ப் பிடித்துக் –
கேள்விகள்
கேட்டால்...

ஒன்றும் அறியாத
ஓர் அப்பாவி போல் –
ஒரு குடம் கண்ணீரை
ஒருசேர வடிக்கிறான்;

நம்மூர்க் கூத்தாடிகளைவிட –
நன்றாகவே நடிக்கிறான்!

நினைத்தால்
நடக்கிறான்;
திடீரென்று
தவழவும் –
திராணியில்லாமல்
தரையில் கிடக்கிறான்!

கண்டால் காமாட்சி புருஷன்;
காணாவிட்டால் மீனாட்சி புருஷன்;
என்று –
எதற்கோ எவரோ சொன்ன மாதிரி...

பார்க்கும்போது –
பரமசாது;
பார்க்காதபோது –
பத்தாயிரம் வாது!

ஊர்
உலகத்தில் –
இல்லாத மாதிரி
இப்படியொரு பிள்ளையை...

வேலை
வெட்டியில்லாமல் –

பெற்றெடுத்த
பாவத்திற்கு – வயிற்றில்
பிரண்டையைத்தான் கட்டணம்;
பிள்ளை அவ்வளவு லட்சணம்!'

அசோதை – 'இப்படி
அலுத்துக் கொண்ட நேரத்தில்...

பக்கத்து அறையிலிருந்து –
பயங்கர அலறல் கேட்டது;

கண்ணன் குரலென்று –
கண்டுகொண்டதும் –
திக்கென்று – தாய்க்குத்
தூக்கிவாரிப் போட்டது!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## உரலும் கயிறும்.

தயிர் வெண்ணெய் –
தனித்தனித் தாழியில்;
தாழிகளைத்
தாங்கிக் கொண்டிருந்தது –
உயரமான
உறி;
கண்ணனுக்கு அவற்றின்மேல் –
குறி!

எம்பி எம்பிப் பார்த்தும்
எட்டவில்லை;
என்ன செய்ய
ஏலும்? அவன் –
எட்டு வயதைக்கூட
எட்டவில்லை!

வாமனனாயிருந்த போது –
வானம் எட்டியது காலுக்கு;
கண்ணனாயிருக்கையில் – உறி
கிட்டவில்லை கைகளுக்கு!

அனைத்தும்
அவனாக –
விரும்பிப் போட்டுக் கொள்ளும்
வேஷம்தானே; அவன் –
வாலறிவன்; விரும்பினால்
காலறிவனென்றும் விளங்குவானே!

அவனோ
அநாதி;
அந்த
அநாதிக்கு...
தயிர் வெண்ணெய்
திருடித் தின்பதில் மட்டும் –
ஆர்வம்
அலாதி!

உயரமாயிருந்த
உறியில் –
உள்ளதை எடுக்க
உரலைப் போட்டு ஏற –
கிட்டிய தாழிகள்; கைக்கு
எட்டிய தாழிகள்;
கண்ணனைக்
காட்டிக்கொடுக்கவோ என்னவோ...
வழுக்கி
விழுந்து –
பூமியில் சிதறிப்



பொடிபட்டன;

கண்ணனின்
கால்கைகளில் -
ஆங்காங்கு
அடிபட்டன!

வலிதாங்காது - அவன்
வீறிட்டதுதான் -
அசோதைக்குக் கேட்டது;
அவளைத் தூக்கிப் போட்டது!

அடித்துப் புடைத்துக் கொண்டு -
அவள் வந்து பார்த்தாள்...

கண்ணன் இருந்த
காட்சியை;
கண்டது மட்டுமல்ல;
கேட்கவும் கேட்டாள்;
உடைந்த தாழிகள் -
உரைத்த சாட்சியை!

தலைமுதல்
தாள் வரை...

தயிர் வெண்ணெய்
திருமேனி எங்கும் வழிய -
கறுப்புக் கண்ணன்
வெள்ளைக் கண்ணன் ஆனான்;

கன்னங்களைக் கிள்ளி -
காதுகளைத் திருகி -

குளியலறைக்குக்
கூட்டிச் சென்ற
அசோதை பின்னால் - சின்ன
ஆட்டுக்குட்டி போல் போனான்!

பிசுக்குப்
போக...

அரப்புப் பொடி
அள்ளி அள்ளிப் பூசி -
முழுக்காட்டி விட்டாள்
மாதா; பிறகு -
கயிற்றைத் தேடினாள் -

கண்ணனைக் கட்டிப் போடத் தோதா!

அதை
அறிந்து கொண்டு –
கால் கொலுசுகள்
கலீர் கலீர் என்று ஒலிக்க...

குடுகுடுவென்று ஓடினான் –
குறும்புக் கண்ணன்;
குளிர் உமிழும் –
குவளைக் கண்ணன்!

அரக்கப் பரக்க –
அசோதையும் ஓடினாள்...

அவளது
அளகபாரத்தில் –
அள்ளிச் சூடிய மலர்கள்
அங்கும் இங்கும் சிதற;

எங்கே –
எந்த சமயம்...

இடுப்புச்சேலை
இருந்த இடத்திலிருந்து
இழிந்து விடுமோ என்று
இதயம் பதறப் பதற!

பெரும்பாடுபட்டுப்
பிடித்து விட்டாள் கோபாலனை;
அரும்பாடுபட்டு
அயனும் அரனும் –
பிடிக்க முடியாது – விழி
பிதுங்கச் செய்த பூபாலனை!

ஆரணங்களுக்கு
அகப்படாதவன் –
அசோதைக்கு
அகப் பட்டான்;

அன்னணம்
அவளிடம் –
அகப்படுவதில்
அவன் சுகப்பட்டான்!

செல்லமாக –

சின்னச் சின்னதாய்க் 196
கண்ணன் தலையில் – இரண்டு
குட்டு வைத்தாள்;
குட்டுவைத்த
கையோடு – அவன்
திருச்செவிகளில் – இரண்டு
திட்டு வைத்தாள்!

'உன்னை விட்டுவைத்தால்
உருப்படாது வீடு;

ஒருவேலையும்
ஒழுங்காகச் செய்ய முடியாமல் –
நான் படுகிறேன்
நாய் படாத பாடு!

அடுக்களைக் கதவுகளை
அடைக்கிறாய்;
உறியிலிருக்கும் பானைகளை
உடைக்கிறாய்;

அம்மா என்று – என் மேல்
அணுவளவும் கரிசனமின்றி –
என்னை –
ஏனடா ஆட்டிப் படைக்கிறாய்?

போக்கிரி;
பொல்லாதவன்;
வாயாடி;
வால் பையன்;
கள்ளன்;
கபடன்;
குறும்பன்;
குசும்பன்;

ஆய்ப்பாடி – உனக்கு
அளித்த பட்டங்கள் இவை;
ஆவின் பாலையும் –
ஆடை பூத்த தயிரையும் –
மார் வலிக்க
மத்தால் கடைந்தெடுத்த –
எட்டுத் தாழி
எருமை வெண்ணெயையும் –
அள்ளி அள்ளி – வாயில்

அப்பிக் கொள்கிறாயே –
அப்படி என்னடா உனக்கு
அவற்றை...

திருடித் தின்பதில்
திகட்டாத சுவை?

இரண்டு கைகளும் – சும்மா
இருக்க மாட்டாமல் –

துருதுருவென்று அலைகிறது
தப்புத் தண்டா செய்ய;

இப்படி ஏனடா –
இடங்கொடுக்கிறாய் உன்னை வைய?

உன்னை
உலவ விடாமல் – இந்த
உரலோடு
உரலாக...

ஒருநாள் முழுக்க – ஓர்
ஓரமாய்க் –
கட்டிப் போட்டால்தான் – வீட்டுக்
காரியம் நடக்கும்;

இல்லா விட்டால் –
இந்த வீட்டில்...

பண்டம்;
பாத்திரங்கள்;
போட்டது
போட்டபடி கிடக்கும்!'

என்று – அசோதை
ஏகமாய் –
வார்த்தைகளில்
வெந்தாள்;

பிறகு –
பொல்லாத –
கண்ணனைக் கட்டக்
கயிறெடுத்து வந்தாள்!

பத்தியால்;
பிரபத்தியால்;

மட்டுமே கட்டக்கூடிய
மாதவனை;

காதலால்;
கண்ணீரால்;
மட்டுமே கட்டக்கூடிய
மாலவனை;

பிணிக்கயிற்றால் கட்டிய
பிறவிகளை மீட்போனை – ஒரு
மணிக்கயிற்றால் கட்டிட
மாதரசி முனைந்தாள்;

முயன்று
முயன்று
முடியாது போய் – வேர்வில்
முழுமேனி நனைந்தாள்!

ஒரு முனையைக் – கல்
உரலைச் சுற்றியும்; கயிற்றின்
மறுமுனையைக் – கண்ணன்
மணிவயிற்றைச் சுற்றியும்;

அழுந்தக்கட்டி
அவனை –
ஆடாமல்
அசையாமல் – அப்படியே
அமர்த்த நினைத்தாள்
அசோதை; அவன் –
ஆறென்று
அறிந்திடாத பேதை!

உலகங்களையே –
உண்ணவல்ல –

வயிற்றைச் சுற்றி – வைக்க ஏலுமோ
கயிற்றைச் சுற்றி?

அவனைக் கட்ட –
அசோதை...

கொண்டுவந்த கயிறு
குறைந்தது நீளம்;
அம்மவோ!
அவனது –

அழகிய இடுப்பு -
அதைவிட நீளும்!

ஒன்றோடு
ஒன்றாய் -
முடிபோட்டுக் கட்டலாம் என
முடிவு செய்து...

அதைப் போலவே -
அடுத்தொரு கயிறை -
எடுத்து வர - பணிப் பெண்களை
ஏவினாள்;
அதுவும் போதாமல் -
அதைவிட நீளமாய்க் -
கொண்டுவருமாறு -
கூவினாள்!

அரண்மனையில் உள்ள -
அத்துணை கயிறுகளையும்...

ஒரு சேரக் கட்டியும் -
ஒரு சாண் குறைந்தது;

அசோதை நெஞ்சத்தில் - 198
அச்சம் நிறைந்தது!

திகைத்தாள்;
தியங்கினாள்;
மலைத்தாள்;
மயங்கினாள்!

'மாயமா?
மந்திரமா?
யாரேனும் மந்திரித்து வைத்த -
யந்திரமா?
தன்னையும் -
தனது பிள்ளையையும் -
தனித்திருக்கச் செய்யும்
தந்திரமா?

பிள்ளை இடை - திடீரென்று
பெரியதாய்த் தோன்றுகிறதே!
மகனா?
மகானா?
என்றெல்லாம் -
எண்ணும்படி -
ஏதோ ஒன்று - அச்சவிதையை
என்னுள் ஊன்றுகிறதே!'

யோசித்து யோசித்து -
யசோதை...

இது -
இன்னதுதான் என்று
இனங்காண முடியாமல் - தன்னை
இழந்து போனாள்;
சித்தம் -
சுவாதீனம் அற்றவள் ஆனாள்!

பணிப்
பெண்டிரும் -
பிரமை
பிடித்தாற் போல் நின்றனர்;
அதன்பின்
அவர்களை -
அறியாமலேயே
அங்கிருந்து சென்றனர்!

தாயை இன்னமும்
தவிப்பில் இருக்க விடல் –
தகாது என்று
தீர்மானித்தான்...

கருணை மிகுந்த
கண்ணன்;

மாயங்கள் புரியும்
மாயையின் அண்ணன்!

அசோதையைத் தொட்டெழுப்பி
அவளிடம் –
முதலில் கொண்டுவந்த
மணிக்கயிற்றைக் கொடுத்து...

'அம்மா! உன் –
ஆசைபோல் என்னைக் கட்டு!'
என்று –
எதிர் நின்று –

தனது –
தளிர் இடுப்பைக் காட்டினாள்;

அசோதை கட்ட –
அவன் கட்டுப்பட்டு –
அவளுக்கு
ஆச்சரியத்தை மூட்டினான்!

'முதலில் –
முடிய முடியாதபடி...

இருந்த கயிறு –
இப்போது முடிபோட வருகிறதே!

வந்து – எனக்கு
வியப்பள்ளித் தருகிறதே!'

என்று –
எண்ணிய வாறே...

அசோதை
அன்பு மகனை –
ஒருசேர உரலோடு கட்டி
ஓரமாய் உட்கார்த்தி விட்டு –

பார்க்கப் போனாள் – வீட்டில்



பாக்கியுள்ள வேலையை;

அசோதை என்ன?
ஆரால் தான் –
அம்புவிமேல்
அறியக் கூடும்...

மாயக் கண்ணனின்
மாளாத லீலையை?

கட்டுப்பட்ட
கண்ணபிரான்...

வீட்டின் பின்புறம்
விளைந்திருந்த –
இரு மருத மரங்களை
இமைக்காது பார்த்தான்;

'இதுதான் தருணம்!' என –
இதயத்தில் எதையோ நினைந்து –
இதழ்களின் வழியே –
இளம் புன்னகையை வார்த்தான்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

**நளகூபரன்!**
**மணிக்கிரீவன்!**

**அ**ணுவளவும் – அழுக்கு
அணுகாபுரி;

அத்தகு அழகுடைத்து
அளகாபுரி!

ஆம்;
அதுதான் குபேரப்பட்டணம்;

**26** கவிஞர் **வாலி**

நகரழகை
நாளும் –
நுகரும் காற்றுக்கும் உண்டு
நுழைவுக் கட்டணம்!

தூசி
தும்புகளைத்
தூக்கிக்கொண்டு வந்து – காற்று
தூவிவிடாதபடி...

சுங்கச்
சாவடிகள் சோதிக்கும்; அவை
சோதிக்காவிடில் – நகரின்
சோபிதம் பாதிக்கும்!

ஒப்புரவு அற்ற –
துப்புரவு உற்ற –

அளகாபுரிக்கு
அமைந்திருந்தது –

செப்பவொண்ணாச்
செப்பம்;

அந்தம் அற்ற
அந்தம்...

வைகும்
வைகுந்தம் கூட –
கட்டவேண்டும்
கப்பம்!

கீர்த்தியும் நேர்த்தியும்
பூர்த்தியாய்ப் பிறங்கும்...

அளகாபுரியின்
அரியணையில் அமர்ந்து –
கோணல் அற்ற
கோலோச்சும் வேந்து –

அரிய புகழ்
அமையப் பெற்றவன் –
கரியமாலுக்கே
கடன் ஈந்து!

'கட்சப நிதி;
கற்ப நிதி;
சங்க நிதி;
பதும நிதி;
மகா நிதி;
மகா பதும நிதி;
முகுந்த நிதி;
நந்த நிதி;
நீல நிதி!'

எனும்
ஏராரந்த –

ஒன்பான் நிதிக்கும் – அவன்
ஒருவனே அதிபதி;
'குபேரன்' என்று –
குறிக்கப்பெறும் நிதிபதி!

ஒருபது சிரங்களும்
இருபது கரங்களும் வாய்த்த –
இலங்கேஸ்வரன் – குபேரனின்
இளவல்;

முன்னவன் அமர்ந்து
மூவுலகும் வலம்வரும் –
'புஷ்பகம்' எனும்
புகழ்சால் விமானத்தை...

பின்னவன்
பறித்துக் கொண்டதால் –

இருவருக்கும்
இடையே
இல்லாது போனது – முனம்
இருந்த அளவல்!

'சித்ரரேகை' – குபேரனின்
சிந்தைக்கினிய தோகை;

அவள்
அவனுக்கு –
மாலையிட்டு
மனைவியாகி...

எய்தினாள் –
எவரும் எய்தவொணா ஓகை!

'நளகூபரன்';
'மணிக்கிரீவன்';

இவர்கள்
இருவரும் –

சித்ரரேகை ஈன்றெடுத்த
செல்வங்கள்;
வெள்ளியங்கிரிப் பெம்மானின்
விருப்பமான வில்வங்கள்!

குபேரனின் –
குமாரர் இருவரும்...

கயிலையில் வாழும்
கண்ணுதல் கடவுளான –
பரமசிவனுக்குப்
பணிவிடை செய்து வந்தனர்;
உமையும் –
உமை மணாளனும் உவந்தனர்!

தந்தை தாயைப் போலவே –
தனயரும்...

சிறந்த
சிவபக்தர்களாகத்
துலங்கினர்; திருநீறணிந்த
தூயராய் இலங்கினர்!

ஆற்றையும்; நிலாக்
கீற்றையும்; நீள்சடையில்
ஏற்றிருந்தவனை
ஏத்தியதால்...

நளகூபரனும்;
மணிக்கிரீவனும்;

அளப்பரும்
ஆற்றல் பெற்றார்கள்;
வயது ஏறஏற
வலிவும் பொலிவும் உற்றார்கள்!

நளகூபரன்
நல்ல அழகன்;

வனப்பும்

வாளிப்பும் –
குமிழியிட்டடிக்கும்
குழகன்!

206

வாலிபப் பருவத்தில்
வலது காலை வைத்திருந்தான்;

மதர்த்த
மேனியால் –

வானம்
வாழ் –
மாதரார்
மனங்களைத் தைத்திருந்தான்!

இந்த நளகூபரனின்
இனிய நாயகி அரம்பை;

அவள்மேல்
ஆசைப்பட்டு –
அற்றை நாளில்
அந்த இலங்கை வேந்தன்...

மூர்க்கத்தனமாய் –
மீறினான் வரம்பை!

நடந்ததை – சில
நொடிகளில் அறிந்த –
நளகூபரன்
நெஞ்சு வெந்தான்;

'விரும்பாத பெண்மேல் – கை
வைத்தாயானால் – இனி
உன் தலைகள்
உடனே வெடிக்கும்!' என்று...

சிற்றப்பனுக்குச் –
சாபம் தந்தான்!

இந்த சாபத்தால்தான் –
இராவணன்...

சிறையெடுத்த
சீதையைத் –
தொடத்
துணியாது –

தூர நின்றான்; சாபத்திற்கஞ்சி
தாபத்தைப் பொய்யாக
வென்றான்!

மணிக்கிரீவனும்
மாவலியிலும் மேனியழகிலும்...

நளகூபரனை
நிகர்த்தவன்; இள –
நங்கையர்
நெஞ்சங்களைத் தகர்த்தவன்!

இவர்கள்
இருவருக்கும்...



குபேரன்
குமாரர் என்பதால் –
சேதாரமில்லாத
செல்வமும்;

கைலாயத்தின்
கடைக்கண் பார்வையால் –
செல்லுபடியாகக் கூடிய
செல்வாக்கும்;

அளவின்றி
அமைந்திருந்ததால்...

தருக்கும் செருக்கும் – அவருள்
ததும்பி வழிந்தன;

நாட்பட –
நாட்பட –

அவர்பாலிருந்த
அரிய குணங்கள் –
கொஞ்சம் கொஞ்சமாய்க்
கழிந்தன!

அளகாபுரியில் –
அரச குடும்பத்தார் மட்டுமே –
அருந்தக்கூடிய
அற்புதமான மது ஒன்று –

வழக்கத்தில் இருந்தது
'வாருணி' என்று!

விண்ணுலகில்
விளைகின்ற –

அபூர்வப் பழங்களை
அழுகவைத்து –
அவற்றினின்றும்
அனல் மூட்டிக் காய்ச்சி –

வடிப்பது – அவ்
வாருணியென்னும் மது;
உண்டவனை – ஓரிடத்தில்
உட்கார விடாதது அது!

நளகூபரனும்;
மணிக்கிரீவனும்;

'வாருணி'யை
வண்ணக் கிண்ணங்களில் –
ஏந்தினர்; ஏகமாய் –
மாந்தினர்!

இந்த
இழிசெயலால்...

இரு விழிகள்
'இமையார்' என்றிருந்தவர் –
இரு விழிகள்
'இமைப்போர்' என்று ஆயினர்;

வாருணி மதுவால் –
வசங்கெட்டுப் போயினர்!

அவர்கள் – கங்கை
ஆற்றங்கரைக்குச் சென்றனர்;
அங்கு
அழகிய பெண்கள் –
ஆடைகளின்றி
அம்மணமாய்...

நீராடியதைக் கண்டு –
நெடுமூச்சு விட்டு நின்றனர்!

கயல் விழியினர் –
கயல்களாகவே மாறி –

நீச்சல் இட; அவர்கள்
நிர்வாணம் – ஆதியந்தம்

208

விட்டுவிட்டு
விழிகளில் பட;

நளகூபரனையும் –
மணிக்கிரீவனையும் –
அக் கோலம்
அனலெனச் சுட;

செல்வத்தாலும் –
செல்வாக்காலும் –
கெட்ட புத்தி – அருந்திய
கள்ளால் மேலும் கெட;

இளைஞர்
இருவரும் –

அவிழ்த்தெறிந்தனர் – தம்
ஆடைகளை;

திகம்பரராகித்
தாமும் தண்ணீரில் இறங்கி –
நெருங்கினர் – அந்த
நிர்வாணப் பேடைகளை!

பெரிய இடத்துப்
பிள்ளைகள் என்பதால்...

பேசாதிருந்தனர்
பாவையர்;
பூக்களிலும் மென்மையான
பூவையர்!

ஆக –
ஆடவர் பெண்டிர்...

மிச்சம்
மீதியின்றிக்
கூச்சு விட்டனர்; குளிர்நீரில் –
நீச்சு இட்டனர்!

ஜலக்கிரீடை
'ஜம்'மென்று நடந்தது;

அவர்களுக்கு
அறிவிக்காமலேயே –
பொழுது – தன்
போக்கில் கடந்தது;

அவ் வமயம்
அங்கு வந்தார்...

பார்த்த மாத்திரத்திலேயே
பவ்வியமாக –

மாரதர் எல்லாம் துதிக்கும் –
நாரதர்!

விரிஞ்சன் மகனின்
வருகை கண்டதும்...

அலமந்து
அலறிப் புடைத்து –
அம்மணமாயிருந்த
அரிவைய ரெல்லாம்...

கிடுகிடுவென்று
கரையேறி –
கூறைகளைச் சூடினர்;
குழிமுயல்கள் போல் ஓடினர்!

மது
மயக்கத்தால்...

நாரதரைக் கண்டபின்னும் –
நாணமும் அச்சமும் இன்றி –
நளகூபரன்; மணிக்கிரீவன்;
நிர்வாணமாகவே –

நீரில்
நீச்சலிட்டனர்; ஆடைசூடி –
நாரத முனியை
நமஸ்கரிக்க வேண்டிய –

பண்பைப்
பறக்க விட்டனர்!

சாதாரணமாக –
செருக்கும் தருக்கும் ஏறி –
அடாது பேசும்
அசுரர்கள் நடுவே கூட –

சினம் காட்டாது
சிரித்த முகம் காட்டும் –

'நாராயணா' எனும்



நாமத்தை இசைத்து –
அசுரர்க்கும் பக்குவமாய்
அறிவினை ஊட்டும் –

நாரத மாமுனி –
நளகூபரன்; மணிக்கிரீவன்;
நாணாது
நெடுமரங்கள் போல்...

நிற்கும்
நிலை கண்டு சீறினார்;
சீற்றத்தில் – தானிடும்
சாபத்தைக் கூறினார்!

'குபேரன்
குமாரர்களே!

மதுவுண்ட
மயக்கத்தில்
மாண்புகளை விட்ட
மடையர்களே!

காணக் கிடைக்குமோ –
உமைப்போல்
கடையர்களே?

நான் வந்திருப்பதை
நன்கு அறிந்தும்:..

மன உணர்வுகள் மரத்து
மரம் போல் நின்றீர்;

அளகாபுரி
அரசின் –
வாரிசுக்குரிய
மேன்மைகளைக் கொன்றீர்!

நீங்கள் இருவரும் –
நிலம் சேர்ந்து...

மருத
மரங்களாகி –
நூறு தேவ வருடங்கள்
நின்றிடுக;

செல்வமும்
செல்வாக்கும் இழந்து –
பாவமும் பிணியும் நிறைந்த
பூமிக்குச் சென்றிடுக!'

இவ்வாறு நாரதர் –
இட்டார் சாபம்;

நளகூபரன் –
மணிக்கிரீவன் –
இருவரும் –
இழந்த அறிவு வரப் பெற்று...

நாரத முனிவரின்
நல்லருள் வேண்டி – அவரது
நற்றாள் பற்றி அழ –
நீங்கியது அவர் கோபம்!

'நீங்கள் – கோகுலத்தில்
நந்தகோபன் தோட்டத்தில்...

மருத
மரங்கள் ஆவீர்; கண்ணன்
சேவடி பட்டுச்
சாபம் தீர்ந்து போவீர்!'

இவ்வாறு
இயம்பிவிட்டு –
நாரதர் போனார்; குபேரன்
நந்தனன்கள் மரங்களானார்!

மருத
மரங்களை நோக்கி –

உரலை இழுத்தபடி
ஊர்ந்தான் கண்ணன்;
நீருண்ட எழிலியின்
நிறத்தை நிகர்த்த வண்ணன்!

(தொடரும்)




## தீராத விளையாட்டுப் பிள்ளை.

உரலோடு
ஊர்ந்தபடி –
புழைக்கடைப் பக்கம்
போன கண்ணன்...

நெடிது வளர்ந்து
நின்றிருந்த –
மருத
மரங்களிடையே புகுந்தான்;

உரல் – அவற்றின்
ஊடே வர இயலாது –
சிக்கிக்கொள்ள
சினம் மிகுந்தான்!

உதைத்து அருளினான்
ஓங்கி;
இரட்டை மரங்களும்
இற்று விழ...

குபேரன்
குமாரர் இருவரும்
நின்றனர் – சாபம்
நீங்கி!

திருமால்
திருவருளை எண்ணி –
இருவரும் அழுதனர்; அவன்
இணையடி தொழுதனர்!

'மரமாய் நின்ற
மாபாவியர்க்குத் –
திருவடியால்
தீட்சை தந்தாய்;

உய்யவேண்டி – எம்பொருட்டு
உரலிழுத்து வந்தாய்!

ஆய்ச்சி வேடம் அணிந்த
பேய்ச்சியின் –
உயிரை
உறிஞ்சியவனே;
சகடாசுரனைச் –
சரித்தவனே;

புயலரக்கன் ஆவியைப் –
பூமாலையாய்த் தரித்தவனே;
பொல்லாக் கஞ்சன் கண்ணுக்குப் –
புகையாய்க் கரித்தவனே!

வண்ணமலர்ப் பாதத்தால்
விட்டாய் உதை;
விருட்டென முடித்தாய் – எங்கள்
வினைக் கதை!

மரத்துப் போன



மரத்துக்குச் சமதை –
என்றிருந்த எமக்குள் – இனி
எட்டிப் பார்க்காது மமதை!'

என்று வணங்கி
ஏறினர் வானம் –

நளகூபரனும்
மணிக்கிரீவனும் –
நெஞ்சில் இசைத்தபடி
நாரணன் கானம்!

புழைக்கடைப் பக்கம் – ஏதோ
பெருஞ்சத்தம் கேட்டதே என்று...

அசோதையும்;
அரண்மனைப் பெண்டிரும்;
நந்தகோபனும்;
நந்தர் பலரும்;

பதற்றத்தோடு – வந்து
பார்க்க...

மருத
மரங்கள்
வேரோடு சாய்ந்து
வீழ்ந்து கிடக்கும் காட்சி –

அனைவர் கண்களிலும்
அச்சத்தை வார்க்க...

உரலோடு கட்டிய கண்ணன்
உட்கார்ந்திருந்தான் – வாயில்
விரலோடு!

பாய்ந்து
போய் – தன்
நந்தனன் கட்டினை
நந்தகோபன் அவிழ்க்க;

அசோதை
அஞ்சி நின்றாள் –
குற்ற உணர்வு – அவள் தலையைக்
குப்புறக் கவிழ்க்க!

நந்தகோபன் – தன்
நாயகியின்மேல் –
வெகுவாக
வெகுளி கொண்டான்;
அனல் விழிகளால்
அவளை உண்டான்!

'வளரும் குழந்தைக்கு அழகே
விஷமம் செய்வதுதான்;
கையும்
களவுமாய்ப் பிடிபட்டால் –
கண்களைக் கசக்கிக்
கண்ணீர் பெய்வதுதான்!

இது புரியாமல்
இளங் கன்றை –

கயிறெடுத்து உரலோடு
கட்டிப் போடுவதா?
மரங்கள்
மேலே விழுந்திருந்தால்...

குழந்தை
கூழாகிப் போய் – நாம்
பித்துப் பிடித்துப்
பிலாக்கணம் பாடுவதா?'

கோபத்தில் – நந்த
கோபன் கூறி முடித்ததும்...

ஒரே அள்ளாய்க் கண்ணனை அள்ளி –
ஒக்கலில் வைத்துக்கொண்டு –
உள்ளே போனாள் தாய்;
உள்ளுக்குள் சிரித்தது சேய்!

நந்தகோபனுக்கோ; அவன் –
நாயகிக்கோ...

சின்னஞ்சிறு கண்ணனால் – ஒரு
சாபவிமோசனம் –
தோட்டத்தில் நேர்ந்ததென்று
தெரியவே தெரியாது;

பல
பொழுதுகளில்...

2ч

கண்ணனே – தான்
கடவுள் என்பதைப்
புலப்படுத்தியும் – அது
புரியவே புரியாது!

அவன்
அதிசயம் காட்டுவான்;

அன்னணம் காட்டி –
அவர்களை –
வியப்பின்
விளிம்பிற்கு ஓட்டுவான்;

அவர்கள் –
'ஆர் இவன்? அந்த
அனந்தபதுமநாபனோ?' என்று –
அய்யமுறும் வேளையில்...

மறுபடியும் – அவர்களை
மாயையில் பூட்டுவான்!

தொடர்ந்து – அவனது
திருவிளையாடல்கள்...

நாளும்
நடக்கத்தான் செய்தன;

அவனை நோக்கி
ஆயர்குலப் பெண்ணினம் –
குற்றக் கணைகளைக்
குறிவைத்து எய்தன!

ஒரு நாள் – அவன்
ஓய்ந்து பார்த்ததில்லை ஊர்;

அன்னணம்
அவன் –
விஷமம் செய்யாது
வெறுமனே இருந்தாலும்...

கலகலப்பு
காணாமற் போய் –
ஊராக இருக்காது
ஊர்!

ஆற்று நீரை –
அஞ்சாறு பானைகளில் நிரப்பி...

பிரிமணைமேல்
பொருத்திக்கொண்டு –
கோபியர் – நடை
குலுங்கி வருகையில்...



அந்தியம் போதில்...

பிட்டத்தில்
பின்னல் புரள; பூ
வட்டத்தில்
வண்டுகள் முரல;

துடியிடை
துவளத் துவளப்
பொடிநடை
போட்டு வரும்...

பூக்காரியின் குடலைக்குள்
புழுதியை நிரப்புவான்;

அவள் –
அலற –
'குய்யோ முறையோ' என்று
கதற –

சுத்தம்
செய்வதாகச் சொல்லிக்
குடலையைக்
குப்புறக் கவிழ்த்து...

வண்ணப் பூக்களை
வீதியிலே பரப்புவான்;
பூவும் புழுதியும் ஒன்றாகும்;
புண்ணியம் இல்லை என்றாகும்!

தொழுவத்துக் கன்றின் – காதுத்
தொளையில்...

சின்னஞ்சிறு
சுள்ளெறும்பைப் –
பிடித்துப்
போடுவான்;

கடி தாளாது – கன்று
கட்டவிழ்த்துக் கொண்டு –
தெருவில்
தாறுமாறாக ஓட;

முன்வருவோரையெல்லாம் – அது
முட்டிக் கீழே தள்ளிப் போட;

கண்ணன்
கவண் கல்லால் –
பானைகளைப்
பொத்து விடுவான்;
அவர்கள்
ஆடைகள் நனைந்து –
அவதிப் படுகையில்
ஆனந்தப் படுவான்!

அஃதேபோல் –

ன்
க் –
பயித்க்
ாட்டி ஆடுவான்!

காய்ப் புளி;
ா;
த;
ல்லி;

ற்றை – சாக்கில்
க் கூறு கட்டி –

கிழவி – ஒரு
த்தின் கீழ் –
பாய்
கயில்...

ன்
ாடால் – அவள்
முகத்தில்
றைவான்;

ழித்து – விஷயம்
ம் ஆகுமுன்
ான்!

மயம் –
ஒரு கிழவி –
நாவற்பழங்கள்
வருகையில்...

ன் – தன்
றயத் –
ம்
வந்து –
ழவி
பில் கொட்டினான்;

க்கு –
மாற்று முறையில்...
கொடுத்த
வற் பழங்களைச் –
ந்துச் சுவைத்துச்

சப்புக் கொட்டினான்!

கூடையில் விழுந்த தானியத்தைக்
கூர்ந்து பார்த்தாள் கிழவி;
மாணிக்கக் கற்களாய்
மாறி –
தானியங்கள்
தகத்தகாயமாய் ஒளிர –

கிழவி முத்தமிட்டாள்
கண்ணனைத் தழுவி; அவன்
கன்னங்களைத் – தன்
கண்ணீரால் கழுவி!

'இது –
தெய்வக் குழந்தை!' என –

ஊரறியக் கூவ
விரும்பினாள்; உடனே –

மாயை
மறைக்க –
சகஜநிலைக்குத்
திரும்பினாள்!

ஊர்ப்பிள்ளைகளை
உற்சாகமாய் –
கூட்டிக்கொண்டு போய்க்
கும்மாள மடிப்பான் –

பூட்டிக் கிடக்கும் வீட்டுள்
புகுந்து;

பந்து பந்தாய்
பசும் வெண்ணெய் இருக்கும்
மண்பானைகளில் – அங்கு
மிகுந்து!

கண்ணன் திருடித் தின்னும் –
சேவலத்தை...
ஆய்ச்சியர்
அசோதையின் –

கவனத்திற்குக்
கொண்டு போனால்...

அவள்
ஆய்ச்சியர்மேல் பாய்வாள்;

'என் வீட்டில்
இல்லாத நெய்யா? பாலா?
உன் வீட்டில்
உள்ளது இதைவிட மேலா?

மன்னன் வீட்டு
மகன் –
வறியர் வீட்டில்
வைத்ததைத் திருடுவானா?

பொன் பாண்டம் நிறையப்
பொங்கி வழியும் தயிரிருக்க –
மண்பாண்டத்தில் இருக்கும்
மிச்சத்தைவிரலால்வருடுவானா?

பொய் சொன்னாலும்
பொருந்தச் சொல்; பிறகு என் –
திருக்குமாரனைத்
திருந்தச் சொல்!'



என்று
ஏகமாய்க் காய்வாள்!

ஒரு நாள்
ஒட்டுமொத்த கோபியரும் –

கண்ணனைக்
கையும் களவுமாய்ப்
பிடித்து வந்து – வாயில்
பசுவெண்ணெய் வழிய வழிய...

நந்தகோபன் மனைவிமுன்
நிறுத்தி...

'பார்! உன்
பிள்ளையின் லட்சணத்தை!'
என்று –
பெருஞ்சினத்தோடு
பிராது தொடுத்தனர்;

அசோதை
அடக்கமுடியாச் சிரிப்போடு...

'பார்! நீங்கள்
பிடித்து வந்திருப்பது –
என் மகனா?'
என்று

எனச் சுட்டியவுடன் –
'எவர் வீட்டுப் பிள்ளையோ இது!'
என்றறிந்து
எல்லோரும்...

வெள்கி – அந்தப் பையனை
விடுத்தனர்!

அவ்வமயம்
அடுத்த அறையிலிருந்து –
அரைகுறைத் தூக்கத்தோடு
'அம்மா' என்றவாறு...

கண்ணன் வந்தான்; திகைப்பை
கோபியர்க்குத் தந்தான்!

நிலவுலகில் – இந்த
நிகழ்ச்சி நிகழும் போது...

திருக்கயிலாயத்தில் – உமா
தேவியாருடன் வீற்றிருந்த –
விடையேறு பெருமான்
வாய்விட்டுச் சிரித்தார்;

'ஏன் சிரிக்கின்றீர்?'
என்று –
பிராட்டியார் வினவ –
பெம்மான் பதிலை விரித்தார்!

(தொடரும்)

## புலம் பெயர்ந்தனர்!

'இமயவல்லியே!
இயம்புகிறேன் கேள் –
ஏன் சிரித்தேன்
என்று;

கேட்டால் – உன்
கொவ்வைச் செவ்வாயிலும்
கிளைக்கும் –
கேலிச் சிரிப்பு ஒன்று!

மனிதர்களும்; மகா
முனிவர்களும்; மறையோதும்
புனிதர்களும்; சமயப்
பெரியோர்களும்;

தெய்வத்தின் –
திருமுன்...

பால்;
பழம்;
தேன்;
தயிர்;

இவைபோல்
இன்னும்...

பலவகையான



# விஜயம்

பதார்த்தங்களைப் –
பவ்வியமாய்ப்
படைத்து...

அழுது;
தொழுது;
தங்கள் படையல்களைத்
தெய்வம் –

ஏற்குமோ?
ஏற்காதோ?
என்றெலாம்
எண்ணி...

சித்த
சுத்தியோடும்;
சுத்த
பத்தியோடும்;

வேண்டி
வருந்தி வாடுவர்;
நீள விழிகளில்

28 கவிஞர் **வாலி**

நீர்ப்பூக்களைச் சூடுவர்!

இன்னணம்
இறைஞ்சியும் –
வருந்தி வருந்தி அழைத்தும்
வாராத தெய்வம்...

ஆயர்பாடியில் –
அஞ்சு வயதுப் பாலகனாய் –
ஆய்ச்சியர் வீடுதோறும்
அலைந்து...

நற்றயிரும்;
நறும்பாலும்;
நவநீதமும்;
நாளும் –

திருடி உண்ணுகிறது;
திருவிளையாடல் பண்ணுகிறது!

வேதம்
ஓதியும்;
வேள்வி
ஓம்பியும்;

வாராத தெய்வம் – தமது
வீடு தேடி வருகிறதே என்று...

அறியாத
ஆய்ச்சியர் –
அங்கலாய்க்கின்றனர்
அசோதையிடம் சென்று;

இருட்டு வண்ணனை –
திருட்டுக் கண்ணனை –

கட்டி வைக்கவும்; தலையில்
குட்டி வைக்கவும்;
விண்ணப்பிக்கின்றனர்
வரிசையில் நின்று!

வெண்ணெயைக் – கையில்
வைத்துக்கொண்டு –
நெய்க்கழுவார்
நிலை போலே...

இருக்கிறதே

இவர்தம் மடமை –
என்று
எண்ணித்தான் –

விலா நோவச் சிரித்தேன்
வாய்விட்டு;

பாவம்! இந்தப்
பெண்டிர் –
நீங்கினாரில்லை – அறியாமை
நோய் விட்டு!

இவர்தம் கதை –
இப்படி யென்றால்...

நந்தகோபனும்; அவன்
நாயகியும்;

கண்ணனைக்
காக்கக் –
கோயில்
கோயிலாய்ச் செல்கின்றனர்;
கடவுளைக் காக்குமாறு
கடவுளிடமே சொல்கின்றனர்!

அந்தோ! பாவம்!
அவர்களுக்கும்...

கண்ணன் – தன்னைக்
காட்டிக் காட்டி ஒளிக்கிறான்;

இத்தகு
இனிய –
சித்து விளையாட்டில் – அவன்
சித்தம் களிக்கிறான்!

உமையே! என் –
விழியின் இமையே!

ஆயர்பாடியில் நடக்கும்
அனைத்தையும் –
ஆற
அமர யோசி;

நீயும்
நிற்பாய் – உன்

222

சின்ன உதடுகளுக்குச்
சிரிப்பு முலாம் பூசி!'

புராரி – இவ்வாறு
புகன்றதும்...

பார்வதியும் – முறுவல்
புரிந்தாள்; முறுவல்வழி
அமுதத்தை
அடைமழையாய்ச் சொரிந்தாள்!

சிவபெருமான்
சிரித்ததற்கொப்ப...

கண்ணனைக்
கடவுளென்று –
கருதவும்;
கண்டுகொள்ளவும்...
வாய்ப்பின்றியே
வாழ்ந்திருந்த –

ஆயர்பாடி மக்களும்;
அவர்கள் தலைவனான கோபனும்;
மற்றுமுள்ள
முதிய கோபாலரும்;

ஆபத்துமேல்
ஆபத்து வந்து –
கண்ணன்மேல்
கவிகிறதே என்று –

வேளைதொறும்
விசனப்பட்டனர்;
கம்சனிடமிருந்து
கண்ணனைக் காக்க...

என்ன வழி?
ஏது வழி?
என்று
எண்ண மிட்டனர்!

நிமித்தங்களும்
நல்லவையாயில்லையே என –
நந்தகோபனும் – அவன்
நாயகியும்...

கங்குலும் பகலும்
கவலுகையில் –

'உபநந்தன்' எனும்
ஓர் யாதவன் –
அவன்மேல்
ஆவேசம் வந்தாற்போல்...

பேசினான்; வார்த்தைகளில்
பொறி பறக்க வீசினான்!

'ஆயர்களே!
ஆவினங்களின் நேயர்களே!
மடி கறந்த பாலனைய –
மனங்கொண்ட தூயர்களே!

ஆயர்பாடி முழுக்க – பீதி
அப்பிக் கிடக்கிறது;

ஆருடைய
ஆனனத்திலும் –
கவலையெனும் இருள்
கப்பிக் கிடக்கிறது!

கண்ணனைக் குறிவைத்துக்
கம்சன் – நகர்த்துகிறான்
காய்களை; அனுப்புகிறான்
கண்ட கண்ட பேய்களை!

பூதனை;
சகடாசுரன்;
திருணாவர்த்தன்; எனத்
தானவர் குலத்தவரை...

ஏவியும் –
எம்பெருமான் அருளால் –
பிழைத்தான் – நம்
பாலகோபாலன்;

நாளை – என்ன
நேருமோ – என்று
நடுநடுங்கி நிற்கின்றான்
நந்தகோபன் எனும் பூபாலன்!

அர்த்த ராத்திரியில்
அச்சானியமாய் –
ஓலமிடுகின்றன
ஓநாய்; கூகை;

அத்தகு
அபசகுனங்கள் –
அன்றாடம்
அச்சுறுத்துவதால்...

நாம் அனைவரும்
நாளையே –
அட்டியின்றி மாற்ற வேண்டும்
அவரவர் சாகை!

புலம்
பெயர்ந்து – நாம்
பக்கமிருக்கும்
பிருந்தாவனத்திற்குப் போய்...

மாடு;
மக்கள்;
வீடு;
வாசல்;

இவற்றோடு – அச்சம்
இம்மியளவும் இன்றி –
இனிதாய் வாழ்வோம்;
இன்பங்களைச் சூழ்வோம்!

பிருந்தாவனத்தில் – தேவ
பூஜைகள் புரிந்து...

பழவினை
போகப் –
பிராயச்சித்தம்
பண்ணுவோம்;
அங்கேயே – சில
ஆண்டுகள் இருந்துவிட்டு –
ஆயர்பாடி திரும்புவதை
அப்புறம் எண்ணுவோம்!'

உபநந்தன் – இவ்வாறு
உரைத்த யோசனையை –
ஆயர்கள்



அனைவரும் ஏற்க...

நந்தகோபனும்
'நன்று' என்றான்;
பிரச்சினை தீர்ந்தது – எனப்
பெருமூச்சு விட்டு நின்றான்!

கோகுலத்துக் –
கோபாலர்கள் யாவரும்...

நாள் ஓரை – பார்த்து
நீங்கினர் ஊரை;
பிருந்தாவனம் போகும் –
பாதையில் –
பாகன்கள் ஓட்டினர் –
பல்வகையான தேரை!

பலராமன்; அவனைப்
பெற்ற தாய் ரோகிணி;

பாலகிருஷ்ணன்; அவனைப்
பெற்ற தாய் அசோதை;

நந்தகோபன்; அவனது –
நலம் பேணும் மெய்க்காவலர்;

மற்றும் – அரண்மனை
மாதர்; பணிப்பெண்டிர்;
அமாத்தியர்கள்; இதர
அரசு அலுவலர்கள்;

ஆயர்பாடியைச் சேர்ந்த
ஆயர்கள்; ஆய்ச்சியர்கள்;
ஆயிரம்
ஆயிரமாய்...

அவரவர்
அந்தஸ்துக்கு ஏற்ப...

காளைகள் பூட்டிய
கூட்டு வண்டிகளிலும்;
குதிரைகள் பூட்டிய
கனகமணித் தேர்களிலும்;

வேறு
வகையான –
சிறுசிறு

சிவிகைகளிலும்;

பரிகள் மீதும்;
கரிகள் மீதும்;
பயணம்
புரிந்தனர்;

ஒட்டுமொத்த மக்களும்
ஊரைப் பிரிந்தனர்!

மந்தை
மந்தையாக...

காராம் பசுக்களையும்;
கன்றுகளையும்;
எருதுகளையும்;
எருமைகளையும்;

ஒருசிலர்
ஓட்டி வந்தனர்;

கால்நடைகளோடு
கால்நடையாய்த் – தம்
குடும்பங்களையும்
கூட்டி வந்தனர்;

சின்னஞ்சிறார்
சிலர்...

தகப்பன்மார்
தோள்களில் –
தொத்திக் கொண்டனர்; நெடுகத்
தோப்பு துரவு கண்டனர்!

பயணக் களைப்பு
புலப்படாமல் –
வழிநெடுக – வீர
விளையாட்டுக்களோடு...

கொம்பு;
கொட்டு;
பம்பை;
பேரி;

ஆகிய
அனேக வாத்தியங்களை –
மாற்றி மாற்றி
முழக்கி வந்தனர்;



கூத்து;
குலவை; என்று –
குதித்தும்
மிதித்தும்...

ஊர்ப் புழுதியை –
உழக்கி வந்தனர்!

வண்ணத் தேர்க்குள்
வீற்றிருந்த...

கண்ணனும் பலராமனும் –
காணாததைக் கண்டாற்போல் –
வழிநடைக் காட்சிகளை
வெகுவாக ரசித்தனர்;

கூடை
கூடையாய்க் –

கொண்டு வந்திருந்த
கொய்யாப் பழங்களைக் – காரப்
பொடியினில் போட்டுப்
புரட்டி எடுத்துப் புசித்தனர்!

ஒரே ரதத்தில் –
ஒருசேர உட்கார்ந்திருந்த...

உரோகிணியும் அசோதையும்
ஊர்க்கதைகளைப் பேசியவாறு –
குறுநகை புரிந்தும்;
குலுங்கக் குலுங்கச் சிரித்தும்;

தம் மகவுகளைத்
தடவியும் தழுவியும் –
பொழுதைக் கழித்தனர்; பட்ட –
பொல்லாக் கவலைகளை அழித்தனர்.

பொழுது சாய – வந்தது
பிருந்தாவனம்; அதைக்
காற்று போய்க்
கம்சன் காதில் கூற –
பொங்கியது அவனுள்
பெருஞ்சினம்!

(தொடரும்

# கிருஷ்ண விஜயம்

## பிருந்தாவனமும் – நந்தகுமாரனும்.

பிருந்தாவனம் –
பிருந்தைகள் விளையும் வனம்;

பிருந்தை எனும்
பெயர் – எல்லோர்க்கும்...

துதிப்பதற்குரியதாய்த்
துலங்கும் –
துளசியைக் குறிக்கும்;
துளசி போல் –
துதிப்பார் தம்
தொல்வினைகளை எது செறிக்கும்?

துளசியால் – இன்பம்
துய்க்கும் திருமாலலவோ...

கண்ணனாய் – ஒரு
கருவழி வந்து – பின்பு
திரிந்தான் – கோகுலத்தின்
தெருவழிவந்து!

அன்னணம் இருக்கையில்
அவனுக்குப் –
பிரியமில்லாது
போகுமா...

துளவக்காடு – எனத்
துலங்கும் பிருந்தாவனம்?



வெகுவாய் – அதை
விரும்பியது பிள்ளை மனம்!

பிருந்தாவனம் – உவமைக்குப்
பொருந்தாவனம்; வாடிவதங்கி
வருந்தாவனம்; வெங்கதிரோன்
அருந்தாவனம்!

பார்க்குமிட மெல்லாம்
பசுமை; பசு மேயும் பசுமை;

செழுமை – என்பதன்
முழுமை!

நிலமெனும் –
நல்லாள்...

அறுவை
ஆகாத –
அறுகம் புற்களை
அறுவையாய் அணிந்திருந்தாள்...

ஒச்சமில்லா அழகு
ஒழுக; ஒழுக; அதிகாலை
மூடுபனியில் – அவ்வாடை
முழுக; முழுக!

வான்பொய்த்தாலும்
தான் பொய்க்காத –
ஊற்றுப் பெருக்காகி; வற்றாத
ஆற்றுப் பெருக்காகி;

அலையெனும் –
அளகபாரத்தில்...
நுரைப்பூக்களைச் சூடி – இடை
நொசிய நொசிய நடந்துவரும்
கரைப் பூக்களைத் தேடி –

யமுனை – என
யாவரும் ஏத்தும் காளிந்தி நதி;
சலசலவென – அது
சப்திக்க – அது இடும்

தளர்நடையில் – அணுவும்
தப்பாது அதன் தாளகதி!

புனல் அல்ல அது;
பிறகு எது?

மையெனும்
மைகொண்டு –

நீள் விசும்பு
நிலத்தில் வரைந்த
நீர்க் கவிதை; யாப்புக் கெடாத் –
சீர்க் கவிதை!

ஆல்;

அரசு;
வேல்;
வேம்பு;
அத்தி;
அசோகு;
புளி;
பாதிரி;
மா;
மருது;
எட்டி;
எலுமிச்சை;

என
ஏராளமான...

தருக்கள் –
தளதளவென வளர்ந்து
ஆகாசத்தைத் தொட்டன – அவ்
ஆற்றுப் படுகையில்;

மேகங்கள்
மேனி சிலிர்க்கும் – அந்த
மரங்களின் முடி
மேலே படுகையில்!

கரையோரம் – நெடுகக்
காணலாம்...

ஓடுமீன் ஓட –
உறுமீன் வருமளவும் –
காத்திருக்கும்
கால்நீண்ட நாரையும்; கொக்கும்;

அவை
ஆடாது அசையாது –
ஒற்றைக்காலில் நின்று – தவம்
ஓம்பும் தவசிகளை ஒக்கும்!

கீச்சுக்
கீச்சென்று –

காலை முதல் மாலை வரை
கேட்டவண்ண மிருக்கும் –
பல்வகைப்
பறவைகளின் சிலம்பல்;

230

இடை
இடையே –
உள்ளத்தை
உருக்கும்...

ஆண்வரக் காணாத – பெண்
அன்றிலின் புலம்பல்!

ஆங்காங்கு
ஆன்கள் மேயும்;
ஆன்கள் கூட
மான்கள் மேயும்;

மிகவும் கறுத்த
மேகம் கண்டால்

அகவும் மயில்கள்
ஆலும்;
அந்த
அழகை –
எடுத்துச் சொல்ல
எவரால் ஏலும்?

நதிக்கரையில்
நின்றுகொண்டிருந்தது...

கோலம் கொழிக்கும் –
கோவர்த்தன கிரி;

அழகிலும்
அடர்த்தியிலும் –
அதற்கு
அதுவே சரி!

அதன் கொடுமுடியை;
ஆகாயம் தொடு முடியை;

சதா
சர்வகாலம் –
சூல்கொண்ட மேகங்கள் – வந்து
சூழும்;
அந்த மிகு
அந்த மலையில் – நான்கு
கால் கொண்ட மேகங்கள் – என்று
கரிகள் வாழும்!

மற்றும் – அம்
மலையின்கண் உண்டு...

தருக்கள் உதிர்த்த
தழைகள் –
மூடிக் கிடக்கும்
முழைகள்!

அவற்றுள்
அச்சமின்றி வசிக்கும் –

கோளரி;
கொடுவரி; அவை –
அது அதற்கான இரையை –
அடித்துப் புசிக்கும்!

அழகிய கோவர்த்தன கிரியின்
அடிவாரத்தில்...

சின்னச்
சின்னதாய்
மணல் திட்டுகள்; அவை மேல்
விளையாடும் மணிச் சிட்டுகள்!

இன்னணம்
இயற்கை அழகை -
எங்கணும்
ஏந்திநின்ற...

பிருந்தாவனம்
புகுந்த -
நந்தர்களும்;
நந்தகோபனும்;

கங்குலும் பகலும்
கண்ணுறங்காது -

ஆயர்களுக்கான மனைகளை
அமைத்தனர்;
சுதையும்
செங்கல்லும் கொண்டு
செவ்வனே - அவற்றைச்
சமைத்தனர்!

ஊர்விட்டு
ஊர்ந்து - வேறோர்
ஊர் வந்தோர் - புதிய
ஊர் ஒன்றை உண்டாக்கினர்...

ஓவியம்
ஒத்த அழகு -
ஒழுகும் பிருந்தாவனத்தில்;
ஒரு நூறு தினத்தில்!

கண்ணனுக்கும் - அவன்
அண்ணனுக்கும் -

பிரியமாயிருந்தது
பிருந்தாவனத்தின் -
சுற்றுப்புறச்
சூழல்;



வெகுவெகு
விருப்பமானது -
அவர்களுக்கு
அங்கு வாழல்!

மாலை வேளைகளில்
மலையடிவாரத்து -
மணல் திட்டுகளில்
மற்றப் பையன்களோடு...

பலராமனும்
பரந்தாமனும்
ஆடிக் களித்தனர்;

232

பாடிக் களித்தனர்;

ஒருவர்
ஒருவராய்
ஒளிந்துகொண்டு
ஓடிப் பிடித்தனர்; அளவு –
கொள்ளாத சந்தோஷத்தில்
கொட்டம் அடித்தனர்!

பச்சைப்
பசும்புல் வெளியில்
பச்சைக்குதிரை ஏறினர்;
பலவகைப்
பந்தயங்களிலும்
பலராமன் கண்ணன் தேறினர்!

கவண்
கற்களை –
வீசி
விருட்சங்களில் உள்ள
பழங்களைப்
பொலபொலவென வீழ்த்தினர்;

குறிதவறாது
குறிவைத்துக்
கொய்யாக் கனிகளைக்
கொய்வதில்...

வனக்குறவரையும்
வியப்பில் ஆழ்த்தினர்!

யமுனை
யாற்றில்...

இக்கரையில்
இறங்கி –
நெடுக
நீந்தி –

அக்கரையில்
அனாயாசமாக ஏறுவர்;
வேகத்தில்
விரால்களை வாளைகளை மீறுவர்!

கறவைகளையும்
கன்றுகளையும்
மேய்க்கும் வயதை – இருவரும்
மேவினர்;

அஞ்சு –
ஆறு –
ஏழு –
எட்டு என்று...

ஒவ்வொன்றாக – அகவை
ஒன்பதுக்குத் தாவினர்!

கோகுலத்தில் – நந்த
கோபனின் நெஞ்சை...

கண்ணன் பற்றிய
கவலை – ஒரு
வண்டாகி
வேளா வேளை குடைந்தது;

பிருந்தாவனம்
புகுந்த பின்...

அவன் மனம் –
'அப்பாடா' என்று –
அளப்பரிய
அமைதியை அடைந்தது!

ஆபத்து மேல்
ஆபத்தாய் வந்து...

அன்றாடம்
ஆயர்பாடியில் –
அலமந்த அவத்தையிலிருந்து
அசோதையும் மீண்டாள்;

தீக்குறிகள் – ஏதும்
தோன்றாததால் –
பூவிதழில் – அவள்
புன்னகையைப் பூண்டாள்!

குடுமிச் சேவல்
கூவியதும்...

தொழுவங்களிலிருந்து
தொகை தொகையாய்ப்
புறப்படும் –
காளைகளும் –

கடாரிகளும் –
கறவைகளும் –
கன்றுகளும் –

மலையடிவாரத்தில் உள்ள
மேய்ச்சல் நிலத்திற்கு; அது –
முதல் பணியல்லவா – பெற்றம்
மேய்த்துண்ணும் குலத்திற்கு!

காலையில்
கதிரவன் கிளம்பியதும்,

கதிரவன்
கிளம்பியதைக் –
காகங்கள்
கரைந்து விளம்பியதும்;

கோலக் கால்களில்
கொலுசுகள் ஒலிக்க –
நீல மயிற்பீலி
நறுங்குஞ்சியில் சொலிக்க –

கறவைகளை ஓட்டிச் செல்லும்
கண்ணன் எனும் இருட்டு; அவ்
இருட்டினின்றும் –
இழியும் வெளிச்சத்தில்...

கதிரவனே – தனது
கண்களைப் பொத்திக்
கொள்வான் –
அவை –
அவியாதிருக்கும் பொருட்டு!

பலராமனும் – இதரப்
பிள்ளைகளும் – கண்ணனின்
பின்னால் போவர்; அவனுக்குப்
பாதுகாப்பு ஆவர்!

அன்று
ஆநிரை –
வழக்கம் போல் – புல்
வெளியில் மேய்ந்திருக்க...

விழுதுகள்
விட்டிருக்கும் – ஒரு



வட
விருட்சத்தின் கீழமர்ந்து...

கானம் வார்க்கக்
கண்ணன் விரும்பித் – தன்
குவியிதழில்
குழல் வைத்தான்;

அதே நேரம்
அவனது –
மதுராபுரி
மாமன்...

தன்விழியில்
தழல் வைத்தான்!

கம்சனின்
கட்டளைக் கேற்ப...

'வத்சாசுரன்' எனும்
வலிவார்ந்த அரக்கன் –

புறப்பட்டான்
பிருந்தாவனம் நோக்கி;
கண்ணன் எனும்
கருந் தெய்வத்தின் –
உயிர் பருகும் தாகத்தை
உள்ளத்தில் தேக்கி!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

**30** கவிஞர் **வாலி**

**கல் ஒன்று;**
**கனிகள் இரண்டு!**

**ஓ!**
ஓரிரு வரிகளில் சொலப் போமோ -

வேய்ங்குழலில் - கண்ணன்
வாசித்த வாசிப்பை?
மாந்தி மாந்தி
மாளாமல் - வேணுவை
ஏந்தி ஏந்தி
எஞ்ஞான்றும் வாசிவாசி யென்று...

யாதவனை - உயிர்க்குலம்
யாசித்த யாசிப்பை?

கறவைகளின் - நீண்ட
காதுகளில்...
முந்நீர் கடைந்தெடுத்த
மூவா மருந்தை நிரப்புகிறது -
மூங்கிற் குழாயில்
முகிழ்த்த இசை; ஓர் -



அவச நிலைக்கு
ஆட்பட்டுவிட்ட –
ஆநிரையால்
அப்புறம் போடவொண்ணுமோ
அசை?

அசை போடாது
அசையாச் சித்திரங்கள்
ஆயின
அவை; அவற்றின் –

கடைவாய் வழியே
கசிந்தது –
பூரணமாய்ச் செரிமானமாகாத
புற் குவை!

குடம்கொண்டு
கவிழ்த்தாற் போல் – கண்ணன்
குழல்கொண்டு
கவிழ்த்தான் கானாமுத பானம்;

அதை
அப்படியே –
ஒரு சொட்டுக்கூட வீணாகாமல்
ஒட்டுமொத்தமாய் ஏந்தியது...

மலையடிவாரத்தில்
மேய்ந்தவாறிருந்த – ஒவ்வொரு
கலைமானின்
காதெனும் ஏனம்!

பின்பு – அப்
புல்வாய்கள் –
மேய்ச்சலையும் விட்டன;
பாய்ச்சலையும் விட்டன;
வாழைப்பூ மடல்போல்
விறைத்து – அவற்றின்

வண்ணச் செவிகள் – அந்த
வேணு கானத்தில் குத்திட்டன!

வேழம்;
வேங்கை; முதலிய –
விலங்குகளும்
விலங்குகளால் பிணைத்தாற் போல்...

நின்ற இடத்திலேயே
நின்றன;

நிழல்
நிறத்தவனின் –
குழல்
குறிஞ்சித் தேனில் –



பிசைந்து
பிசைந்து
பரிமாறிய
பாட்டு உணவை...
தின்னக் கிடைக்காத –
தீனியாய்த் தின்றன!

கோவர்த்தன கிரியே –
கொஞ்சம் கொஞ்சமாய்...

தேயு வயப்பட்ட
தேனிரும்பாய் இளகியது;

நீண்ட
நெடுங்காலமாய் –
நீளக்கிடக்கும் பாறையொன்று
நீர்ப்பண்டமாய் இலகியது!

கொண்டல்கள்
கொடுத்த சீதனமாய்
கோவர்த்தன கிரி – தனது
கோலமிகு தோளில்...

அணிந்திருந்த – நீர்
அங்கவஸ்திரம்
அந்த
அருவி; அதையும் –

கெட்டித்தது
கேசவன் வாயமர்ந்த கருவி!

ஆம்;
ஆனந்த லாகிரியில் –
அவ்
அருவி...

கொஞ்சம் கொஞ்சமாய்க்
குறுகியது;
பின்
பனிப் பாளமாய் –
இழிய இயலாதபடி
இறுகியது!

பாதி இளகி –
பாதி இறுகி –
பொலபொலவென்று உதிர்ந்த –
வெண்
பனித் துகள்கள்...

தாழ்வரையில்
தளதளத்தன கொப்பளமாய்;
அவையும்
அப்படியே உறைய –
மலையடிவாரமே
மாறியிருந்தது உப்பளமாய்!

வானம் ஏறிய
வகை வகையான பறவைகள் –
வேணு
கானம் ஏறிய
கிறக்கத்தில்...

சிறகச்
சிறகடிக்க மாட்டாது –
நேராக –
நெட்டுக் குத்தாகத்...

'தொப்' பெனத்
தரை இறங்கின; அவை –
சொற்பமா யிருக்கும்
சுய அறிவும் இழந்து –
சிற்பமாய்ப் பிறங்கின!

புல்லாங்குழலில் இருந்து
புறப்பட்ட இசை –
பூக்கக் காத்திருக்கும்
பூமரங்கள் மேல் மோத...

முன்கூட்டியே – அவற்றின்
முகைகள் வெடித்தன; உள்ளே
பொத்தி வைத்திருந்த
புதுத்தேனை –
அவிழ்ந்த மடல்கள் வழியே
அவை வடித்தன!

யமுனை –
யாறும்...

இசை வெள்ளத்தோடு
இரண்டறக் கலந்து – ஓடும்
திசை யறியாது
'திடுக்'கெனத் தம்பித்தது;

'என்ன நடந்ததோ?
ஏது நடந்ததோ?' என –
நீர்வாழும் இனமெலாம்
நீச்சுவிட்டுக் கம்பித்தது!

பிருந்தாவனமென்ன?
பிரபஞ்சமே...

கண்ணன் குழலோசையில்
கட்டுண்டு கிடந்தது; அந்த –
கான மூட்டையைக்
கன குஷியாய்க் –
காற்று சுமந்துகொண்டு
காடெல்லாம் நடந்தது!

கறவைகளும்;

பறவைகளும்;
கன்று
காலிகளை –

மேய்க்கவந்த – சின்னஞ்சிறு
மேய்ப்பர்களும்;

கண்ணன்
காலடியில் –
வசமிழந்து
வீற்றிருக்க...
உதடுகுவித்து – அவன்
ஊதும் குழலுக்குள்
உன்னதமான – இசை
ஊற்றிருக்க...

துளைகள் வழியே – அவன்
துவர் வாய் அதனைத் துப்ப –
துய்த்துத் துய்த்து – அதில்
துளைந்தோர் நினைவுகள் தப்ப...

தக்க
தருணம் –
வாய்த்தது என்று – எண்ணினான்
'வத்சாசுரன்' எட்டத்தில் நின்று!

'கண்ணனைக்
கண்டிப்பாய்க்
கொன்று வருவேன்; அவனுயிரைத்
தின்று வருவேன்!' என்று...

வத்சாசுரன் – கம்சனுக்கு
வாக்குக் கொடுத்து விட்டு –
வந்திருக்கிறான் – தனது
வரை நிகர்த்த தோள்கள் தட்டி;
நமனுக்கு நமன் தானென்று –
நாப்பறை கொட்டி!

வத்சாசுரன் –
வருகைக்கு முன்...

கண்ணனின் அம்மான்
கம்சனின் ஆணைப்படி –
கண்ணனும் அவன் அண்ணனும்
கன்றுகள் மேய்க்கும் இடத்தில் –

விளா
விருட்சமாய் – ஓர் அசுரன்
வடிவெடுத்தான்; கண்ணன் –
ஓய்வெடுக்கத் தன் நிழலில்
ஒதுங்கும் நேரத்தில் – அவன்மேல்
சாய்ந்தழிக்க முடிவெடுத்தான்!

ஆபத்துகளின் நடுவே – தான்
அமர்ந்திருப்பதை –
ஆபத்பாந்தவன் அசோதை மகன்
அறிந்திருந்தும்...

ஒன்றும்
ஓராதவன் போல் –
ஊதிக்கொண்டிருந்தான் குழலை;

பிஞ்சு விரல்களால் – வெண்
பஞ்சு விரல்களால் –
பொத்திப் பொத்தி எடுத்தான்
புல்லாங்குழலில் உள்ள புழலை!

வத்சாசுரன் மாறினான்
வலிவும் பொலிவும் மிக்க.

காளைக்
கன்றாக; போய்க்
கலந்தான் – அங்கிருந்த
கன்றுகளோடு தானும் ஒன்றாக!

எதிர்பாராத தருணத்தில் –
எம்பெருமான் திருமேனியை...

முட்டிச்சாய்த்து – தரையில்
மூச்சு முட்டத் தேய்த்து – கால்
குளம்புகளால்
குரல் வளையைத் துளைத்து –

உயிர் பருக - அவன்
உத்தேசித்தான்; அதனை -
உணர்ந்தும் கண்ணன் - குழலை
உச்சஸ்தாயியில் வாசித்தான்!

சில நாழிகள்
சென்ற பின்...

வாசுதேவன் - குழல்
வாசிப்பதை நிறுத்தினான்;
வேணுவைத் - தன்
விலா ஓரத்தில் பொறுத்தினான்!

அடுத்த கணம் -
அவனது குழல் வயப்பட்டு...

இதுகாறும் - நினைவு
இழந்திருந்த -
சகல உயிர்களும்
சகஜ நிலைக்குத் திரும்பின;
அந்த இடத்தில்
அளப்பரிய -
ஆனந்தமும் அமைதியும்
அரும்பின!

உடன் வந்திருக்கும்
உற்ற தோழர்களான -
இடைச் சிறுவர்களின்
இடையே -

மாயக்கண்ணன் - ஒரு
மெல்லிய புன்னகையை -
வீசினான்; வீசிவிட்டுப்
பேசினான்!

'அதோ!
ஆற்றங்கரையில்...

கொழுகொழுவென்று
கொப்புகள் விட்டு -




வளர்ந்திருக்கிறது - ஒரு
விளா மரம்;

நாம் - இந்த
நதிக்கரைக்கு -
தினம்தினம் வந்தும் - நம்
திருஷ்டியில் விழா மரம்!

கிளைக்குக்
கிளை -

பசிய ஓடுகளோடு - விளாம்
பழங்கள் பழுத்து -
திரள் திரளாகத்
தொங்குகின்றன;

அடடா!
அவற்றைப் பார்த்தாலே...
உண்ணாவில்
உமிழ் நீரும்;

உள்ளத்தில்
உவகையும்...

என்னுள்
ஏராளமாய்ப் பொங்குகின்றன!

வாருங்கள்; நாம்
விரைந்து சென்று –
வேண மட்டும்
விளாம்பழங்கள் தின்னலாம்;

தின்றுவிட்டு – ஊர்க்குள்
திரும்பியதும் – ஊரவர்க்கு
புதிய விளா மரத்தின்
பழருசியைப் பன்னலாம்!'

இவ்வாறு – கண்ணபிரான்
இயம்பியதும்..

கவணும்;
கற்களும்;
கொண்டுவந்தான்
கோபாலர்களில் ஒருவன்...

பழுத்த
பழங்களைக்
கவண் கல்லால் அடிக்கவும்;
கீழே விழவிழக் கடிக்கவும்!

கண்ணன் சிரித்தான்; தன்
கருத்தை விரித்தான்!

'கவண் எதற்கு?
கல் எதற்கு? அந்த –
விளா மரத்தை
வீழ்த்து வதற்கு?

அதோ!
அங்கு நிற்கிறதே...

கன்று –
ஒன்று; அதை –
விளா மரத்தின் மேல்
வீசி –

பழங்களை உதிர்க்கலாம்
பொல பொல வென்று!'

திடீரென்று – கண்ணன்
தூக்கினான்...
வாலையும் – நாலு
காலையும் பிடித்து –
கன்றுக்
குட்டியாய் நிற்கின்ற –
வத்சாசுரன் எனும் நஞ்சனை;
வஞ்சனை நெஞ்சனை!

கண்ணன்
கண்டான்...

இரு அசுரர்களையும்
இரு தீங்காய்;



உடனே – திரு
உள்ளத்தில் –
அடிக்க
அவா வினான்...

ஒரு கல்லில் –
இரு மாங்காய்!

வீசிய கன்றால் –
விளா மரத்தை அடித்தான்;
இருவர் வாழ்வையும் –
இமைப்பொழுதில் முடித்தான்!

கஞ்சன்
காதுகளுக்குத் –
தகவல் எட்டியது; அது –
தேளாய்க் கொட்டியது!

எட்டுஊர்
எட்டும்படி –
கூவினான்; அடுத்தொரு
கொடியவனை ஏவினான்!

(தொடரும்)


244
பகாசுரன்.
பவித்திரமான
பாகவதத்தைப்
பரீட்சித்துக்கு – சுகர்
போதித்து வருகையில்...
கவனம் பிசகாது – அவன்
கண்கள் அவரையே நுனித்தன;
கரியமால்
கண்ணனாகிக்
கால்நடை மேய்க்கும்
காருணியத்தை நினைந்து...
அவனையறியாமல்
அவனது கண்கள் பனித்தன!
31 கவிஞர் வாலி

'ஞாலம் மெய்யல்ல – எனும்
ஞான ஒளி –
நிறையப் பெற்ற – எனது
நல்ல சீடனுக்கு –
நீள்விழியோரம் – ஏன்
நீர்த் துளி?'

வினவினார்
வியாசரின் பிள்ளை;
விடையிறுத்தான்
விஜயனின் பிள்ளையின் பிள்ளை!

'அஞ்சுக முகத்து
அண்ணலே! எனை –
வாழ்விக்க வந்த
வள்ளலே!

திருமறை உறையும் – தங்கள்
திருவாயால்..

கண்ணன் கதையைக்
கேட்கக் கேட்க –
எல்லாம் வல்ல நாராயணனின்
எளிமை புரிகிறது;

சருவவியாபியான – அவனது
சவுலப்பியம் எண்ணி – எனது
சிந்தை
சிலிர்ப் பெய்த –

நெக்குருகிப் போய் – என்
நெடுங்கண் நீர் சொரிகிறது!

அடடா!
அஷ்ட –
வசுக்கள் தொட்டுப் – பல்வகை
வானோர் தொழநின்றவன்; முனம்
முசுக்கள் துணைகொண்டு – பத்து
முகத்தனை வென்றவன்; எட்டுச்
சிசுக்கள் வரிசையில் – எட்டாம்
சிசுவாய் வந்திங்கு – கறவைப்
பசுக்கள் மேய்க்கின்ற – அப்



பரமபதத்து மன்னவனின்...

எளிவந்த தன்மையை
என்ன சொல்ல?
இருளில்
இருக்கும் –
சின்னஞ்
சிறு –

வீட்டுக்கு ஒளிதர – அகல்
விளக்காக உருவெடுத்து – அவ்
ஆதவனே வந்தால் கூட – இவ்
அருளுக்கு அது உவமை யல்ல!'

வைகுந்த
வாசன் –

மேதினி யிறங்கி – ஒரு
மேய்ப்பனானதை – இவ்வாறு
பரீட்சித்து – கண்கள்
பனிக்கப் பேசியதும்..

இணை
இன்னார் – என்றில்லாத

சுகர்
சொன்னார் –
மெய்ப்பொருளைப் பற்றிய
மெய்ப் பொருளை!

'பரீட்சித்து மன்னா!
பரமேட்டியான பகவான்...

கண்ணனாகப் பிறவாது
கடவுளாகவே பிறங்கினாலும் –
வைகுந்தத்தில்
வீற்றிருந்தபடி...

அவன்
ஆற்றுவது –
பசுக்களை மேய்க்கும்
பணிதான்;

சகல
சீவான்மாக்களும்
அவனளவில் – பசுக்களின்
அணிதான்!

'பசு' எனும்
பதத்திற்குச்
சரியான பொருள்
சீவான்மா;
சீவான்மாக்களைச்
சீராகப் –
பராமரிப்பவன்
பரமான்மா!

பசுக்களை ரட்சிக்கும் பதி –
பசுபதி; அவனது
பாதபங்கயம்தான் – நல்கும்
பரகதி!

மண்பால் தோன்றிய யாவும்
பெண்பால்;
அனைத்திற்கும்
ஆளனாயிருக்கும் –
அட்டாட்சரன் ஒருவனே



ஆண்பால்!
'புருஷன்' என்னும்
பதம் –
சுத்த சைதன்னியத்தையே
சுட்டும்;
அனைத்துயிரும்
அதற்கு –
வாழ்க்கைப் பட்டவை
வாழுநாள் மட்டும்!

ஆதலால்தான்
அரியின் –
புகழ்பாடும் சூக்தத்திற்குப்
'புருஷசூக்தம்' என்று பெயர்;
இந்த
இரகசியத்தை நீ ஓர்ந்தால் –

தெளியும் – உனக்குத்
தோற்றிய மயர்!'

இன்னணம்
இயம்பிவிட்டு...

பாகவதத்தை –
பகவான் சுகர் தொடர –

விட்ட இடத்திலிருந்து
வளர்ந்தது அந்த விருந்து!

கண்ணன் பண்ணும்
காரியங்களைப் பார்க்கையில்...

'இவன் எவனோ?' என –
இடைச்சிறுவர் எண்ணுவர்;
வெருவி – ஒருசில
விநாடிகள் –
விலகி நிற்பவரின்
விழிகளை...

மாயத்திரை மறைக்க – மீண்டும்
மாயனை நண்ணுவர்!

மாடுகளை
மேய்க்கப் போகும் இடத்தில்...

நிதம்
நிதம் –
நீலவண்ணக் கண்ணன்
நிகழ்த்துகின்ற –

அனேக
அற்புதங்களை; மனித
ஆற்றலுக்கு
அப்பாற்பட்ட –
அவனது
அதீதமான அருட் செயல்களை;
காணக் கிடைக்காது – தாம்
கண்ட கனவுகளாக...

வீதிக்கு
வீதி நின்று – சிறு
வயதுப் பையன்கள்
வாயாரப் பேசுகையில் –

'ஏன் இப்படிப் பேசுகிறார்கள்?'
என்று –
அசோதைக்கும் உரோகிணிக்கும்
அய்யம் எழும்;

எனினும் – அது
எழுந்த வேகத்திலேயே விழும்!

விழிகளில்
வியப்பை நிறைப்பான்;
வினாடியில்
விருட்டென மறைப்பான்!
இவ்வாறு – கண்ணன்
இயற்றி வந்த –

திருவிளையாடல் – ஒவ்வொன்றும்
பெருவிளையாடல்; அவை –
ஒருவிளையாடல் –
இருவிளையாடல் அல்ல;
ஏராளம் உண்டு – இன்னும்
எடுத்துச் சொல்ல!

ஒருநாள்
ஓர் உச்சி வெயிற்பொழுதில்...

யாப்பமைதி கெடாது
யாத்த கவிதை போல் –
யாண்டும் திகழ்கின்ற
யமுனை யாற்றின் தீரத்தில்...

கொக்குகளோடு கொக்காய் – ஒரு
கொக்கு நின்று கொண்டிருந்தது;
அதன் – நீண்ட
அலகின் நெருக்கத்தில்...

வேண மீன்கள்
வந்து மேய்ந்தும் – அவற்றை
வவ்வாமல் – வெறும்
வாயினை மென்று கொண்டிருந்தது!

வாயருகே
வந்த –

வாளைகளை;
வவ்வால்களை;
வரால்களை;
வஞ்சிரங்களை;

இரையாக ஏற்காது – காலால்
இடறிவிட்டுக் கொண்டு நின்ற –
கொக்கைக் கண்டு – மற்ற
கொக்குகளெல்லாம் வியந்தன;

'கொக்கோ? அல்லது
கொக்கொக்கும் – வேறு வகைப்
பறவையோ?' என்று – அதன்
பக்கம் நிற்கப் பயந்தன!

ஆம்!
அந்த
அபூர்வக் கொக்கு
ஆற்றங்கரைக்கு வந்தது –

மீன் உண்ண அல்ல; கண்ணனின் –
ஊன் உண்ண!

கொக்கு வடிவில் வந்த
கொடிய அசுரன் அவன்;
அங்கு
அவனை
அனுப்பி வைத்தது – கம்சன்
அல்லால் வேறு எவன்?
அவன்
அலகு நீண்ட –
கொக்கென வந்து – பல்லுயிரைப்
பொக்கென உண்டவன்;
'பகம்' என்றால் கொக்கு; பேர் –
பகாசுரன் எனக் கொண்டவன்!

கால்நடை மேய்க்கும் கண்ணன்
கால்கை கழுவ –
ஆற்றங்கரைக்கு வருவானென
அங்கு காத்திருந்தான்;

அகலமான
அலகு திறந்து –
அசோதை மகனை விழுங்க
அவாவிக் கண் பூத்திருந்தான்!

தொலைவில் கண்ணனும் – அவன்
தோழர்களும்...

வருவதைக் கண்டு – கண்
விழிசிமிட்டும் கணத்தில் –
வளர்த்தான் பகாசுரன் – தன்
வடிவத்தை;
பிருமாண்டமான கொக்கென்று
பிள்ளைகள் பார்த்துப் –
பயப்படும்படியாகத் – தனது
படிவத்தை!

நெருங்கிவந்த சிறார்கள் –
நடுங்கினர்;

ஆறடி –
அலகினையும்;
நூறடி –
நெடுமையையும்;

தெங்குதரும்
காயளவு திரண்டு – தீக்
கங்கு தரும்
கண்களையும்;

ஒன்பது
ஒன்பது அடி –
ஓங்கிநின்ற
ஒரு சோடிக் கால்களையும்;

கண்டு –
கலங்கி ஒடுங்கினர்!

அனைத்தும்
அறிந்து –
அஞ்சாது நின்றான் கண்ணன்;
அஞ்சன வண்ணன்!

எவரும் – சற்றும்
எதிர்பாராத சமயத்தில்...
கண்ணனை – ஒரு
கவளம் சோறு போல் –
விழுங்கிவிட்டான் – கொக்கென

வந்தவன்; அன்னணம்
விழுங்குவதாய்க் கம்சனுக்கு -
வாக்குத் தந்தவன்!

கொக்கிடம்
கண்ணனைத் -
தின்னக் கொடுத்தோமே என்று
திக்பிரமை பிடித்தாற்போல் -

விழிகள்
வெறித்து நின்றனர் - உடன்
வந்த பிள்ளைகள்; ஒரு
வஞ்சமில்லாத வெள்ளைகள்!

வாய்விட்டுக் கூவவும்
வக்கில்லை; அந்தக்
கள்ளமற்ற கிள்ளைகளுக்குக்
கண்ணனை விட்டால் திக்கில்லை!

கொக்குக்குள் சென்ற கண்ணன் -
கொக்கின் -
குடலுக்குள் செல்லாது - அதன்
குரல்வளையிலேயே நின்று...
கொதிக்கலானான் - ஊழிக்
கனலாக;
அரக்கனின் உள்ளெங்கும்
அனலாக!

தகிப்பைத்
தாங்க மாட்டாது...

உண்ட கண்ணனை
உமிழ்ந்தான் பகாசுரன்
வெளியே; விழுந்ததும் -
வெகுண்டெழுந்தது தெய்வ ஒளியே!

ஆம்!
அசோதை மைந்தன் -
அடங்காச் சினம் கொண்டு
அள்ளினான் கொக்கை; அதன் -
கூரிய அலகுகளை - இரு
கூறாகப் பிளந்து - உள்



ஆவியை உருவ -
அரக்கன் ஆனான் சக்கை!

கண்ணன் ஆற்றலைக்
கண்கூடாகக் கண்ட - அவன்
தோழர்கள் - அவனைத்
தொடவும் அஞ்சினர்;
வழக்கம்போல் - அவர்கள்
விழிகளில் - கண்ணன்
மாயத்திரையை விரித்து - நினைவை
மறக்கடிக்க...

அடுத்த கணம்
அவர்கள் - தமது
தோள்களில் கண்ணனைத்
தூக்கிவைத்துக் கொஞ்சினர்!

போனால் என்ன
பகாசுரன்? கம்சன் -
அடுத்தவனை அனுப்பினான்;
அவன் பேர் 'அகாசுரன்!'

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

**மாடும்**

**மனிதனும்.**

பகாசுரனின் பின்னோன்
அகாசுரன்;
அண்ணனை விட - அவன்
அசகாயசூரன்!

கண்ணன் - தன்
அண்ணனைக் -
கிழித்துப் போட்டுவிட்ட சேதி
காதுக்கு எட்டியதிலிருந்து...

அகாசுரன்
அளப்பரிய வெறியாயிருந்தான்;



அண்ணனைக் கொன்ற
கண்ணனை –
அண்டங் காக்கை
வண்ணனை –

அடியோடு –
அழிப்பதில் குறியாயிருந்தான்!
கம்சன்
கண்டு கொண்டான் –

அகாசுரனின் வெறியை;
அவன் வைத்திருக்கும் குறியை;
சந்தர்ப்பத்தைத் – தனக்குச்
சாதகமாக்கிக் கொள்ள –
விரும்பி –
வாஞ்சைமிகு...

அழைப்பெனும் பேரால் –
அசுரனுக்கு வைத்தான் பொறியை!

அசுரன்
அடுத்த நாளே வந்தான்;
போஜகுலத்துப்
புரவலன் –
கம்சனுக்குக்
கைகூப்புத் தந்தான்!

கம்சன் – அவனைக்
கண்டதும் – தன்
கண்களிலிருந்து
கண்ணீரைப் பிதுக்கினான்; தான் –
காரியவாதி என்பதை மட்டும்
காட்டாது கண்ணுள் பதுக்கினான்!

'அன்பார்ந்த
அகாசுரனே!
ஆனானப்பட்ட
ஆயிரம் கண்ணன் –
அரியாசனத் திருந்து
ஆளுகின்ற...

அமராவதி நகரில் கூட
ஆரும் இல்லையே – உன்
அண்ணனுக்கும் உனக்கும்
அஞ்சாத சுரனே!

அவ்வாறிருக்க – கேவலம்
அவனியில் வாழும்...

நரன் ஒருவன்; அதிலும்
நாலிரண்டு வயதான சிறுவன்;
வானவரும் தானவரும்
வெல்லற்கரிய...

பகாசுரன் உயிரைப்
பறித்திருக்கிறான்; நீண்ட
மூக்கினை – இருகூறாக
முறித்திருக்கிறான்!

கொசு அடிப்பது போல் – பெருங்
கொக்கை அடித்திருக்கிறான்;

சிறு உளி – பெரும்
சயிலத்தைப் பிளப்பதுபோல் –
சிறு பயல் – உன் அண்ணனின்
சீவனை முடித்திருக்கிறான்!

தானவர் குலத்திற்கே – இது
தாங்கமுடியாத அவமானம்;
எவனோ இடைச் சிறுவனால் – வான்
ஏறிவிட்டது அதன் மானம்!

ஈட்டியைச் சாய்த்து விட்டது
ஈர்க்கு;
என்னையும் உன்னையும்
எள்ளி நகையாட –
வேறென்ன வேண்டும்
ஊர்க்கு?

தமையனை இழந்த

துக்கத்தில் நீ இரு;
நான் சென்று – அந்த
நந்தன் குலத்து –
நாலிரண்டு வயதுப் பையனோடு
நடத்துகிறேன் செரு!'

அகாசுரனின்
அவலநிலைக்கு



இரங்குதல் போல்
இன்னணம்...

கஞ்சன் என்னும்
கபடன் – தன்
உரையில் பொய் வைத்தான்;
உடைவாளில் கை வைத்தான்!

கம்சன் – தன்பால்
கழிவிரக்கம் கொண்டு –
வார்த்தைகளில் அன்பை
வழியவிட்டது கண்டு –

அகாசுரன் –
ஆத்திரமுற்று –
வடவைத் தீயென
விழிகளில் – பெரும்
வெப்பத்தை ஏற்றினான்; பின்
வீராவேசமாய்ச் சாற்றினான்!

'அரசே!
அற்பத்திலும் அற்பமான...

சிறுவன் ஒருவனைச்
சேதிக்கத் –
தாங்கள் செல்வதா? தங்கள் –
தடக்கை வாள் அவனைக்
கொல்வதா?

விட்டிலைக் கொல்ல
வல்லூறு எதற்கு?
நான் செல்கிறேன் – அதை
நசுக்கு வதற்கு!

கண்ணனை – என்
கரங்களே கொல்லும்;
வெகு
விரைவில் –
காற்று வந்து – உங்கள்
காதுகளில் அதைச் சொல்லும்!'

சூரன் அகாசுரன் – இவ்வாறு
சூள் எடுத்தது –
மகிழ்வூட்டியது – கஞ்சனின்
மனத்திற்கு;

ஆரத் தழுவி
ஆசி கூறி –
அனுப்பி வைத்தான்

அவனை பிருந்தா வனத்திற்கு!

இந்த
இடத்தில்...

பாகவதம் கேட்டு வந்த
பரீட்சித்து மன்னனுக்கு -
எண்ணத்தில்
ஏற்பட்டது ஒரு துளக்கம்;

அதுபற்றி
அவன் சுகரிடம் -
வெளிப்படையாய் விசனித்து
வேண்டினான் விளக்கம்!

'மகா முனியே! மனத்துள் - மும்
மலங்கள் புகா முனியே!

கண்ணனைக்
கொல்லும் முயற்சியில்...
தோற்கத் தோற்கத்
தொடர்ந்து முனையும் -
தன்
தனயன் கம்சனை...

தந்தை உக்கிர சேனர் - ஏன்
தடுக்கவில்லை?
புத்திரன்
புன்னெறி ஆற்றி - நரகம்
எய்துவதை எதிர்த்து
ஏனவர் குரல் கொடுக்கவில்லை?

பெற்ற
பிள்ளை -
விரும்பினாலும்
விரும்பா விட்டாலும்...

ஓதவேண்டிய நெறியை
ஓதவேண்டியது தானே -

தகவுமிக்க - ஒரு
தகப்பனின் கடன்; ஏனதை -
உக்கிர சேனர் செய்யவில்லை
உடனுக் குடன்?'

பரீட்சித்துக்கு -
பதில் சொல்லும் முகத்தான்...

சுகப்பிரம்மம்
சுட்ட லானார் - சில
உலகியல்
உண்மைகளை;



உறவுகளால்
உயிர்கள் உறும் -
வெம்மைகளை;
தண்மைகளை!

'பரீட்சித்து மன்னனே!
பார்த்தனின் மகனின் மகனே!

கம்சனின்
காரியங்களை -
உத்தமரான
உக்கிர சேனர் ஒப்பவில்லை;

ஆதியில் -
அவர்...

தடுத்தார் ஒருமுறை; அவ்வாறு -
தடுத்த குற்றத்திற்கான
தண்டனையிலிருந்து - அவர்
தப்பவில்லை!

தேவகி பிள்ளைகளை - அவன்
தீர்த்துக் கட்டிய போதே...

அவர்
ஆத்திரம் மிகுந்தார்;
அதன் பயன்
அவர் சிறை புகுந்தார்!

உக்கிர சேனர் பால் -
உக்கிரம் கொண்ட கம்சன்...

சிம்மாசனம்;
செங்கோல்;
சிவிகை;
கவிகை;

அனைத்தையும்
அவரிடமிருந்து வவ்வினான்;
அரசன்
அவனே என்று -
அரியணையில்
அமர்ந்த வணம் எவ்வினான்!

பாவம்! உக்கிர சேனர்!
பதவி பறி போனது;

முதுமை ஏறி - அவரது
முதுகில் உட்கார வசதியாக -
அவருக்கு
அகவையும் அதிகம் ஆனது!

அத்தகு மனிதனை
ஆர் மதிப்பர்?
ஆரும்
ஆன மட்டும் அவ மதிப்பர்!

ஆறொருவனின் வாய்ச் சொல்லும்
அவனிடம்...

பொருளுள்ள போது
பொருளுள்ள தாகிறது;

பொருளற்ற போது
பொருளற்ற தாகிறது!

வயோதிகமும்
வாய்த்து விட்டால் -

செல்லுமா - அவன்
சொல்? அது -
கிணற்றில் போட்ட
கல்!

பரீட்சித்து மன்னா! நான்
பகர்வ தானது -
புதிதல்ல; உனக்கும்
புரிந்த விஷயமாகிப் போனது!

விளைநெல் வீட்டுக்கு;
வைக்கோல் மாட்டுக்கு;
என -
ஏற்பட்டிருக்கும் விதிப்படி...

உழவுக்கு உதவும் வரைதான் -
உழவு மாடு உழவு மாடு;
தைத்
திங்களில் -
மாலை
மரியாதைக்குரிய விழவு மாடு;

உழவு மாடு - உழவுக்குதவாத
கிழவு மாடு - என்றானால்
இருக்குமா மாலை மரியாதை? அது -
இறைச்சிக்குரிய இழவு மாடு!

மாட்டின் கதையும் -
மனிதன் கதையும் ஒன்றுதான்;

இந்த உண்மை -
இலகுவாகப் புரியும்...

முழியில் புரை;
முடியில் நரை;
முகத்தில் திரை; இந்த –
மூன்றும் தோன்றும் –

கிழமை வரும்
கிழமை அன்றுதான்!

கம்சன்
கணக்கில் –

உக்கிர சேனர் –
உழவு மாடு அல்ல; கிழவு மாடு!
அவர் சொல்
அவர் மகனிடம் செல்லாது;
செல்லாத சொல்லைச்
சான்றோர் வாய் சொல்லாது!

அதுமட்டும்
அல்ல;
பரீட்சித்து மன்னா!
பிறிதொன்றும் உண்டு சொல்ல!

வாய்க்கும் பிறவிதோறும்
வரும் உடன் – அவனவன்
வாங்கி வைத்திருக்கும்
வினைக் கடன்!

அதை –
அடைக்கும் வரை – விடாது
கருவறை; கல்லறை; எனும் –
இருஅறை ஒருவரை!

இந்த விஷயத்தில் –
இன்னொரு விதி என்னவென்றால்...

அவனவன் கடனை
அவனவன் தான் –
அடைக்க வேண்டுமே
அல்லாது –

ஒருவன் கடனை – வேறு
ஒருவன் அடைக்க இயலாது;

பிள்ளை பட்ட கடனைப்
பிள்ளையே அடைக்கிறான் –
என்று
எண்ணித் தான்...

உக்கிர சேனர் – வெறுமனே
உட்கார்ந்திருந்தார் –
தன் மகனைத்
திருத்த முயலாது!

வேந்தே! இன்னமும் –
விளக்கமாகச் சொன்னால்...

ஒருவனது ஊழ் – அந்த
ஒருவனுக்கான கூழ்; அது –
கைத்தாலும்
கைக்காது இனித்தாலும் – மீதம்
வைக்காது
உண்டு தீர்க்கும் வரை...

எடுக்க நேரும் –
எவனும் பிறவிகள் ஏழ்!'

மகரிஷி சுகரின் –
மணிமொழி கேட்டு...

மன்னன் பரீட்சித்து
மனம் தெளிவு பெற்றான்;
தொல்புகழ் பாகவதத்தைத்
தொடர்ந்து கேட்க லுற்றான்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்



**அகாசுரன் வதம்.**

**பொ**ழுது
புலர்ந்து –

குணதிசைக்
குளத்தில் –
ஆதவ அரவிந்தம்
அலர்ந்து –

வெளியெங்கும்
வெளிச்சத் தேன் ஒழுக்கியது;

ஒழுக்கி –
ஓரிடமும் பாக்கியின்றி –
ஒளி வெள்ளத்தில் – பூமியை
ஒட்டுமொத்தம் முழுக்கியது;

இண்டு
இடுக்கெல்லாம் –
இறைந்து கிடக்கும்
இருட்டைச் சுருட்டிக்கொண்டு...

வேகமாக – இரவு
வெளியேறுகையில் – கால்

33 கவிஞர் **வாலி**

வைத்த இடமெல்லாம்
வெளிச்சச் சேறு வழுக்கியது;
அதன் உள்ளத்தை –
அவமானச் சூடு புழுக்கியது!

ஒருவாறு – எழுந்து
ஓடி ஒளிந்தது;
வரை முதல்
தரை வரை தெளிந்தது!

இடையறாது
இரவு பெய்த பனிமழையில்...

தேகம்
தெப்பமாகிப் போன –
மரங்கள் – தமது
மலராடைகளை...

காலை வெய்யிலில்
காயப் போட்டன;
இலைகள் கிளைகள் கூட – அந்த
இளஞ்சூட்டை வேட்டன!

காளிந்தி நதி கூடக்
காஞ்சன நதியாய்க்
காலைக்கதிர் அள்ளிப் பூசிய
கனக முலாமில் அவிர்ந்தது;

நீருக்கு
நிறமில்லை எனும் –
அபவாதம்
அதற்குத் தவிர்ந்தது!

பசும்புல் சூடியிருந்த
பனி மகுடத்தை...

சூரிய விரல்கள்
சுண்டி விட – அது
தரையில் விழுந்து
துண்டானது;

'புல்லுக்கு எதற்குப்
பூ மகுடம்?' எனப் –
பொச்சரிப்பில்
புலம்பி நின்றிருந்த

பூ மரங்களுக்கு – முடிதுறந்த
புல்லைக் கண்டு...

அவ்வமயம் – ஓர்
அற்ப சந்தோஷம் உண்டானது!

வாயசம்;
வலியன்;
வனக்குயில்;
ஆகிய
அஞ்சன வண்ணத்துப் –
பறவைகளெல்லாம்
படபடவெனச் சிறகடித்துப் –
பறந்தன
பதுங்கும் இடம் தேடி...

இரவி – தம்மையும்
இரவின் எச்சமென்று
தின்றுவிடுமோ – எனும்
திகிலோடு;

மூச்சு
முட்டமுட்ட – மலை
முடியேறிக் கலந்தன – அதன்
முகட்டிலிருக்கும் முகிலோடு!

பிருந்தாவனத்துப்
பிள்ளைகள் –
காலிகள் மேய்க்கக்
கிளம்பினர்...

கண்ணன் தலைமையில்; அவன்
அண்ணன் தலைமையில்!

கழுத்தில்
கட்டிய –
சின்னச் சின்ன மணிகள்
சப்திக்க –

மந்தை மந்தையாய்
மாடுகள் –
பூமியில்
புழுதி பறக்க –

புலரியின்
புதுக் காற்றைச் சுவாசித்தபடி...

கோவர்த்தன
கிரியின் –
தாழ்வரை நோக்கி நடந்தன;
தரையைக் குளம்பால் இடந்தன!

கோவலர்களோடு –
கோவிந்தன் வருவதை...

ஆற்றுப் படுகையில்
அடர்ந்த புதரோரமாய் –
ஆரும்
அறியாவண்ணம் நின்றிருந்த –

அகாசுரன் – விழிகளில்
அனல் வழிந்திட நோக்கினான்;
குறுக்கே மறைத்து நின்ற – ஒரு
குருந்த மரத்தை – தனது

நடுவிரல்
நகத்தால் –
நிமிடத்தில்
நிலம் பெயர்த்து நீக்கினான்;

அவன்
அல்லும் பகலும்...

மரக் கறி போல்
மலிவாக நினைத்து –
நரக் கறியை
நச்சும் நாக்கினான்;

இருந்த
இடத்திலிருந்தே...

தொலை
தூரத்து –
மனித சஞ்சாரத்தை
மோப்பம் பிடிக்கும் மூக்கினான்!

அவன்
ஆகிருதியும் அப்படி;

வரை கூட
விரிசல் காணும் – அவன்
வேகமாய்
வைத்தால் போதும் ஓரிரு தப்படி!

அத்தகு
அரக்கன் –
ஆநிரை ஓட்டி
ஆயர்பாடிச் சிறாரோடு –

நடு
நாயகமாய் வரும் –
நவ்வர்க்கனி நிறத்து
நந்தகுமாரனை...

முதன்முதல் பார்த்து – அந்த
முக விலாசத்தை உவந்தான்;

அடுத்த கணமே – தன்
அண்ணன் ஆவியைக்
கரந்த –
கண்ணன் அவனென்று கண்டு...

உச்சி முதல்
உள்ளங்கால் வரை –
உலைத்துருத்தி வயப்பட்ட
உலோகமாய்ச் சிவந்தான்!

சினம் –
சிரம் ஏறியது;
முழைப் பாம்பாய் – அவன்
மூச்சு சீறியது;

மறு விநாடி
மாமிச மலை அனைய – அவன்
மகா மேனி
மலைப் பாம்பாய் மாறியது!

விரும்பிய வேளையில்
விரும்பிய வடிவெடுக்க வல்ல –

அந்த
அசுரன் –
பெரும்பாம்பாகிப் படுத்தான்
பிலம் போல் வாய் பிளந்து;

ஆராலும்
ஆகாது
அவ் அரவின்
அகல நீளம் அளந்து!

ஆம்;
ஆங்கு –
திடும் என – ஒரு
தொடர்ச்சி மலை
தோன்றினாற்போல்...

நீள நெடுக –
நிலத்தில் கிடந்தான்;

பக்க மிருந்த
பல மரம் செடிகள்
பொக்கெனப் – பட்டுப்
போகுமாறு –

கக்கியது அவன் வாய் –
கடும் விடந்தான்!

ஆடாது அசையாது இருந்த
அவனது –
வாயை – குகை
வாயிலாய் எண்ணி –

கண்ணனும் பிறரும்
கறவைகளோடு –
உட்புகுகையில் – தான்
உண்ணலாம் என்று...

வெகு ஆவலோடு – அவர்கள்
வருகைக்குக் காத்திருந்தான்;
பாம்புக் கண்
பூத்திருந்தான்!

யாதொரு சூதும் வாதும் அறியா –
யாதவச் சிறுவர்கள்...

அகாசுரனின்
அகண்ட வாயை –
ஏதோ ஒரு மலைக்குகை
எதிர்ப்பட்டதாய் எண்ணி –

கன்று
கறவைகளோடு –
பாம்பின் வாயுள்
புகுந்து –
வயிற்றுப் பகுதி வரை
வந்துவிட்டனர்;

ஆக –
அகாசுரன்
அவாவிய வண்ணம்
அவனுள் அகப்பட்டனர்!

வல்லரக்கன் – அப்போதும்
வாயை மூடவில்லை;
அதற்குக் காரணம்
அவன் வாய்க்குள் –
புகாது வெளியே நின்றான்
பலராமனோடு...

கண்ணன் எனும் – கால் முளைத்த
கருந்துளசிக் கொல்லை!

அவனும்
அவன் அண்ணனும் –
ஓட்டிவந்த பசுக் கூட்டத்தை
ஓரம் கட்டிவிட்டு...

பூ வாய்க்குக் கீழுள்ள – தன்
மோவாயை –
வேய்ங்குழலால் – மெல்ல
வருடியவாறு –
சிந்திக்கலானான்
சின்னக் கண்ணன்;

இளவல்
இன்னணம் –

எதை யோசிக்கிறான்
என்பதை –
அறியமாட்டாது
அமைதியாய் நின்றான் அண்ணன்!

'இதுநாள் வரை –
இங்கில்லை இப்படியொரு வரை!

என்னணம்
எழுந்தது இன்று –
குலைநடுங்க வைக்கும்
குகை வாயிலோடு ஒரு குன்று?

இது –
இயற்கைக்கு –
ஒவ்வாத

ஒன்று!

புல் முளைக்கவும் – சில
பொழுதுகள் தேவைப்படும்போது...

கல் முளைத்துக்
கணப் போதில் –
குன்றாவ தென்பது
கடைந்தெடுத்த பெரும் சூது!

என்னைக் கொல்ல
எனது –

அம்மான்
அனுப்பிய –
ஆரோ
அசுரன் ஒருவன்தான் –

படுத்திருக்கின்றான்
பார்வைக்குப் – பெரும்
பர்வதம் போல் தெரியும்படி
பாம்பாக;

என் மூலம் – வானம்
ஏறவேண்டியவன் என்று...

விதிக்கப்பட்ட விதி – இவனை
விரட்ட – இங்கு
வந்து கிடக்கிறான் – இந்த
வல்லரக்கன் வீம்பாக!'

அவ்
அசோதையின் –
இளஞ்சிங்கம்
இவ்வாறு எண்ணினான்;

மறுபடியும் – தாய்
மாமன் முகத்தில் – கரியைத்
தீற்ற வேண்டுமென்று
தீர்மானம் பண்ணினான்!

பலராமனையும் –
பசுக் கூட்டத்தையும் –

கூடக்
கூட்டிக் கொண்டு –
கோவிந்தன் – அக்
குகைக்குள் புகுந்தான்;

'சிக்கியது இரை!' என்று –
சிறியன் நினைத்தானே யல்லாது –

'சிக்கியது இறை!' என்று –
சிந்திக்கும் நினைப்பற்ற...

அசுரன் அகாசுரன் –
ஆனந்தம் மிகுந்தான்!

பிலம் போல்
பிளந்து வைத்த – தன்
பெரு வாயைப்
பேயன்...

பொசுக்கெனப்
பொத்திக் கொண்டான்;
கண்ணன் வலியை – அடுத்த
கணமே அவன் கண்டான்!

பாம்பின் வயிற்றுள்
புகுந்த வாசுதேவன்...

விசுவரூபம் எடுத்து
வெங்கனல் என விழித்தான்;
இராக்கதன் உடலை –
இரு கூறாகக் கிழித்தான்!

மீட்டான் – உயிரொடு
மாடுகளையும் மற்றவரையும்;
வழக்கம் போல் – அடுத்த
விநாடியே –
மாயம் செய்து –
மறதிக்கு ஆட்படுத்தினான்...

விசுவரூபம் கண்டு –
வியப்பு உற்றவரையும்!

அடுத்து – ஓர்
ஆபத்து நேர்ந்தது...

சில நாள்கள்
செல்லல்;
ஆனால் –
அது கம்சனால் அல்ல!

**(தொடரும்)**



**பிரமனின் –**

**பிள்ளை விளையாட்டு.**

**நி**லத்திடை
நீள நீளமாய் விழுந்த –
காலை நேரத்து நிழல்
காலின் கீழேயே குறுகுகின்ற –

உக்கிரமான
உச்சி வெயில் நேரம்;
தகிப்பு
தாளாமல் –
தீர்த்தக் கரையில்
திரியும் காற்றிலும் –

உலர்ந்து போனது
உள்ளீடான ஈரம்;

# கிருஷ்ண விஜயம்

நின்ற இடத்தில்
நின்ற படியே –
கோகுலங்கள் அசைபோட்டன
கோவர்த்தன கிரியின் ஓரம்;

பேய்த்தேர் படர்ந்திருந்தது –
பார்வைக் கெட்டிய தூரம்!

பெற்றம் மேய்க்க
பலராமன் வரவில்லை அன்று;
கருமமே கண்ணாகக்
கண்ணன் வந்திருந்தான் –
கோகுலங்களுக்கும்
கோபாலர்க்கும் காவல் என்று!

தலைக்குமேல் வெயில் வந்து
தகிக்கும் வரை...

ஆட்டமும் பாட்டமுமாக
அனைவரும் போக்கினர் பொழுதை;

அவரவர்க்கான
ஆணிப்பொன் ஊஞ்சலாக –
ஆக்கிக் கொண்டனர்
ஆற்றோர ஆலமரங்களின்...

தாடைகளில் முளைத்த
தாடிகளாய்த் தொங்கிய விழுதை!

வன்பசி –
வயிற்றைக் கிள்ள...

விருட்சத்தின்
வேர் முடிச்சுகள் மேல் –
வசதியாய்
வீற்றிருந்து –

பிறரும் கண்ணனும்
பகல் உணவைப் புசிக்கையில் –

கூப்பிடு தூரத்தில்
கூட்டம் கூட்டமாக –
மேய்ந்து கொண்டிருந்த
மாடு கன்றுகளைக் காணாமல்...

ஆயர்குலச் சிறுவர்
அதிர்ந்தனர்;

வெப்பத்தில் பாதி –
வெருவலில் பாதி –
வேர்த்து விறுவிறுத்து
விதிர்ந்தனர்!

'கண்ணா! நம் –
கறவைகள் எங்கே?

இவ்வளவு நேரம் –
இருந்ததைப் பார்த்தோமே அங்கே!'

கண்ணனின்
கரங்களைப் பற்றி – இவ்வாறு
கூவினர் சிலர்;
கேவினர் சிலர்!

'பயப்படாதீர்கள்; நான் –
பார்த்துவிட்டு வருகிறேன்!' என்று –
புறப்பட்டான் கண்ணன்;
புயல் வண்ணன்!

கோவர்த்தன
கிரியின் –
பக்கவாட்டில் உள்ள
புல் திட்டுகள்;
பொதும்பர்கள்;
புதர்கள்;

மற்றும் – அருகிருந்த
மலைக்குகைகள்; கண்களை
மறைத்து நின்ற – பெரும்
மணல் மேடுகள்;

என
எல்லா இடங்களிலும் -

கண்கொத்திப் பாம்பாய்க்
கண்ணன் தேடினான்;
நெருப்பு வெயில் - அந்தக்
கருப்பு வெயிலை -
வாட்டி எடுக்க -
வண்ணமேனி வாடினான்!

காளைகளை;
கறவைகளை;
கன்றுகளைக்
காணவில்லை எந்தத் திசையிலும்;
உதடுகள் குவித்து
ஊதிப் பார்த்தான் குழலை;

குழலோசை கேட்டு
குதித்தோடி வரும் கறவைகள் -
அன்னணம்



அன்று -
விரைந்து வரவில்லை - அவன்
வேய்வழி வார்த்த இசையிலும்!

பசுக் குலத்திற்கே - மிகவும்
பிரியமான விருந்தது;

அதற்கே -
அவை -
வரவில்லை என்பது - அவனுக்கு
வியப்பாக இருந்தது!

'சரி! நம்
சினேகிதர்களை விட்டு -
திசைக்கொருவராய் அனுப்பித்
தேடச் சொல்வோம்!' என்று...

தோழர்களோடு
தான் உணவு உண்ட -
மரத்தடிக்கு
மாதவன் வந்தான்;

அதுகாறும்
அங்கிருந்த -
நண்பர்களையும் காணாமல்
நெஞ்சம் வெந்தான்!

கண்ணன்
கண்ணனாக இருந்து -
கணப் பொழுது
கவலைப் பட்டான்; பின் -

கண்ணன்
கடவுளாய் மலர்ந்து...

என்ன நேர்ந்தது?
எவரால் நேர்ந்தது?
என்பதை
எளிதில் ஓர்ந்து -

இளநகை ஒன்றைத் – தனது
இதழ்களில் இழைய விட்டான்!

கண்ணன் புன்னகைத்த
காரணத்தை –

வேந்தன் பரீட்சித்துக்கு
விளக்கினார் – அந்த
வாலறிவன் நிகர் – என
வாழுகின்ற சுகர்!

'காவலனே!
கண்டுகொண்டான் கண்ணன் –
கறவைகளையும் – தனது
காதல் தோழர்களையும்...

கவர்ந்து
கொண்டுபோய்க்
கரந்து – ஒரு
குகையில் வைத்திருப்பவன் –

பிள்ளை விளையாட்டுக் காட்டும்
பிரமதேவன் என்று;
ஆதலால்தான்
அசோதை மகனின் –
அரவிந்த இதழ்களில்
அரும்பியது இளநகை ஒன்று!'

இன்னணம் – சுகர்
இயம்பியதும்...

பரீட்சித்து
பேசினான்;
பதில் வேண்டி ஒரு வினாவை
பவ்வியமாய் வீசினான்!

'பாகவதத்தைப்
புகட்டும் பெரியவனே!

தொழவும்



தோத்தரிக்கவும் உரியவனே!

வைகுந்தம் வாழும் – மகா
விஷ்ணுதான்...

கிருஷ்ணனாய்க்
கீழிறங்கி வந்திருப்பது –
கலைமகள்
கணவனுக்குத் தெரியாதா?

மாயையில் வல்ல
மாயவனிடமே – தனது
மாயையைக் காட்டுதல் – மகா
மடமையென்று புரியாதா?

பசுக்களையும்

பிள்ளைகளையும் - அவன்
மறைத்து வைத்த
மர்மம் என்ன? விஷ்ணுவின் -

தொப்புளில்
தோன்றியவனுக்கு -
அப்பனிடமே
அப்படியொரு வர்மம் என்ன?

இது - பிரமன்
இயற்றிய...

வினோதமா?
விபரீதமா?
அல்லது -
அந்த -
மாலவன்
மகிமையைச் சோதிக்க -
மலரவன் கொண்ட
மமதையா?
மாலவனுக்கு
மலரவன் சமதையா?'

வினவினான்
வேந்தன் பரீட்சித்து;
பதிலுரைத்தான்
பாதம் முளைத்த ஞானவித்து!

'மன்னா! இதற்கு -
மமதைதான் காரணம்;
அயன் சோதித்து
அறியக் கூடியதா...

ஆதியும்
அந்தமும் -
அற்ற
அந்தப் பூரணம்?

நித்திய லோகத்தை
நீங்கி -
நிலம் வந்து நாரணன்
நிகழ்த்தும் லீலைகளை...

சத்தியலோகத்தில் இருந்த
சதுர்முகன் கண்டான்: தனது -
அத்தனின்
அளப்பரிய மகிமைகளை -
அருகிருந்து பார்க்க
அவாக் கொண்டான்!

அவ்வாறு - அவன்
அவாவியது குற்றமல்ல;
தானும் - ஒரு
திருவிளையாடல் புரிந்தால் -
தன்முன் -
திருமால் வந்து நிற்பானென...

எண்ணினானே
எண் கண்ணன் - அந்த
ஏமாப்பை என்ன சொல்ல?

பரீட்சித்து மன்னா!
பூலோகவாசியோ
மேலோகவாசியோ...

அதிகாரம் வந்தால் - கூடவே
அகங்காரம் வருகிறது;

ஆரால்
அந்த -
அதிகாரம் - தனக்கு
அமைந்தது என்பதை...

சிந்திக்காத சிறுமையைச் -
செருக்கு தருகிறது!

அகம் - தைதையென
ஆடுவதுதான் அகந்தை;
அவ்
அகந்தை என்பது...

அகம்
அணிந்து கொள்ளும் –
அவலமான
அழுக்குக் கந்தை!

அதனை
அவிழ்த் தெறிந்து –

நெஞ்சை – எவன்
நிர்வாணம் ஆக்குகிறானோ –
அவனே
ஆன்மானுபூதி பெற்றவன் – என...

அறி;
அவன் ஏவலில் நிற்பான் அரி!

பசுக்களையும்; கோ –
பாலர்களையும்;

மறைத்து வைத்தால் – மீட்க
மாதவன் வருவான் என –
மமதையில் இருந்தான் அயன்;
மசிவானா அந்தச் சின் மயன்?

நரன் என்றாலும்;
நான்முகன் என்றாலும்;
பரன் வசப்படுவது
பணிவுக்கும் பக்திக்கும்தான்;

அவன்
அகப்பட மாட்டான் –
புரை மிகுந்த
புத்திக்கும் யுக்திக்கும்தான்!

யார் மகிமையை
யார் சோதிப்பது? அது –
சோதித்து அறிய வொண்ணாச்
சோதி –
என்றல்லவோ –



எல்லா மறையும் சாதிப்பது!

பாரளந்த பெருமானை
யாரளந்து பார்த்தவன்?
அவன் – தன்
அடி முடி –
ஆர்க்கும் புலப்படாது நின்று
ஆர்த்தவன்!

நான்முகனுக்கு
நல்லறிவு புகட்ட –
கண்ணன் எண்ணினான்; ஒரு –
காரியம் பண்ணினான்!'

என்று – சுகர்
எடுத்தோதவும் –

'ஏந்தலே! எம்பிரான் –
என்ன காரியம் பண்ணினான்?'
என்று –
ஏக ஆர்வமொடு...

பரீட்சித்து – சுகப்
பிரம்மத்திடம் கேட்டான்;
அதை –
அவரது –
விரிந்த செவிகளில் – ஒரு
விண்ணப்பமாய்ப் போட்டான்!

(தொடரும்)



**பலராமன் பராக்கிரமம்.**

திருவாய் மலர்ந்தார்
தபோதனர் சுகர்; ஞானத்
தருவாய்த்
தரைமிசை –
தழைத்த
தத்தை முகர்!

"பிரமன் செய்த
பெருமாயையால்...

ஆவினங்களும் –

ஆயர்குலச் சிறுவர்களும் –
ஆங்கொரு குகையில்
அடைந்து கிடக்க –

கண்ணபிரான்
கருதினான் –
அன்னக்கொடியோனாகிய
அரவிந்தனின் –
ஆணவத்தை
அடக்க!

அடுத்த கணம்
அவனே...

அத்துணை கறவைகளாகவும் –
அத்துணை சிறுவர்களாகவும் –
அவற்றைப் போல் –
அவர்களைப் போல் –

அச்சு மாறாமல்
அப்படியே ஆனான்;

மேய்ச்சல் முடிய – கதிர்
மேலைத்திசையில் படிய –
பிள்ளைகள் பசுக்களோடு
பிருந்தாவனம் போனான்!

எல்லாவற்றிலும்
எஞ்ஞான்றும் –
அந்தர்யாமியாய் இருக்கும்
அவன்...

அது
அதற்கும்;
அவர்
அவர்க்கும்;

உரிய உடம்புகளோடு –
ஊர்க்குள் உலவினான்;
கோபியரோடு – அவர்தம்
கொழுந்து போலக்
கோலாகலமாகக் –
குலவினான்!

ஆதிசேஷன்
அவதாரம் ஆனதால் –
அண்ணன் பலராமன் மட்டும்
அறிந்து கொண்டான்...



எல்லா ராகவும் –
எல்லா மாகவும் –
வல்லான் வாசுதேவனே
வடிவெடுத்து நிற்கிறானென்று;

பிரமன் புரிந்த
பெருமாயம் பற்றி..

கண்ணன்
கூறினான் –
அண்ணன் காதோடு

அவன் அருகினில் சென்று!

ஒரு வருஷம்
ஓடியது இவ்வாறு:

பிரமன் – ஒருநாள்
பிருந்தாவனம் வர –
கோபாலர்களோடு –
கோவிந்தன் காட்சி தர –

அயன் – உடனே
ஆயர்குலச் சிறுவர்களை –

ஒளித்துவைத்த குகைக்கு
ஓடிப்போய்ப் பார்க்க –
அங்கும் இருந்தனர்
அனைவரும் அவ்வாறு!

வல்லான்
வல்லமையை –
ஓர்ந்த
ஓதிம வாகனன்...

திரும்பி வந்து – கண்ணன்
திருவடிகளில் விழுந்தான்;
விழுந்தவன் – விழிநீர்
விழுந்தவாறு எழுந்தான்!

'எழுதாக் கிளவிக்கும்
எட்டாத விந்தையே! எனை –
ஏரார் நாபிக்கமலத்தில்
ஏந்துகின்ற தந்தையே!

அறியாமையினாலும்; ஓர் –
அற்ப சந்தோஷத்தாலும்;
செப்பரிய உன் மகிமையைச்
சோதிக்கத் துணிந்தேன்;
தோற்றுப் போய் – நெஞ்சில்
தொத்திக் கிடந்த –
தருக்கும் செருக்கும்
தக்கணமே தணிந்தேன்;

புத்திகெட்ட செயலைப்
புத்திரன் செய்தானென்று
பொறுத்தருள வேண்டி – உன்
பாதபங்கயத்தில் பணிந்தேன்;

தூய – உன்
திருவடித் துகளையே –
அருளார்ந்த
அட்சதை யென்று
அள்ளி –
அடியேன் சிரசுகளில் அணிந்தேன்!

எங்கும் –
எதிலும் – நீதான்
இருக்கின்றாய் மன்னி; எளியேன் –
இழைத்த பிழை மன்னி!'

என்று வணங்கி – பிரமன்
ஏறினான் வானம்;
கண்ணன் சிருட்டித்த
கறவைகள் சிறுவர்கள்
மண்மிசை
மறைய...

உச்சிவெயிலில் – மதிய
உணவு வேளையில் –
எவை யெவையோடு –
எவரெவ ரோடு – முனம்
என்னணம் இருந்ததோ –
அன்னணம் இருந்தது கானம்!"

கிருஷ்ண மூர்த்தியின்
கீர்த்தியை –
இவ்வாறு
இசைத்து விட்டு...

'பரீட்சித்து மன்னா! தொடர்ந்து –
பாகவதத்தை நுகர்!' என்று –

போதிக்கலானார் - சத்வகுண
போதனை நிகர்த்த சுகர்!

இம்முறை - அவர்
இயம்பியது...

பலராமனின்
பீடு;
அனந்தனின்
அம்சமாகிய
அவனுக்கு
அவனேதான் ஈடு!

பகல்வண்ணன்
பலராமனும்; கருங்
கடல் வண்ணன்
கண்ணபிரானும்;

அகவை கூடக்கூட -
அழகு கூடி நின்றனர்;
தேக்கைத்
தோற்கடிக்கும் -

ஆக்கை
அமையப் பெற்று...

அவ்வப்போது
அசுரரைச் சாடி நின்றனர்!

பகவானும்; அவன்
படுக்கையும்;
பின்
முன்
பிராதாக்களாகப் பிறந்து...

ஊர்க்குள்
உலவினால் - அவ்
ஊரும்
ஊரவரும் -

பெற்ற
பேறு -
ஒப்ப
ஒன்றுண்டோ வேறு?

கண்ணபிரான் - வண்ணக்
காலடிச் சுவடுகள்...
பட்டுப் பட்டுப்
பிருந்தாவனத்துத் - தெருப்
புழுதி மண்
புனிதம் ஆனது; அதில் -
புரண்டு புரண்டு - மேனியில்
பூசிக் கொண்டு - வீட்டு
விலங்கெலாம்
வினையற்றுப் போனது!

வீதிமண்ணில் - அளைந்து
விளையாடிய பிள்ளைகளுக்கு -
வியாதிகள்
விட்டுப் போயின; அம்
மண்ணை உண்ட
மதலைகளின் -
பாவங்கள்
பட்டுப் போயின!

தொழுவத்து மாடுகளின் -
தொங்கும் மடிகளில்...

விரல்
வைக்கும் முன்பே - முலைக்
காம்புகள் வழி
கனமழையாய்க் கொட்டியது பால்;

முட்டி முட்டி
மூச்சு முட்டக் -
கன்றுகள்
குடித்த பின்னும்...

கறந்த பாலைக்
கொட்டிவைக்கப் போதவில்லை சால்!

கண்ணனின் - திருக்

கண் பட்டால்...

பிரைகுத்தாமலே –
பால் தயிரானது மண் தாழியில்;
கடகடவென்று – மத்தால்
கடையாமலே –
தயிர் – வெண்ணெயாய்த்
தானே திரண்டது சில நாழியில்!

நித்தமும்
நிகழ்த்துவான் விந்தை; எனினும் –
'யாரவன்' என எண்ணியதில்லை
யாதவர்தம் சிந்தை!

அவன் இருக்கும் இடத்தில்
ஆனந்தம் இருந்தது;
அவன்
அங்காந்து சிரிப்பான்;
அது சிரிப்பா? அல்ல! அல்ல!
அறுசுவை விருந்தது!

சுருங்கச்
சொன்னால்...

பிருந்தாவனத்தில் – கண்ணனைப்
பிடிக்காதவர் இல்லை; அவனது –
கொழு கொழு கன்னத்தைக்
கோபியர்களில் –
கனியென்று
கடிக்காதவர் இல்லை;

வாய்த்த போதெல்லாம்
வாய் முத்தங்கள் –
தந்து தந்து – உதடுகள்
தடிக்காதவர் இல்லை;
அவனை
அரை விநாடி பிரிந்தாலும் –
துள்ளும் தரை மீனாய்த்
துடிக்காதவர் இல்லை!

காலையில் – தினமும்
கண்ணன் தன் தோழர்களோடு –
மாடுகளை
மேய்க்கக் கொண்டு போகையில்...

வீட்டு
வாசல்களில் நின்று
வஞ்சியர்
வழியனுப்புவர்; அவனுக்கு –
வழித் துணையாய்த் – தம்
விழியனுப்புவர்!

கண்ணனும் – அவன்
அண்ணனும்...
வீட்டிற்கு
வந்து சேரும் வரை –
அசோதைக்கும் உரோகிணிக்கும்
அவர்தம் வீடே ஆயுள் சிறை!

அன்னையர் கவலையில்
அர்த்தம் உண்டு; ஏனெனில்



அன்புப் பிள்ளைகள்
ஆநிரை மேய்க்கின்றனர் –
ஆற்றங்கரையில் – அன்றாடம்
ஆபத்தை எதிர்கொண்டு!

அன்றைக்கும்
அப்படித்தான் – ஓர்
ஆபத்து வந்தது; பனம்பழ –
ஆசை அதைத் தந்தது!

காட்டு வெளியில்
கால்நடைகள் மேய்கையில் –

வாடைக் காற்றில் – பழ
வாசம் வந்தது;
உமிழ்நீர் ஊறும் அளவு – அது
உண்ணும் ஆசையைத் தந்தது!

'கண்ணா! பனங் –
காடொன்று அங்கு உள்ளது;

பனம்
பழம் –
ஒவ்வொன்றின் சுவையும் – அடடா!
ஒப்பரிய கள்ளது!

ஆனால் –
ஆரும் அண்டமுடியாமல்..
வல்லரக்கர்கள் – கழுதை
வடிவில் அங்கு திரிகின்றனர்;
அங்கு செல்வோர்தம் ஆவியை –
அவர்கள் உரிகின்றனர்!'

இவ்வாறு சொன்னான்
இடைச் சிறுவன் ஸ்ரீதாமன்;

'வாருங்கள் என்னுடன்; அந்த
வல்லரக்கரைப் பார்ப்போம்!'

என்று –
எழுந்து நடந்தான் பலராமன்!
பார்க்க
பயங்கரமான – பெருங்
கழுதை வடிவில் – சூறைக்
காற்றென வந்தான்...

'தேனுகாசுரன்' எனும்
திருநாமன்!

வாய்மைக்குப் பழுதை –
விளைக்கின்ற கழுதை...

பின்னங் கால்களால்
பலராமனைத் தாக்க; அது –
ஆதிசேஷன்
அம்சமான –

அவனது
ஆத்திரத்தை ஊக்க;

பலராமன்
படங்கொண்ட பாம்பானான்;
கழுதையின்
கழுத்துக்குத் தாம்பானான்!

இறுக்கினான்;
முறுக்கினான்;
நொறுக்கினான்;
நறுக்கினான்!

தேனுகாசுரன் தீர்ந்தான்;
தென்புலக்கோனைச் சேர்ந்தான்!

பலராமன்
பராக்கிரமம்
பிருந்தாவனம் அறிந்தது; அவன் –
பீடு மேலும் செறிந்தது!

**(தொடரும்)**

## காளிங்கனும்
## கருடனும்.

யமுனை
யாற்றின் –
கிழக்கரையில் – கோவர்த்தன
கிரியின் தாழ்வரையில் –
அமைந்திருந்தது
அந்த மடு;



ஆரும்
ஆடவோ –
அருந்தவோ
ஆகாத வண்ணம் –

அதன் நீர்
ஆலகாலத்தை நிகர்த்த கடு!

ஆழமிகு
அம் மடுவின் –

நீர் நிறம்
நீல மாகும்; அதன்மேல் –
காற்று நடந்தால் கூட – அது
கால மாகும்!

வாவியி லிருந்து

தடாகம் வெப்பம் துப்ப...

பொக்கெனப் –
பொசுங்கிப் போகும் மாண்டு!

நனி
நச்சுடைய – அத்
தடாகத்தின்
தலைக்கு மேலே...

காக்கை குருவி பறந்தாலும்
கருகி விழும்;
சில
சமயங்களில் –

கரை
கடந்து –
ஆறடி உயரத்திற்கு
ஆர்ப்பரித்து அலைகள் எழும்;

அவ்
அலைகள் –
எவ்விடம் போய் விழுகிறதோ –

வெளியேறும் விஷக் கமறலில்...

மடுவங்கரை
மரங்களெல்லாம்
மெதுவாகச் சூம்பலாகும்; சூடு –
மேவ மேவச் சாம்பலாகும்!

எப்பொழுதேனும்
எதிர் பாராமல் –
தரையிலிருந்து
தலை காட்டும் புல் பூண்டு;

தலை காட்டிய
தருணமே – அவை
தலையெடுத்து விடாதபடி

அவ்விடம் ஆகும் வெவ்விடம்!

கரிந்து கிடக்கும்
கரை யோரத்தில் –
ஒரே
ஒரு –

கடம்பமரம் மட்டும்
கருகாமல் நின்றது;

வாவியிலிருந்து
வெளிவரும் விஷக்காற்று – அவ்
விருட்சத்தை மட்டும்
வளைக்காமல் விலகிச் சென்றது!

ஏன் –
எனில்...
அமரர் உலகிலிருந்து
அமுதக் குடத்தைச் சுமந்து –

ஒரு சமயம்
ஓதம் சூழ் உலகிற்கு –
கருடன் வருகையில்
களைப்பாற வேண்டி –

அந்தக் கடம்ப மரத்தில்
அமர்ந்து செல்கையில்...

குடத்தில் இருந்த அமுதம்
குலுங்கி – சிந்தி
கடம்ப மரத்தின்
கிளையொன்றில் சிந்திவிட்டது;

எனவேதான் – மடுவில்
எழுந்த விஷக் கமறல் –
அந்த மரத்தை நெருங்குகையில்
அதன் வீரியம் கெட்டது!

நீர்
நிலையில் –
நச்சு
நிரம்பக் காரணம்...

ஒரு கொடிய பாம்பரசன்
ஒளிந்துகொண் டிருந்தான் –
தன்

மனைவி
மக்களொடு – அந்த
மாபெரும்
மடுவில்;

நீர் முச்சூடும
நீலம் பாரித்துப் போனது –

அவனும்
அவன் குடும்பமும்
விட்ட பெருமூச்சுகளில்
வெளிபோந்த கடுவில்!

அந்த
அரவரசனுக்கு –
'காளிங்கன்' என்று பேர்;
அவன் –
கருநிறம் இருட்டுக்கு நேர்!

எவர்
எதிர்ப் படினும் –
அவரை
அக்கணமே –

நூறுதலை வழக்கமாயுடைய
நாகராஜன் காளிங்கனுக்கு
நூறு தலை; நூறும் – கொடிய
நஞ்சு
ஊறு தலை!

அத்தகு காளிங்கன்
ஆதியில் கோலோச்சிய இடம்...

'ரமணகம்' என்னும் –
ரம்மியமான தீவு;

ஆனால்
அந்த –
அழகிய தீவில்
அவனைத்...

தொடர்ந்து இருக்க விடாது –
துரத்தியது சாவு!

அந்தத் தீவின்
ஆதி வாசிகள்...

அரவங்களால – தமக்கு
ஆபத்து நேரா திருக்க –
அமாவாசை தோறும் –
அத் தீவிலிருக்கும் –

புறறுக்களின் அடியில்
படையல் இடுவர்;

நாகர்களுக்குப் பிடித்தமான
நாலாவித உணவு

வகைகளையும் –
நிவேதனமாக வைத்து – நடு
நிசி வரையில் வணங்கி...

உடன் வாழும்
உரகங்களால் விளையும் –
அச்சத்தை
அறவே விடுவர்!

பாம்புகளும் – தங்களுக்குப்
படைக்கப்பட்ட படையலில் –
பகுதியை எடுத்துப் –
பட்சிராஜன் கருடனுக்கு –

வைத்துவிட்டு
வழிபடும் –
வைனதேயனின் விரோதம்
வரக்கூடாது என்று;

பட்சிராஜனும் –
பசியாறிப் போவான் –
பாம்புகளைத் தின்னாது –
அந்தப்
படையலை மட்டும் தின்று!

காளிங்கன் மட்டும் –
கருடனுக்குப் பங்கு
வைக்காமல்...

அனைத்தையும்
அவன் –
தன் குடும்பத்தோடு
தின்று தீர்த்தான்;

பட்சிராஜனிடம் – தனக்கு
பயமில்லை என்று சொல்லி –
செருக்கு ஏறிச் –
சிறிச் சினந்து ஆர்த்தான்!

காளிங்கன் – இன்னணம்
கருடனைப் பகைத்துக்
கொள்ள...

விழிகளில்

வெகுளி பொங்க –
வைனதேயன்
வந்தான் –

காளிங்கனைக் –
கவ்விக் குதறிக் கொல்ல!

ரமணகம் நோக்கி
ரவுத்திர மாக –
அகண்ட சிறையை விரித்து
ஆகாயம் வழி கருடன் வர –

சகல
சர்ப்பங்களும் –
மரப் பொந்துகளிலும்
மலைப் பிலங்களிலும் –

ஓடி
ஒளிந்து கொண்டன;

கருடனுக்கும்
காளியனுக்கும் – மூண்ட
கடும் போரை – அவை
கதிகலங்கக் கண்டன!

விஷப் பற்களால் – கருடனின்
விலாப் புறங்களில் –
காளிங்கன்
கடித்தான்;

கருடன் –
காளிங்கனைத் – தன்
வலிய நகங்களால்
வகிர –

அவன்
அலறித் துடித்தான்!
இருவர் மேனியிலிருந்தும்
இழிந்தது சோரி;

இருவரும் சமர் செய்த
இடத்தில் –
இலங்கியது – ஓர்
இரத்த ஏரி!

காளிங்கனின் நூறு தலைகளையும்
கருடன்...

கூரிய அலகால்
கூறு போட —
ஆங்காங்கு ரணமாகி
அரவரசன் சோர்ந்து வாட —

இனியும் பொருதினால்
இறக்க நேரும் என அஞ்சி —
காளிங்கன்
கருடனிடமிருந்து தப்பி...

யமுனை
யாற்றின் —

அருகிருந்த
ஆழ மடுவிற்குள் புகுந்தான்;

அங்கு சென்று
அவனைச் சாகடித்தல் —

சாவான் என்றிருந்தது
சாபம் ஒன்று!

அந்த
அழகிய மடு —

ஓடிப்போய் காளிங்கன்
ஒளிந்து கொள்வதற்கு முன்பு
திவ்வியமான
தீர்த்தமாக இருந்தது;

பசுக்களுக்கும்;
பட்சிகளுக்கும்;
பிற



ஆகாத காரியம் என்பதை
அறிந்து...

பட்சிராஜன்
பெரிதும் கடுப்பு மிகுந்தான்!

காளிங்கனும் அறிவான் —
கருடன்...
அந்த மடுவருகே — வர
ஆகாது என்று;

வந்தால்
வைனதேயன் —

பிராணிகளுக்கும்;

வெயில் நாளில் —
விடாய் தீர்க்கும் விருந்தது!

மடுவங்கரையில் — வண்ண
மலர்களையும் கனிகளையும் —
தாங்கும் தருக்கள்
தழைத் திருந்தன; அவ் —

விருட்சங்களின்
விரிந்த கிளைகளில் —
கூடுகள் கட்டிக்

குஞ்சு குளுவான்களோடு –

புள்ளினங்கள்
பிழைத்திருந்தன!

அங்கு
அழகு கொழித்தது;
வியனுலகின்
வனப்பை அது பழித்தது!

மடுவங்கரை –
மலர்வனமாகவே தோற்றியது;

அங்கு
அலர்ந்த –
பூக்களைப்
புகழ்ந்து பாடி –

அளிவர்க்கம்
அவைகளுக்கு போதை
ஏற்றியது!

அங்கு –
அனவரதமும் –
மந்த மாருதம்
வந்த மாருதமா யிருக்கும்;

அது
அங்கிருக்கும் –
நாணல்களை வருடி –
அவற்றின்
நாணங்களைப் பெருக்கும்!

அந்த –
அழகிய வாவியில்...
வகை வகையான மீன்கள்
வசித்தன; அவற்றின் –

துள்ளலை –
தடாகத்தின்
வெள்ளலைகள்
ஓவாது ரசித்தன!

மனத்திற்கு அமைதிதரும் –
அம்
மடுவின் கரையில்...

'சௌபரீ' என்னும்
சாது ஒருவர் –
அமர்ந்து
அருந்தவம் ஆற்றினார்;
பொழுதும் –
புராரியைப் போற்றினார்!

மடுவில் உள்ள
மீன்களை –
அடிக்கடி
அங்கு வந்து –

கருடன்
கவ்விச் செல்வதைக் கண்டு –
சாது – மனம்
சஞ்சலப் பட்டார்;

ஜல
ஜந்துக்களைக் கொல்வது –
ஜீவஹிம்சை என்று – அந்த
ஜடாமுனி கண்ணீர் விட்டார்!

கருடனிடம் அவர்
காருண்யம் பொங்க
வேண்டினார் –
கொல்லாமையைக் – கைக்
கொள்ளுக என்று;

கருடன் –
கேட்காததால்...

முனிவர்
முனிந்து –

மறுபடியும்
மடுவங்கரைக்குக் –
கருடன் வரக்
காத்திருந்தார் நின்று!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

**37** கவிஞர் **வாலி**

**காளிங்க நர்த்தனம்.**

**வ**ந்தான் கருடன்
வண்ணச் சிறைகளை விரித்தபடி...

மடுவில் உள்ள
மச்சங்களை உண்ண;

முனம்
முனிவர்
முனிந்ததை
முற்றும் மறந்தான் எண்ண!

சவுபரீ முனிவர்
சந்தி செய்யும் இடமெல்லாம்...

கருடன்
கடித்துத் துப்பிய –
மச்சங்களின்
மிச்சங்கள்;



மீன் ருசி –
தேன் ருசியா யிருந்ததால்...

அவற்றைச் சுவைக்கும்
அவாப் பெருக்கில் –
அறவே அற்றுப்போனான்
அச்சங்கள்!

விளைவு?
வெகுண்டார் முனி;
அரக்காய் ஆனது –
அவரது மூக்கு நுனி!

'இந்த
இடத்திற்கு –
இனி நீ வந்தால்
இறந்து போவாய்!' என்று...

கருடனுக்கு இட்டார்
கடும் சாபம்;

பொதுவாகப்
பொறை விளங்க நிற்கும்
முனிவர்க் கெல்லாம்
முனிவு வந்தால்...

விடுவர் சாபம்; விட்டால்தான் –
விடும் கோபம்!

இருடி –
இட்ட சாபப்படி
இந்த
இடத்தில்...

கருடன்
கால் வைத்தால் – அவன்மேல்
காலன்
கைவைப்பான் எனும் தகவல் –

காளிங்கன்
காதுகளுக்கு –
ஏற்கெனவேயே
எட்டியிருந்தது;

அந்த தைரியத்தில்தான் –
அவன்...

சோரி
சொட்டச் சொட்ட –
மூச்சு
முட்ட முட்ட –

கருடன்
கைக்குத் தப்பி –
மறைந்து – இந்த
மடுவை ஒட்டியிருந்தது!

இது –
இப்படியிருக்க...

நீள நெடுக நெய் தடவி
நீவி விட்ட –
நறுங் குஞ்சியில்
நாலைந்து மயிற் பீலிகளை –

ஒருசேரச் செருகிக் கொண்டு
ஒரு நாள் – செழும்புறகள்
ஓங்கி வளர்ந்த காடு நோக்கி
ஓட்டிச் சென்றான் காலிகளை –



அசோதை மகவு; பீதக
அம்பரம் சூடிய தகவு!

அவனது
அண்ணனைத் தவிர –
ஆய்க்குடிப் பிள்ளைகள்
அனைவரும்...

வந்திருந்தனர்
வாசுதேவன் கூட; நிலத்தில் –
சதுரக் கோடு கீறி – கதிர்
சாயும்வரை கிளித்தட்டு ஆட!

இயற்கைக் காட்சிகள்
இதம் தந்தன கண்ணுக்கு;

புலரியில்
பூத்த –
பிஞ்சு வெயில்
பிரத்தியேகமான –

பளபளப்பைத் தந்தது – ஆற்றுப்
படுகை மண்ணுக்கு!

இளவேனிற் காலமானதால் –
இளங்காலைப் பொழுதிலேயே...

மன்மதன் – உயிர்களுக்கு
மலர்ச்சி ஊட்டினான்;

அவற்றின்மேல்
அஞ்சு அம்புகளைப் போடாது –
ஒன்றிரண்டைப் போட்டு
ஓரளவு வெறி மூட்டினான்!

காமங்களில் மூழ்கி
கடுவன்கள் மந்திகளின் –
ரோமங்களில் மூழ்கி
ரோதனை தரும்...

பொடுகுகளைப்
பொறுமையாய் ஆய்ந்திருக்க;

கடுவன்கள்
காட்டிய வாஞ்சையில் –
மயங்கி
மந்திகள் – அவற்றின்
மார்களில்
மல்லாந்து சாய்ந்திருக்க;

அஃதேபோல் – ஓர்
அத்திமரப் பூங்கிளையில்...

ஆண்கிளி பூங்கிளி
ஆசை வயப்பட்டு –
அலகு மேல்
அலகு வைத்து – ஓர்

அலகு இலா – இன்ப
அவத்தையில் தோய்ந்திருக்க;
அடிக்கடி உரசி உரசி –
அலகுகளும் தேய்ந்திருக்க;

காலை வெயில்
கணகணெனக் காய்ந்திருக்க;

அவ் இளஞ் சூட்டுக்கும்
ஆற்றாது –
அப்போதுதான் அரும்பிய – சில
அறுகுகள் தீய்ந்திருக்க;

உட்காரவும் –
உண்ணி கொத்தவும் –
காக்கைகளுக்கு முதுகு தந்த
கறவைகள்...

சற்றுத் தொலைவில்
சாவகாசமாய் மேய்ந்திருக்க;

கண்ணனும் – அவனது
கண்ணனைய தோழர்களும் –
கிளித்தட்டு ஆடிக்
கால்கைகள் உளைச்சலெடுத்து –

ஓர்

ஓதியமர நிழலில் –
ஒட்டுமொத்தமாய்
ஓய்ந்திருக்க;

வேர்வு –
வெள்ளமாய்ப் பாய்ந்திருக்க;
இதுகாறும் –
இருந்த இடத்தை விட்டு...

மாடுகள்
மெல்ல மெல்ல
மேய்ந்தபடி – காளிங்கன்
மடுவருகே வந்துவிட்டன;

விடாய் மேலிட – அவை
விஷநீரை அருந்தி –
மடுவங் கரையில்
மயங்கி விழுந்து –

முக்கால்
மூர்ச்சையில் வாதைப் பட்டன!

கண்ணன் சற்றே
கண்ணயர்ந் திருக்க –
கறவைகளைக்
காணவில்லையே என்று –

அவன் தோழர்கள்
ஆவினங்களைத் தேடிக்கொண்டு –

யமுனை
யாற்றின் –
படுகை வழியே
பதற்றத்தோடு நடந்து வந்து...

மடுவங்கரையில்
மயங்கிக் கிடக்கும் –
மாடுகளைக் கண்டு
மருண்டனர்;

விளையாடிய களைப்பாலும் –
வேகமாய் வந்த இளைப்பாலும் –
அவர்களுக்கு –
அடி நா வறளவே...

மடுநீரை
மாந்தி –
விஷம் தலைக்கேற
விழிகள் இருண்டனர்!

அறவே – சுயநினைவு
அற்றனர்;

ஒருவர்பின்
ஒருவராய் – நிலத்தில்
உடல் சாய்ந்து – மூர்ச்சை
உற்றனர்!

ஓதியமர நிழலில்
ஒருசில நிமிடங்கள் –
கண்ணயர்ந்திருந்த கண்ணன்
கண்விழித்துப் பார்க்கையில்...

நண்பர்களையும்; கால்
நடைகளையும்; அங்கு
காணாமல் –
கலங்கி நின்றான்;

பின் – ஆற்றுப்
படுகை யோரமாய் –
அவன் –
அவர்களைத் தேடிச் சென்றான்!

பசுக்களும்;
பாலர்களும்;
மடுவங் கரையில்
மயங்கிக் கிடக்கக் கண்டான்;

மடுவுள்
மறைந்திருக்கும் –
காளிங்கனின்
கதை முடிக்க உறுதி கொண்டான்!

அவ்வளவுதான்;
அடுத்த கணம்...

நச்சுக் காற்று
நசிக்க வொண்ணாத –
கடம்ப மரத்தின்மேல்
கடுகி மேவி –

கோவிந்தன்
கோபமுறக் குதித்தான் –
மடுவில்; மடுவின்
நடுவில்!

அதன்பின்
அடித்தான் நீச்சல்; அவன்
நீச்சலுக்கு ஆற்றாது
நீரலைகளே போட்டன கூச்சல்!

கண்ணன்
கன்ன மதம் கசியும் –
காட்டானை போல்
கலக்கினான்...

மடுவையும்; காளிங்கன்
மனத்தையும்;
ஒரே நேரத்தில்! கரை
ஓரத்து மரமெலாம் ஈரத்தில்!

அப்போது
அந்த மடு –
பார்வைக்குத் தென்பட்டது
பாற்கடலை ஒத்து;

மந்திர
மலை போல் – அதனைக்
கடைந்தது
கண்ணனென்னும் கரிய மத்து!

பாற்கடலிலிருந்து – முனம்
புறப்பட்ட நஞ்சு போல்...

மடுவிலிருந்து
மேலெழுந்தான் –
காளிங்கன்
கடும் விஷத்தைக் கக்கி;

அசோதை மகனின்
அழகிய மேனியை –
அழிக்க முனைந்தான்
அவனது நாவால் நக்கி!

பாம்பின்மேல்
படுத்திருப்பவனைப்
படிமிசை வாழும் – சிறு
பாம்பின் விஷம் என்ன செய்யும்?

பிறர்க்கு நேர்வதொப்ப – நீலம்
பாரிக்குமா கண்ணன் மெய்யும்?

அவன் –
ஆக்கையின் நிறமே...

நீலம்; அந்த
நீலம் – அரவின்
நீலத்தால் – மேலும்
நீலமானது; அவனது
ஆக்கை நீலம் பட்டு –
அரவின் நீலம் காலமானது!

கண்ணன் –
காளிங்கனை உதைக்க...

நூறு தலைகளும் – அவனுக்கு
நூல் விடுத்த பம்பரமாய்ச்
சுற்றியது; கிறுகிறுப்பு
முற்றியது;
நாவெலாம் உலர்ந்து
நீர் வற்றியது!

உடனே –
உக்கிரம் மேவி...

காளிங்கன்
கண்ணனைச் சுற்றி இறுக்க –
மயக்கம் வருமளவு
மாயவனை மென்மேலும்
முறுக்க –

அரவுக்கு
அடங்கியது போல்...
நடித்தான் கண்ணன்;
நவ்வர்க் கனி வண்ணன்!

காளிங்கன் பிடியில்
கண்ணன் சிக்கிய சேதி..

பிருந்தாவனத்தில்
பரவ – அங்கு
பலரும் வந்து கூடினர்;
பிரலாபித்து வாடினர்!

அசோதை
அழவில்லை;
நடுக்கத்தால் – அவளுக்கு
நா எழவில்லை!

தாயின்
துயரத்தை – இனியும்
நீடிக்க விடுதல்
நியாயமல்ல வென்று...

கண்ணன் – தன்
கரிய உடலைப்
பருமனாக்கிப் –
பாம்பினின்று விடுபட்டான்;

கடும்
காயமுற்ற
பாம்பரசன் – நூறு
பணாமகுடங்களை விரித்திட்டான்!

கண்ணன்
கலகலவென நகைத்து...

பாம்பின் வால் பற்றிப்
படங்களின் மேல்நின்று –
புரிந்தான் நடம்; காளிங்கன்
சொரிந்தான் விடம்!

தேவமாதரும்;
தேவரும்;
வியனுலகத்து
வித்தியாதரர் யாவரும்;

கண்டு களித்தனர்
காளிங்க நர்த்தனம்;

காலெனும் மத்தால்
காளிங்கன் மேல் நின்று –
நந்த நந்தனன்
நடத்திய மர்த்தனம்!

(தொடரும்)

திருமாலின்
திருநாமம்.

# கிருஷ்ண விஜயம்

வண்மை;
பண்மை;
தண்மை;
திண்மை;

எண்மை;
கண்மை;
நுண்மை;
ஒண்மை;

ஆகிய
அளவற்ற குணா மகுடங்கள் -
சூடிய - மது
சூதனன் -

ஆடிய
ஆட்டத்தில் -
அதிர்ந்தன
அரவரசு பணாமகுடங்கள்!

காளிங்கன் சோர்ந்தான்; யார் -
கண்ணனென ஓர்ந்தான்;
தன்
தலைகள் மீது...

திருவடி வைத்துத்
திருநடம் புரிவோன் -
திருமகள் கேள்வன்
திருமால் எனத் தேர்ந்தான்!

வேண்டினான் -
வேணு கான லோலனை;
'தத்தோம் -
தகதோம் -

தத்தளாங்கு
தகதக தோம்!' என்று...

தாளகதி மாறாது
தாள் மாற்றித் தாள் மாற்றித் - தன்
நூறு தலைகள் மேல்
நூபுரம் ஒலிக்க
நூதன நிருத்தம் புரிந்த
நூறு சூரியனை நிகர்த்த மூலனை!

'அய்யனே! நீ
ஆரென்று அடியேன் அறிந்தேன்;
அறியாத போழ்தில்
ஆணவத்தால் - உன்மேல்
அள்ளி அள்ளி
ஆலத்தை அலையாய் எறிந்தேன்!

விரித்தேன் படம்;
வீசினேன் விடம்;
புரிந்தாய் நடம்;
போக்கினாய் அடம்!

பொறுத்தருள்க என் பிழை;
பொழிக தண்ணளி மழை;
புகுந்தேன் சரண்;
புவிமிசை வேறிலை அரண்!

ஓ! ரட்சகனே! எனை -
ஓவாது ரட்சி;

எனக்கும்
என் குடும்பத்தார்க்கும் -
எஞ்ஞான்றும்
எவ்வூறும் இழைக்காதிருக்க...

38 கவிஞர் வாலி

நீ
நியமித்தால் –
உன் சொல்லைப் புறந்தள்ளுமோ
உன் ஊர்தியான பட்சி?'

இவ்வாறு – யசோதையின்
இளஞ் சிங்கத்தை...

நாகராஜனும் – அவன்
நாயகிகளும் வேண்ட –

கண்ணன்
கீழே இறங்கினான்;
கழிவிரக்கத்திற் குரிய
காளிங்கனுக்காக இரங்கினான்!

'காளிங்கனே! என் –
காலடிச் சுவடு – உன்
பணா மகுடத்தில்
பதிந்திருப்பதால்...

இனி கருடனால் உனக்கு
இடர் வராது;
மக்களுக்கு – இந்த
மடுநீர் –

பயன்பட வேண்டி – உன்
பெண்டு பிள்ளைகளோடு...

நீள்கடல் போய் வாழ் – இனியும்
நீ இங்கிருந்து தொல்லை தராது!'

என்று –
எடுத்துரைத்தான் கண்ணன்;
எழில்மிகு –
எழிலி வண்ணன்!

மடுவிலிருந்து
மளமளவென்று
நகர்ந்தது
நாகம்;

அக்கணமே
அந்த நீர் –

நச்சு நீங்கி
நல்லமுதம் என்றாகி...

தணித்தது – யாவர்க்கும்
தாகம்!

அதன்பின் –
ஆங்கு...

மூர்ச்சையாகிக் கிடக்கும்
மாடுகளையும் தோழர்களையும் –
கண்ணன் – தன்
கண் பார்வையாலேயே
எழுப்பினான்;

'எப்படியடா உனக்கு
இவ்வளவு சக்தி வந்தது?' என –
அசோதை
அறியாமையால் வினவ...

புல்லாங்குழல் வேந்து –
புன்னகைத்து மழுப்பினான்!

நந்த –
நந்தனனின்...

வயது
வளர வளர; அவன்
தாய் மாமன் கஞ்சனின்
தவிப்பும் வளர்ந்தது;

'இன்னமும் கண்ணன்
இருக்கின்றானே!' என்று –
கவன்று கவன்று – அவன்
கட்டுடல் தளர்ந்தது!

இந்த
இடத்தில்...

சுகர்
சுட்டலானார் –
திருமால்
திருநாமத்தின் ஏற்றத்தை;

சுகர்
சுட்டச் சுட்ட...

பரீட்சித்து
பெற்றான் –
பெறற்கரிய
பெரு ஊற்றத்தை!

"பரீட்சித்து மன்னனே! உனை
பயமுறுத்துவனோ தென்னனே?

வையமிசை – நீ
வாழு நாள்கள் –
எண்ணி –
ஏழுநாள்கள் –

என்றிருந்தும்
எமபயம் விட்டு –

எஞ்சியுள்ள நாள்களை
எம்பெருமான் நினைவிலேயே...

கழிக்க விரும்பி – என்னிடம்
கண்ணன் கதை கேட்கிறாய்;
கண்ணன் திருநாமம் – உன்
காதில் விழுந்தாலே – நீ
புளகம் எய்தி – இன்னுமவன்
புகழ் கேட்க வேட்கிறாய்!

கண்ணன் நாமம்
காவலனே! உனக்கு –
எஞ்ஞான்றும்
எமபயத்தை ஓட்டுகிறது; அதே –

கண்ணன் நாமம்
கம்சனுக்கு –
எஞ்ஞான்றும்
எமபயத்தை ஊட்டுகிறது!

'என்னே விந்தை!'
என்றுனது சிந்தை –
ஈண்டு வியக்கிறதல்லவா?

ஈதுஏனென விளக்கிச் சொல்லவா?

ஒருவனுக்கு நறவம்;
ஒருவனுக்கு நஞ்சு;

இறைவன் நாமம்
இப்படியிருக்கக் காரணம் –

அவனவனுக்கு
அமைந்திருக்கும் நெஞ்சு!

நெஞ்சு நேராயிருப்பவனுக்கு –
அஞ்சுவதற்கு ஒன்றுமில்லை;

நரகல்
நனவுகளை
நீள நெடுக – நெஞ்சில்
நிரப்பிவைத்திருப்போனுக்கு...

ஆன்மவலி இலாததால் – அவன்
அஞ்சாதது ஒன்றுமில்லை!

கம்சனுக்கு – நாரதர்
காட்டிக் கொடுத்தார் – அந்தக்
கரியமால்தான்
கண்ணபிரான் என அன்று;

தன்னைக் கொல்ல – தெய்வமே
தரையிறங்கி வந்ததெனில்...

கம்சன்
கருதியிருக்க வேண்டும் – அது
கிடைத்தற்கரிய
கவுரவம் என்று!

அவனது
அச்சமுள்ள நெஞ்சு –
அவனை விடவில்லை
அன்னணம் கருத;
அதற்கு மாறாக – அது
அவனைத் தூண்டியது –
கடுஞ்சினங் கொண்டு
கண்ணனொடு பொருத!

வேண்டியவர்;
வேண்டாதவர்;
எனும் பாகுபாடெல்லாம் -
எஞ்ஞான்றும் கடவுளுக்கில்லை;
ஆரால் வகுக்க ஏலும் -
அவனது கருணைக்கு எல்லை?



தன் அடியாரை - அவன்
தழுவி ஆட்கொள்வான்;
அதனை -
அறிக அறக்கருணை என்று;

தனை அண்டாதாரை - அவன்
தண்டித்து ஆட்கொள்வான்;
அதனை -
அறிக மறக் கருணை என்று!

எவ்வுயிரும் - இறைவனை
ஏற்றும் அடையலாம்;
எவ்வுயிரும் - இறைவனை
ஏற்காதும் அடையலாம்;

ஏனெனில் -
ஏற்பதும் ஏற்காததும் -
அவனளவில் ஒன்று;
அவன்
ஆ; அனைத்துயிர் அவன்
கன்று!

கடவுளாகிய
கண்ணனை எதிர்த்து...

எதுவும் செய்ய
ஏலாது என்று -
ஓரளவு கம்சன்
ஓர்ந்திருக்கக் கூடும்;

ஆயினும் -
அவனது...

ஊழ்வினை
உள்ளிருந்து நடத்த -
அதன் வழிதானே
அவனது அறிவு
நடைபோடும்!

மாவலி மிக்க
மாவலியின் கதை -
கஞ்சன்
கதைபோல் அல்ல;

வானிருக்கும் நாரணன்தான்
வைய மிசை -
வாமனனாய் நின்றான் - அவ்
வல்லரக்கனைக் கொல்ல!

அசுரனின்
ஆசாரியரான –
சுக்கிராசாரியார்
சொன்னார் சீடனிடம்;

தானமாய் மூவடிமண்
தருகிறேன் என்று –
வாமனனுக்கு
வாக்குத் தந்த மூடனிடம்!

'மன்னா! மூவடி
மண்கேட்டு வந்திருப்பவன்...

மகாலட்சுமியை – வல
மார்பினில் வைத்திருக்கும் –
அரி – என்று
அறி!'

சுக்கிரர் – இப்படிச்
சொன்னதும் –
மாவலி மகிழ்ந்தான்;
மனம் நெகிழ்ந்தான்!

'குருவே! திருமகள்
குடியிருக்கும் திருமார்பன் –
இவன் என்றால்
இதனிலும் எனக்கேது பீடு?
இவன்கை கீழே;
என்கை மேலே;
இதனைப் பேசாதோ
இனி வரலாற்று ஏடு?'

இவ்வாறு
இயம்பி –

தன்னையே
தந்து – மாவலி
பாதாள லோகம்
போனான்;

ஓரேழு சிரஞ்சீவிகளில்
ஒருவன் ஆனான்!

மாவலியின் பக்குவம் – கம்ச
மன்னனுக்கு இல்லை;
அடுத்தடுத்து மீறினான்
அறத்தின் எல்லை!

ஆம்;
அந்தக் –
கம்சன் அனுப்பினான்
கண்ணனின் ஆவியை –
வாங்கிடப்

'பிரலம்பன்' என்னும்
பெயருடைய ஒரு பாவியை!"

சுகர் – இன்னணம்
சொல்லி இடைவெளி
விட்டார்;
பரீட்சித்து நெஞ்சைக் –
கண்ணன்
பெருமைகளைச் சொல்லித்
தொட்டார்;

எடை
என்னவென்று –
அவன்
அறிய –
அவன்
அகத் தராசில் –
திருமாலின்
திருநாமத்தை இட்டார்!

'அதன் எளிமை;
அதே நேரத்தில் அதன்
வலிமை!'

இரண்டும் ஓர்ந்தான்
இந்துவமிசத்து அரசு;
பரீட்சித்து எனும் – நற்
பண்புகளின் சிரசு!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

**பிரலம்பாசுரன் வதம்.**

**வி**ளாவிய
வெந்நீர் போல் –
வெதுவெது என்றிருந்தது
வெயில்;

ஆம் என
அக்கருத்தை –
வழிமொழிந்தது காற்றும்
வீசு கையில்!

கானல் காணாமல் போனது
கானில்;

ஆரம்பம்
ஆகிவிட்டது –
ஆனி
ஆடிக்கான முதிர் வேனில்!

பட்டாம்பூச்சிகள்
பறந்தபடி –
அந்தமோ அந்தம்
ஆற்றங்கரைச் சூழல்;

ஆறு – தன்
அலைத் துடைப்பத்தால் கூட்ட....
ஒருவழியாய்ப் போனது – படுகை

**39** கவிஞர் **வாலி**



ஓரத்தில் – பல நாள்
குப்பையும் செத்தையுமாய்க்
குவிந்து கிடந்த ஊழல்;

கடுமையான –
கத்திரி...

மூன்று வாரக் கணக்கோடு
மூட்டை கட்ட –
விருட்சங்களுக்கும்
விருப்பமா யிருந்தது –

கொளுத்திய
கோடை வெயிலின் தாழல்;

தன்மீது
தாராளமாகக் –
குந்திக் கூவக்
குயில்களைக் கூப்பிட்டது...

நதியலை – கால்
நனைக்க நின்றிருந்த –
குங்கும மரம் – எனக்
குறிக்கப் பெறும் ஞாழல்!

மிதமான சீதோஷ்ணநிலையில் –
மிதந்த மலையடிவாரத்தில்...

காடாய் மண்டிக் கிடந்தது
கருந்துளசி;
அது கண்ணனுக்கு இஷ்டமான
அருந்துளசி!

கண்ணன்
கழுத்துக்கு – அது
காலையிலும் மாலையாகும்;
மாலையிலும் மாலையாகும்!

அசோதை
அவ்வளவு அழகாகக் –
கட்டுவாள்
கருந்துளசி மாலை;

அதை



அணிவித்துத்தான் -
கண்ணனை அனுப்புவாள்
கறவை மேய்க்க அன்றாடம் காலை!

அன்றும் -
அதுபோல்...

துளவ மாலை - தோளில்
துவளத் துவளக்
கண்ணன் வந்தான் - ஆற்றங்
கரைக்கு;

ஆவினம்
ஆங்காங்கு
அலைந்தபடி இருந்தது -
அதற்கான இரைக்கு!

வழக்கம் போல்
விளையாட்டில் ஈடுபட...

நீள
நெடுக
நிழற்றிய
நெடுமரம் ஒன்றின்கீழ் -

ஆயர் சிறுவர்களோடு
ஆயத்தமாயினர் -
அம்புலியும் அமாவாசையும்
அண்ணன் தம்பி ஆனதுபோல் -

படிமிசை
பிறங்கும்
பலராமனும்;
பரந்தாமனும்;

அதுபோன்ற தருணத்தில்
அவர்களைத் தீர்த்துக் கட்ட -
அங்கு
அனுப்பியிருந்தான்...

பிரலம்பன் எனும் பேயனை -
பகவான் கண்ணனின் மாமனும்!

யாதவச் சிறாரோடு - தானும் ஓர்
யாதவச் சிறுவனாக...

வடிவெடுத்து - அவர்களது
விளையாட்டில் கலந்துகொண்டான் -
வஞ்சனையில் - கஞ்சனை
விஞ்சி நிற்கும் பிரலம்பன்;
வாசுதேவனின் -
வலியறியாத பெருஞ்சும்பன்!

கண்ணன் - அவனைக்
கடைக்கண்ணால் பார்த்தான்;

தன்னைத்
தின்ன வந்திருப்பவன் - என்று
தெரிந்துகொண்டு
தேறல் ஊறும் செவ்வாய் வழியே...

ஓசையின்றி -
ஒரு புன்னகையை வார்த்தான்!

அவன்பால்
அணுவளவும் தனக்கு -
அய்யமில்லை என்பதை
அறிவிக்கும் முகத்தான்...

கண்ணன் - அவனைத் தன்
கட்சிக்குத் தலைவனாக்கினான்
விளையாட்டில்; தொடங்கியது -
விளையாட்டு மணல்மேட்டில்!

இரு கட்சிகளாய்
இடைச் சிறுவர் பிரிந்தாட -
ஒரு கட்சியில் கண்ணன்;
மறுகட்சியில் அவன் அண்ணன்!

ஆட்டத்தில்
ஆர் தோற்றாலும்...

தோற்றவர் வென்றவரைத்
தோளில் வைத்துக்கொண்டு -
மலையடிவாரத்தில்
மேய்ந்து கொண்டிருக்கும் -

பசுக்கூட்டம் வரை -

போய்த் திரும்ப வேண்டும்;
திரும்பிய பின் – ஆட்டத்தைத்
தொடரலாம் மீண்டும்!

'இதுதான் –
இந்த ஆட்டத்தின் விதி!' என்று –
தீர்மானித்தான்
தேவகி பெற்ற கருணாநிதி!

இரு தரப்பினரும் – வேர்வை
இழிய இழிய...

ஒருவரை
ஒருவர் –

தொட்டனர்;
விட்டனர்;

கிட்டினர்;
எட்டினர்;

தழுவினர்;
நழுவினர்;

தள்ளினர்;
அள்ளினர்;

இடையே
இடப்பட்டிருந்த...

கோடு
கடந்தும் –
நெடுக்கும் குறுக்குமாக
நடந்தும் –

ஓடுவதுபோல்
ஓடி –
சாடுவது போல்
சாடி –

மாற்றானிடம்
மாட்டாமல் தவ்வினர்; சிலர்
மூச்சடக்க
முடியாது மண்ணைக் கவ்வினர்!

பிரலம்பன் தோற்றுப் போனான் –
பலராமனிடம்;

ஆட்ட விதிப்படி
அவன் –
தனது தோளில் பலராமனைத்
தூக்கிக்கொண்டு ஓட...

அதிர்ந்தது
அவன் கால் பதித்த தடம்!

இடைச்சிறுவனா யிருந்தவன்
இராக்கதனாய் மாறினான்;

பரந்த தோள்களில்
பலராமனைத் தாங்கியவணம் –
கடுகி
ககனம் ஏறினான்!

அக் காட்சி கண்டு
ஆயர்குலச் சிறுவர் –
அச்சத்தில் – வாய்
அடைத்து நின்றனர்;
வெருவலில்
வெறும் வாயை மென்றனர்!

கண்ணன் மட்டும்
கன்னம் குழியச் சிரித்தான்;
புன்னகை வெளிச்சத்தைப்
பூ முகம் முழுக்கத் தரித்தான்!

வரையென – அசுரன்
வளர்ந்தான்;

பலராமன் – தன்
பிடியில் –
கிட்டினான் என்று
கிளர்ந்தான்;

சில விநாடிகள்
சென்றவுடன்...

பெருவெளியில்
பலராமனைச் சுமந்தபடி
பறக்க ஏலாது – தன்
பருத்த உடல் தளர்ந்தான்!

ஆம்!
அசுரனை அழிக்க –
அவன் தோள்கள் மேல்
அமர்ந்திருந்த...

முகுந்தனின் மூத்தோன்
முடிவு கட்டினான்;

உருத்திர மூர்த்தி போல்
உக்கிரம் மேவி – அசுரனின்
உச்சந்தலையில் – அவனது
உயிர் கலங்குமாறு குட்டினான்!

வாசவனின்
வச்சிராயுதம் போலவும்; அவ்
...திரன் ஏவிய
...டியேறு போலவும்;

அந்தக் குட்டு
அசுரன் தலையில் இறங்கியது;

ஓரேழு நாடியும்
ஒருசேர ஒடுங்க – ஓர்
அவசநிலை எய்தி
அவன் அறிவு கிறங்கியது!

பத்து எண்ணுவதற்குள் –
பிரலம்பன்...

மண்டை பிளந்து
மண்மிசை வீழ்ந்தான்;
அவன்
ஆக்கை ரத்தத்தில் –
அவனே – தன்
அடிமுடி தோய ஆழ்ந்தான்!

கோபாலனும் –

கோபாலரும் –
ஓடிவந்து
ஓகை பொங்கப் பொங்க –

பலராமனைப்
பாசமொடு தழுவினர்; தம் –
விழி வழி
வழியும் –

பரவசப்
புனலால் – அவனைப்
பாதாதி கேசம்
பாக்கியின்றி கழுவினர்!

'அண்ணா! உன்
ஆற்றலை என் சொல்வேன்?' என்று–
பலராமன் உச்சியை
பரந்தாமன் முகர்ந்தான்;

எஜமானனால் மெச்சப்பெறும் –
ஏவலன் போல்...

அனந்தனின்
அம்சமான –
பலராமன் நாணி – ஒரு
பக்கமாய் நகர்ந்தான்!

வனத்தில் – இதுபோல்
வைகலும்...

பெற்றம் மேய்க்கும்
பெருங்குலத்துப் பிள்ளைகளைத்
தொல்லைகள்
தொடர்வதும்;
அச்சங்கள்
அடர்வதும்;

வாடிக்கை யானது; மர்மம்
நீடிக்க லானது; தர்மம் –
வேடிக்கை பார்க்கிறதோ – எனும்
வினா பெரிதாகிப் போனது!

ஊரவர் நடுவே – இவ்வினா

உலா வந்தது;

எனினும் – கண்ணன்
எதையும் எதிர்கொள்ளும்
வல்லமை – ஊரவர்க்கு
வியப்பைத் தந்தது!

கண்ணனைக்
கடவுளாகவும்;
கண்ணனைக்
கண்ணனாகவும்;

மாறி மாறிப் பார்த்தது ஊர்;
மழுங்கியது பார்வையின் கூர்;

அன்னணம்
அதை –
மழுங்கடித்தது
மாயை; ஊர்
நிஜம் என
நினைக்கும் எதுவும் –
அடுத்த கணமே
ஆனது சாயை!

அப்படித்தான் –
அன்றொரு நாள்...

கண்ணன் செய்த
காரியம் ஒன்றை ஊர் கண்டது;

உடனே
ஊர் –
தன்னைத்
தானே –

'கண்டது கனவா? நனவா?' எனக்
கிள்ளிப் பார்த்துக் கொண்டது!

கிட்டத்தட்ட – இருள்
கவிகின்ற நேரத்தில் –

மேய்ச்சல் நிலத்தை விட்டு
மாடுகளை நகர்த்தி –
ஊர்க்குள்
ஓட்டிவர –

பிறரும் கண்ணனும்
பிரயத்தனப் படுகையில் –
திடீரென்று – வனத்தில்
தீப்பிடித்தது;

வடவைத் தீயை
விஞ்சும் அளவு –
அட்ட திக்கிலும்
அனல் அடித்தது;

வெப்பம் –
வான்பறவையை மடித்தது;
பட்டாசு போல் –
படபடவென வேயினம்
வெடித்தது!

கோகுலமும்
கோபாலரும்
அந்த
அக்கினி வளையத்தில் சிக்க;
மூச்சுவிட
முடியாது விழிபிதுங்கி முக்க;

கண்ணனும் – அந்தக்
கனலில் புழுங்கினான்; பிறகு –

திடீரென்று – தன்
திருவாயைத் திறந்து –
தீயை – ஆசமனத்
தீர்த்தம் போல் விழுங்கினான்!

ஊரவர்
உள்ளத்தில்...

'எவன் இவன்?'
எனும் அய்யம் எழுந்தது;
எழுந்த வேகத்திலேயே –
மாயையின்
ஏவலால் அது விழுந்தது!

(தொடரும்)

314

பாவை நோன்பு.

எண்ணெயில் விழுந்து -
எழுந்ததோர் உழுந்து!'
எனும்படி ஒருபளபளப்பு
ஏறி நிற்க...

காண்பார்
கண்கள் கூசுமாறு -
கண்ணன் அழகுமேனி
கருகருவென்று அவிர;
காசினி
கண்டதில்லை - அத்தகு
கறுப்பழகன்
கண்ணன் ஒருவனைத் தவிர!

பிருந்தாவனம் - அவனது

# கிருஷ்ண விஜயம்

பீடு பேசியது; ஆக்கையின்
வனப்பை வாளிப்பை - ஒவ்வொரு
வீடு பேசியது;
ஆளழகைத்
தோளழகை -
தாமரைப் பூந்
தாளழகை -

பெற்றம் மேய்க்கும் குலத்துப்
பேடு பேசியது; அவன்
விரல் கொண்டு
வாங்கக் குடம் நிறைக்கும் -

40 கவிஞர் வாலி





மடி கனத்த – பசு
மாடு பேசியது!

விடலை என
விளம்புமாறு –
விடுவிடு என
விரைவாக வளர்ந்து...

கண்ணன்
கருநிறத்துக் காளையானான்;

கன்னி

கழியாதார்க்குக் –
கங்குலும் பகலும்
கனல் ஏற்றும் சூளையானான்;

பிருந்தாவனத்துப்
பிறைநுதல்கள் –
பார்வை வலையெறிந்தும்
பிடிபடாத வாளையானான்;
ஆய்ச்சியர்
அனைவரையும் – ஓர்
அவசநிலையில்



ஆட்டிவைக்கின்ற மூளையானான்!

வண்டலை – வண்ணத்
தண்டலை போல் – வயதுப்
பெண்டலை – வேயூதும்
கொண்டலை...

வட்டமிட்டது; அவனுக்கு –
வாழ்க்கைப்படத் திட்டமிட்டது!

தன் – கரிய
திருமேனி வனப்பால் –
தயிர்கடையும் கோபியர்தம்
உயிர் கடைந்தான் கோவிந்தன்;

வெயிலைத் திருடி
விழியில் வைத்தோர்; அமுதிசைக்
குயிலைத் திருடிக்
குரலில் வைத்தோர்; அகவிடும்
மயிலைத் திருடி
ஒயிலில் வைத்தோர்; அவர்தம்
துயிலைத் திருடித்
துயர்ப்பட வைத்தான்...

கோபாலன் எனும் –
கோதறு அந்தன்!

கண்ணன் மாட்டு –
காதல் மலர்ந்ததால்...

கோபஸ்திரீகள் – விரக
தாபஸ்திரீகள் ஆயினர்;
பசித்தும் புசிக்க முடியாத –
பாபஸ்திரீகள் ஆயினர்;
சாகாமல்சாக சபிக்கப்பட்ட –
சாபஸ்திரீகள் ஆயினர்; கான –
லோலன் நினைவால் – ஆடையில்கூட
லோபஸ்திரீகள் ஆயினர்!

ஆம் அவர்களுக்கு
ஆயின ஆடைகள் –
துடியிடை தூக்கவொணாத
துணி மூடைகள்!

அம்பொன்
அணிகள் –
அவர்களுக்கு
ஆயின –

பூவுடலைப் புண்ணாக்கிப்
போடுகின்ற பிணிகள்!

இரவு நீளமானது; பகல் –
இரவை விடக் காளமானது;
இலவம் பஞ்சணையும் – முட்கள்
இறைந்து கிடக்கும் கூளமானது;
நித்திரை கெட்டதால் – வெடிக்கும்
நிலைக்கு வந்தது நாளமானது;
நாடித் துடிப்பும் – பிரமாணம்
நேர்த்தியாயில்லாத தாளமானது!

பாவம்! அப்
பாவையரெலாம் அண்மையில்
புஷ்பவதியான
புஷ்பங்கள்;

கண்ணனையே கருதிக் கருதிக்
கருத்தழிந்து கிடந்ததால்...

ஊண்;
உடுக்கை;
பூண்;
பூச்சரம்;

ஆகிய – உலகாயத
ஆசைகள் உலர்ந்து போய் – அவை
அவர்தம் நெஞ்சங்களில்
அறவே ஆயின பஸ்பங்கள்!

கழுத்து –
கண்ணன் சூட்டும் மாலைக்கே;
கால்விரல் –
கண்ணன் மாட்டும் மெட்டிக்கே;
கால்நிலா நெற்றி –
கண்ணன் வைக்கும் பொட்டுக்கே;
கார்குழல் நெருக்கம் –
கண்ணன் வழங்கும் பூவுக்கே;

கொங்கை – அவன்
செங்கை ஏந்த;

கொடியிடை – அவன்
மடியிடை நீந்த;
கனியிதழ் – அவன்
பனியிதழ் மாந்த;
கோலவுடல் யாவும் – அவன்
நீலவுடல் சேர்ந்த!

இவ்வாறு –
இடையர்குல இளங்கொடிகள்...

கண்ணனையே
கணவனாய் அடைய வேண்டிக்–
கனாக் கண்டனர்; விடையறியா
வினாக் கண்டனர்!

கண்ணனை – அக்
கரிய மாலாகவே – சில
பெண்டியர் எண்ணினர்; அவன்
புகழினை நண்ணினர்; அவன்
பெயர் ஏறும்

பரமபுருடன் என்று – அவன்
பாததூளியை வைத்து – வீட்டில்
பூஜைகள் பண்ணினர்!

மாலுக்கே
மாலாகி ஒழிந்தனர்; அவனோடு
மன்றல் முடித்தால்
மறுபிறவி முளைக்காது –
என
எண்ணி –
அவன்பால்
அன்பினைப் பொழிந்தனர்!

மழைக்காலம்
முடிந்தது; நீர்நிலைகளில்
வெள்ளப் பெருக்கு
வடிந்தது; ஆற்றுப்
படுகைகளில் வண்டல் மண்
படிந்தது; அதுவும்
போகப் போக உலர்ந்து
பாளம் பாளமாகப் பொடிந்தது!

முன்பனிக்காலம்
முளைத்தது;
இரவியின் வெப்பம்
இளைத்தது;

மாதம் –
மார்கழி;
உலவியது குளிர்காற்று
ஊர்வழி!

வீட்டுக்கு
வீடு –
வண்ணக் கோலங்களை
வரைந்தன –

பருவம் எய்திய
பாவாடைப் பூக்கள்;
கோலங்கள் மேல்
கொலுவிருந்து சிரித்தன –
பசுஞ்சாணத்தில் பொருத்திய
பறங்கிப் பூக்கள்!



நெடுக மூடுபனி
நெருப்பிலாப் புகையாக;
பனியைப்
பட்சிக்கக் – கிழ்த்திசையில்
புறப்பட்டான் கதிரவன்
புகையிலா நெருப்பாக!

பிருந்தாவனம்
பிறங்கியது பேரழகாய்;
யாப்பறிவோர்
யாத்த செய்யுளின் சீரழகாய்!

விவாகம் ஆகாத
வஞ்சியர் அனைவரும் –
வாசுதேவன் பால்
வலைப்பட்டனர்;
அவனையே
ஆளனாய் அடைய –
தலையாய பாவைநோன்பு – நோற்கத்
தலைப்பட்டனர்;

அற்றை நாளில் –
ஆயிழையார்...
மனம் விரும்பியவனே
மணாளனாக வாய்க்கவேண்டி –
மார்கழி
மாதத்தில் –

'காத்தியாயனி' அம்மனின்
கடைக்கண் அருள் விழைந்து –
பாவை நோன்பைப்
பணிவுடன் நோற்பர்;
அதற்குரிய விரதங்களை

அன்றாடம் ஏற்பர்!

வைகலும்
வைகறையில் –

வெடவெட என நடுக்கும் – வாடை
வீசுகையில்;
கூந்தல் முதல் குதிகால் வரை –
கூசுகையில்;

ஒருசில பெண்கள் –
ஒருசேரப் புறப்பட்டு...

வீடு
வீடாய்ச் சென்று – கண்
விழிக்காத தோழியரை
விரைந்து எழுப்புவர்;
விறைக்கும் குளிருக்கு
வெருவி – சில
நங்கையர்
நாளைவருவதாய் மழுப்புவர்!

ஆயினும்
அவர்களை விடாது – உடன்
அழைத்துச் சென்று
ஆற்றில்...

அனைவரும் – நீர்
ஆடி முடிப்பர்; பின் –
கரைக்கு வந்து
'காத்தியாயினி' உருவத்தை
ஈரமணல் கொண்டு – விழிகளை
ஈர்க்கும் வண்ணம் பிடிப்பர்!

ஆகாயத்தில்
ஆதவன் எழத்தொடங்கியதும் –
அந்த
அம்மனின் உருவத்திற்கு...

சந்தனப் பொட்டும்; செஞ்
சாந்துப் பொட்டும் இடுவர்;

ஈரப்பூக்களால் – கரை
ஓரப் பூக்களால் – கவின்மிகு
ஆரம் செய்து – அதை
அம்மனுக்குச் சூட்டிவிடுவர்!




அதன்பின்
அமுது ஊட்டுவர்;
அம்பொற் தட்டில் – கற்பூர
ஆரத்தி காட்டுவர்!

பழம் பக்திப்
பனுவல்களைப் பாடுவர்;
குலவையிட்டுக்
குதுகலமாய் ஆடுவர்!

பிறகு –
புறச்சிந்தனைகளின்றி...

'காத்தியாயினி'யையே
கண்மூடி யோசிப்பர்;
மனத்துள்
மந்திரங்களை வாசிப்பர்;
எண்ணப் பூக்களை
எறிந்து எறிந்து பூசிப்பர்;
கருத்தைக் கவர்ந்தவனே
கணவனாகக் கிட்ட வேண்டிக்
காத்தியாயினியின் – பாதக்
கமலம் தொழுது யாசிப்பர்!

மார்கழி
மாதம் –
முப்பது நாள்களும்
முனைந்து நின்று –

இடையர்குலப் பெண்டிர்
இன்னணம் நோன்பு நோற்பர்;

பால் நெய்
புறக்கணித்து –
பொழுதெலாம் சோளப்
பொரியையே உணவாய் ஏற்பர்!

வழுவக் கூடாது
வைதிகம்; வழுவாது –
பண்ணினால்
பாவை நோன்பு –
பூரணமாய்ப்
பலிக்கும் என்பது ஐதிகம்!

கோனார் குலத்துதித்த – இளங்
கோதையர் கொண்டாடும் – இந்தத்
திருப்பாவை விரதம் – இனிதான
திருப்பம் தருவது சரதம்!

தொன்றுதொட்டுத்
தொய்வின்றித் தொடரும் –
இந்த நம்பிக்கையோடு
இள நங்கையர் சிலர்...

பாவை நோன்பு நோற்க – ஒரு
புலரியில்...

யமுனை
யாற்றுக்குச் சென்று –
நீராடுகையில்
நீலவண்ணக் கண்ணன் வந்தான்;

அவர்கள்
அனைவரும் –
ஆடைகளைக் களைந்துவிட்டு
அம்மணமாய் ஆடுவது கண்டு –

அவர்களுக்கு – ஓர்
அதிர்ச்சி வைத்தியம் தந்தான்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

**நிர்வாணம்.**

நீர்;
நெருப்பு;
இருட்டு;
இவை மட்டுமே –

பெண்ணின் நிர்வாணம்
பார்க்கலாம்; இப்படிப் –
பேசிப் போயிருக்கின்றன
பழம்பெரும் நூலெலாம்!

அதை
அனுசரித்தோ என்னவோ...

யமுனை
யாறு
யாதவப் பெண்டிர்
யாக்கைகளை பார்க்க நேர்ந்தது –

நிர்வாணமாய்

நீராடுகையில்;
ஓடிஓடி
ஒருவரை ஒருவர் –
பிடித்தமுக்கப்
போராடுகையில்

அவர்கள்
அனைவரின்
உள்ளங்களும் கண்டன
உன்மத்தத்தின் எல்லை;
ஆதலால்
அங்கு

41 கவிஞர் **வாலி**

கண்ணன் வந்ததை – அந்தக்
கன்னியர் காண வாய்ப்பில்லை!

ஆற்றங்கரையில்
அநாதையாய்க் கிடந்தன –
அந்த
அனிச்ச மலர்கள்...

உரித்துப் போட்ட
உடுக்கைகள்;
நதியோரமாய்
நடந்து நடந்து –



[illegible] வெப்பித்துப் போன
காலைக் காற்று – சற்று

ஒய்வெடுக்க
ஒத்தாசையாய் – அந்த
உடுக்கைகள் ஆயின
படுக்கைகள்!

பல்கிட்டும்
பயங்கரக் குளிரையும் –
பாராட்டுது
பாவை நோன்பிருக்கும்
பாவைகள்...

திகம்பரராய் – இப்படித்
திரிந்து விளையாடுகையில்...

அவர்கள்
அறியாது
அவர்களது
ஆடைகளை –

வாரியெடுத்தான்
வாசுதேவன்;
பெருமறைகள் நான்கும்
பேசு தேவன்!

கிட்ட இருந்த
கடம்ப மரத்தின் கிளைகளில்..

ஏறி உட்கார்ந்து –
எல்லோரது உடைகளையும் –
வரிசையாய்த் தொங்கவிட்டு – பின்
வாயில் குழல் வைத்து ஊதினான்;
புலரிக்குப் பொருத்தமான –
பூபாளப் பண்ணை –
அழகுற –
அந்தக் குழல்வழி ஓதினான்!

குழல் விரித்துக்



குளிர் வெள்ளத்தில்
கும்மாள மடித்த
குமரிகள்...

குழலோசை கேட்டுக்
குதுகலித்தனர்;

அடுத்த கணம்
அவர்கள்...

கண்ணனை; ஆடைகளைக்
கவர்ந்த கள்வனை; ஆங்கு –
கடம்ப மரத்தின்மேல்
கண்டதும்...

அவன் குறும்பை
ஆற்ற மாட்டாது சலித்தனர்!

கன்னியர்கள் –
கழுத்தளவு நீரில் நின்றபடி...

'கண்ணா!
காரிருள் வண்ணா!
மண்ணும்
மாந்தரும் – இன்னும்
முழுமையாய்க் – கண்
முழிக்காத காலை;
இவ்வமயம் என்ன –
இப்படியொரு லீலை?

உனக்கெதற்கு – நாங்கள்
உடுத்துகின்ற சேலை?

தென்றல்கூடத்
தொடத் தயங்குமே –
மன்றல் முடிக்காத
மாதரார் தோலை; நீ
படித்துப்
பார்த்ததில்லையா –
பண்புகளைப்
பயிற்றும் பழ நூலை? உன் –
மனையில் இல்லையா
மனு வரைந்த ஓலை?

தின்றாய் வெண்ணெய்;
தின்றாய் மண்ணை;
தினம்தினம் அதுபோல்
தின்கிறாய் பெண்ணை!

ஒவ்வொரு நாளும்
ஓவாது – எங்கள்
உணர்வுகளைத் திருடி
உபத்திரவம் தருகிறாய்;
உடைகளைத் திருடவும்–ஏன்
ஓசைப்படாமல் வருகிறாய்?

இந்த
இடம் –
நங்கையர் மட்டும்
நீராடும் துறை;
ஆடவர் வருதல்
ஆகுமோ முறை?

ஆடைகளைக் கொடு;
அகன்று விடு;
வஞ்சியர் ஆடையை
வவ்வினான் என்று –
வரலாறு உன்னை
வசைபாடாது நல்ல பேர் எடு!'

என்று
எம்பிரானைக் கெஞ்சினர் – சதா
குழலூதும் கண்ணனைக்
குடிவைத்த நெஞ்சினர்!

மரத்திலிருந்த
மாயவன் –

பாவையர் பால்
பரிவு காட்டினான்;
அரவிந்த இதழ்களில் – ஓர்
அமுத நகையை இழையவிட்டு –
அவர்களுக்கு
அறிவு ஊட்டினான்!

'திருக்கோயில்

தீபிகைகள் – எனக்
கோல விழிகள் படைத்த
கோபிகைகள் –

இவ்வாறு
இளங்காலைப் பொழுதில் –
இடைகளில்
இம்மியளவும் –

ஆடையின்றி – நீர்
ஆடலாமா?
விரதமிருந்து –கௌரியை
வழிபடுகின்ற கன்னியர் –
விதித்த நெறிகளிலிருந்து
விலகி மனம்போல் ஓடலாமா?

இதுவா – நோன்பு
இயற்றும் லட்சணம்?
திகம்பரராய்த்
தீர்த்தமாடுதல் –
தீதென்றறிந்து
திருந்துங்கள் தட்சணம்!

இவ்வினை
இக்கணமே தீர...

நீங்கள்
நீரை விட்டு –
நிலத்திற்கு வந்து
நீண்ட கரங்களை –

உச்சிமேல் வைத்து
வணங்குங்கள்;
உங்கள்
உடல் மறைக்க
உடைவேண்டுமானால் – என்
உத்தரவுக்கு இணங்குங்கள்!'

இவ்வாறு – கண்ணபிரான்
இயம்பியதும்...

'அச்சச்சோ! உன் முன்
அம்மணமாய் வருவதா?

நால்வகை
நாணங்களுக்கும் –
நின் பொருட்டு
நாங்கள் விடைதருவதா?

அய்யனே!
அலகிலா விளையாட்டுப்
பையனே!
ஆனாலும் – இது
அதிகபட்ச அபராதம்;

உனக்கு
உண்டாகும் –
உன்பால்
உளம் வைத்த –
வஞ்சியரை – இன்னணம்
வதைத்த அபவாதம்!

அருள் செய்து
ஆடைகளை உதவு; உன்
அன்பிற்கு ஏது
அடைக்கும் கதவு?'
என்று கூவினர்; அவ்
ஏந்திழையார் கேவினர்!

மாதவன் – அம்
மாதரார் அழுகைக்கு
மசியவில்லை; உதிர்த்தான்
மறைநிகர் மாணிக்கச்சொல்லை!

'பேதைப்
பெண்களே! என் –
வேய்ங்குழலில்
விளைகின்ற பண்களே!

என்னிடம்
எதற்கு நாணம் அச்சம்?
எனக்கென்று உங்களை
எடுத்துத் தந்தபின் –
உங்களுக்கென்று
உளதோ ஒரு மிச்சம்?

கண்ணன்
கைத்தலம் பற்றிக் –
கல்யாணம் முடிக்கத்தானே
காத்தியாயினி விரதத்தை...

ஏற்றிருக்கின்றீர்? ஓ!
ஏழைகளே!
வாடைக்கு
வாழ்க்கைப்பட
வரம் வேண்டி நிற்கும்
வாழைகளே!

என்னை
எண்ணி எண்ணி –

தினமும்
தேய்கின்றீர்; நான்
எங்கு போகிறேன்
என்ன வாகிறேன் –
என்றெல்லாம்
எனைப் பற்றி ஆய்கின்றீர்;

இந்த
இளங் கண்ணனை – சில
மணித்துளிகள் காணாவிடினும்
மாயாமல் மாய்கின்றீர்;

பசலையின்
பாதிப்பால்...

வெண்ணிலவும்
வெய்யிலாகிப்போக – விரகம்
வண்ண மேனியை
வாட்டவாட்டக் காய்கின்றீர்!

இன்னணம் –
இருக்கையில்...

நீங்கள் வேறு
நான் வேறு – என்று
சந்தி பிரித்துச்
சொல்ல – நம் பிரேமம்
சரீர வாசனையோடு
சம்பந்தப் பட்டதல்ல!

பிறவிதோறும்
பின் தொடரும் – இந்தப்
புனித உறவுக்கு – உண்டு ஒரு
பூர்வீகம்;

ஆம்;
அதற்கு –
அடிப்படை
ஆன்மீகம்!

ஆண்பால் பெண்பால்
அற்றது நம் சங்கம்; நம் –
ஸ்நேகத்திற்கு ஏது
ஸ்திரீலிங்கம்? புல்லிங்கம்?

ஆதலால் – நம்
அன்பைப் பிரிக்க இயலாது;
மேனி உணர்வின்றி – கரை
மேலேறி வாருங்கள் –
உடல் மீது பற்று வைத்து – அதை
உடைகளால் மூட முயலாது!'

கோவிந்தன் அருளுரை கேட்டு –
கோபியர் அனைவரும்...

நிர்வாண
நிலை எய்தி –
கரையேறி வந்து
கரங்கள் கூப்பி நின்றனர்;
அசோதை மகன்
ஆடைகளை அருள –
அவற்றை அணிந்து
அவரவர் அகம் சென்றனர்!

இந்த நிகழ்வு பற்றி – சுகர்
இயம்பலானர் சில நெறிகளை;

அரசன் பரீட்சித்து
அவற்றைக் கேட்டு – மேலும்
அடக்க லானான் – தனது
அஞ்சு பொறிகளை!

'மேன்மைமிகு மன்னா!
மேலெழுந்தாற்போல் பார்த்தால்...

கண்ணன் காரியம்
காம வயமானதாய்த் தெரியும்;
கசடறக் கற்றார்க்கே – அது
கர்மவயமானதாய்ப் புரியும்!

சகத்தில் –
சனிப்பதால்
சீவான்மா அனைத்துமே
பாவான்மா; அவற்றைத்
திருத்திப் பணிகொள்வது
தேவான்மா!

நிர்வாண –
நிலை என்பது...

நூலாடை எனும் மேலாடை
நீக்குதல் அல்ல;
ஆறாலும் ஆகும் – அவ்
ஆடைகளை வெல்ல!

உடை;
உணவு;
உடல்;
உணர்வு;

இவற்றின்மீது உள்ள
இச்சைகளை ஒழித்தல்;
இறைச் சிந்தனையிலேயே
இருக்கும் நாளைக் கழித்தல்;

ஊர் பேசும் –
உலகு பேசும் –
என்றெலாம்
எண்ணி நாணாது –

அச்சம் வெட்கம்
ஆகிய உணர்வுகளைப் பேணாது–
அவற்றை அறவே
அகத்திலிருந்து வழித்தல்;

இவைதாம்



இகம்பரம் –
இரண்டிற்கும்
இதம் செய்யும் திகம்பரம்!

கோவிந்தன் –
கோபியர்க்கு –

அறவே சரீர வாசனை
அற்றுப் போகத்தான்
அப்படிச் செய்தான்
அவர்தம் ஆடைகளைக்
கொய்தான்!

கண்ணன் –
காட்டியது...
கர்மக்கணக்கைத் தீர்க்கும்
தர்மக்கணக்கு;
காமக் கணக்கைத் தீர்க்கும்
சேமக் கணக்கு!'

அறிவுறுத்தினார் துறவரசு;
அறிந்துகொண்டான் புவியரசு!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## அறிவும் அன்பும்.

வேதியர்கள்
வேதிகை அமைத்து –
வேள்விகள்
வேட்ட லாலும்;

சாகை
சாகையாய் –
சதுர் மறைகளை
சந்திகளில் ஓதுதலாலும்;

மற்றும் –
மண்மிசை...
ஆன்றோரும் சான்றோரும்
அறங்களைப் பேணுதலாலும்;

அபிஷேகம்;
அலங்காரம்;
ஆராதனம்;
ஆரத்தி; என....

ஆறுகால பூஜைகளை
ஆலயங்கள் பூணுதலாலும்;

பரம்பொருளுக்கு
பலம் கூடுகிறது எனக் –
கருதிய
கம்சன்...

கண்ணனாய்ப் பிறந்திருக்கும்
கரியமாலின் –
சர்வவல்லமையைச்
சற்று
சரித்துவிட்டால் – தான்
சாவிலிருந்து தப்பலாம் என்று –

முன்னமேயே
முடிவெடுத்திருந்தான் –
மூடத்தனத்தின் உச்சமாக;
மூச்சைப் பற்றிய அச்சமாக!

தக்கணமே விடுத்தான்
தாக்கீது ஒன்று –

ஆலய பூசையும் –
ஆரண ஓசையும் –

ஆகவே
ஆகாது என்று!

மதுராபுரி
மண்டலத்தில்...

ஆலய மணிகள் நாக்குகளும்;
அந்தணர்தம் நாக்குகளும்;
நாதம் எழுப்பினால் –
நறுக்கப்படும் என்றான்;
செருக்கெனும்
சிகரமேறி நின்றான்!

வேள்வி
வேட்பார் இல்லை; கம்சனைக்
கேள்வி
கேட்பார் இல்லை!

மதுராபுரி வாழ் –
மறையோர் எனப்படும்...

முப்புரி நூலார்
அப்புரி நீங்கி – வேறு
எப்புரி சென்று
ஏற்றுவர் ஓமத்தீ? அவ் –

அக்கினி கோத்திர

**42** கவிஞர் **வாலி**

அனல் அன்றோ –
ஆக்கை நீத்தபின்
அவர்களுக்கான ஈமத்தீ!

கம்சன்
கட்டளையால்...
அந்தணர்
அலமந்து நின்றனர்;
சொல்லவும் முடியாது –
மெல்லவும் முடியாது –
வார்த்தைகளை
மென்றனர்!

ஆலயம் சென்று
ஆண்டவனுக்குரிய –
ஆயிரம் நாமாக்களைப் பாடி
அருச்சிக்காது...

என்னணம் இருப்பர் – அந்த
எம்பிரான் விருப்பர்?

பிரவசனம் புரியும்
பவுராணிகர்கள்...

புண்ணியம் நல்கும்
புராணங்களைப் –
பக்கவாத்தியங்களோடு
பாடா திருப்பதைப் – பெரும்
பாடா யெண்ணினர்;
பாவம்! நீர் அறாக் கண்ணினர்!

நீரின் புகழ் கயல் பாட;
ஏரின் புகழ் வயல் பாட;

காரின்புகழ் புயல் பாட;
சீரின்புகழ் இயல் பாட;
ஈரின்புகழ் ஓலை பாட;
நாரின்புகழ் மாலை பாட;
வேரின்புகழ் சோலை பாட;
தேரின் புகழ் சாலை பாட;

ஈசனார் புகழ் – ஈசனாரின்
தாசனார் பாடாதுவிடல் தகுமோ?
எடுத்து – இதை




எவர் சொல்வது
கம்சனிடம்? சொன்னால்
காவலன் கோபம் மிகுமோ?
பேரச்சம் –
பிடர்பிடித்து உந்த...
330

அந்தணர் விட்டுவிட்டு –
வெவ்வேறு இடங்கள் சென்று
வாழலாயினர்;
இருந்த
இடங்களிலேயே –
அவரவர் தெய்வசிந்தனையில்
ஆழலாயினர்!

கண்ணன் உயிர் பறிக்க
கம்சனால் ஏவப் பெற்ற –

பல அரக்கர்கள்
பரலோகம் போனதை அறிந்து –
பயம் தெளிந்து – மீண்டும்
பல்வகை வேள்விகளை...

யமுனை
யாற்றங்கரையில் –
முனைப்புடன் நடத்த
முற்பட்டனர்; தமது –

பெண்டு
பிள்ளைகளோடு – சிறுசிறு
மனைகள் கட்டி
முகா மிட்டனர்!

மனித சஞ்சாரம்
மிகுதியாய் இல்லாது – புதர்
மண்டிக்கிடக்கும்
மலைப் பகுதிகள் அவை;

அங்கு
ஆசார அனுஷ்டானங்களோடு
ஆரணங்களை ஓதியது
அந்தணர்தம் அவை!

'ஆங்கிரச' என
அழைக்கப் பெறும்...

வேள்வியை
வேட்டால் –
வாய்க்கும் சொர்க்கம் என்று –
வகுத்திருந்தனர் அன்று!



வீடுபெற்று – நித்யசூரியாய்
விளங்குதல் மேலென நினையாது...

துறக்கம் சென்று
துய்க்கலாம் சுகங்களை – எனத்
துடங்கினர் யாகத்தை; மனம் –
துலைக்கவில்லை சுக போகத்தை!

அத்தகு
அந்தணர்க்கு –
அறிவு புகட்ட எண்ணினான்
அசோதை மகன்;
முக்காலமும் அறிந்து

அன்று
அவனுடன் –
ஆநிரை மேய்த்திருந்த
ஆயச் சிறார்களுக்கு...

வெயில் – உச்சிக்கு
வருமுன்பே...

பயங்கரப்
பசியை –
உண்டாக்கினான் கண்ணன்; அதை –
உணர்ந்தான் அவன் அண்ணன்!

ஆதிசேஷன்
அறியாத சூதா?
அவன்தானே
அவனுக்கு –
அமளியா யிருக்கிறான்
அறிதுயில் கொள்ளத் தோதா!

கோபால குமாரர்கள்
கொடும்பசியில் குலைந்து போய் –
வாடி நின்றனர்; கண்ணனிடம்
'வாய் உலர்கிறது' என்றனர்!

நந்தன் –
நந்தனன்...

அவர்களது
அவலம் கண்டான்; அதனைத்
தீர்த்துவைக்கத்
திருவுள்ளம் கொண்டான்!

'இமைப்பொழுதும் நீங்காது – உடன்
இருக்கும் நண்பர்களே!

வெள்ளை மனம் கொண்ட பிள்ளையாய்
விளங்கும் பண்பர்களே!

கம்சனுக்கு அஞ்சிக்
கரந்துவாழ் அந்தணர்கள்...

இவ்வனத்தில் – ஓர் ஓரமாய்
இயற்றுகின்றனர் ஒரு யாகம்;

அதற்கென –
அந்தணப் பெண்டிர்
ஆக்கி வைத்திருக்கும்
அன்னம்...
அங்கு –
அறுசுவையாய் உள்ளது அமோகம்!

அனைவரும்
அங்கு செல்லுங்கள்;

கண்ணனும் – அவன்
அண்ணனும் – அன்னம் வேண்டி
அனுப்பிவைத்ததாய்
அவர்களிடம் சொல்லுங்கள்!

உதவுவர்
உண்டி;
ஆறுங்கள் பசி
அவர்களை அண்டி!'

இன்னணம் கண்ணபிரான்
இயம்பியதும்...

ஆயர் சிறார்கள்
அங்கு சென்றனர்;

வேள்வி
வளர்க்கும்
வேதியர்களை
வணங்கி...

'பிராமணோத்தமர்களே!
பலராமனும் கண்ணனும்...

அனுப்பினர் இங்கு – தாங்கள்
அன்னம் இடுவீர் என்று;
தாங்கொணாப் பசியில்
தவிக்கின்றோம் – இந்த
உச்சி வேளையில் –
உதரங்கள் கொதிக்க நின்று!

வயிற்றுக்குச் சோறிடல்
வேண்டும்; உமை –
யாதவர்குலம் வாழ்த்தும்

அந்தணர் ...
யாண்டும்!

என்று யாசித்தனர்; அறவோரை
ஏத்திப் பூசித்தனர்!

பலராமகிருஷ்ணர்களைப்
பரமாத்மாக்கள் என்று –
அறியாத
அந்தணர்கள் –
அவர்களால்
அனுப்பப் பெற்ற –

ஆயர்குலச் சிறுவர்களை
அலட்சியம் செய்தனர் –

'உண்டு' என்று
உரைக்காமலும்;
'இல்லை' என்று
இயம்பாமலும்;

மமதை கண்களில் தெரிய –
மவுனம் காத்து நின்று!

வேதியர் – இன்னணம்
வாய்மூடி இருப்பதை...

தாங்கமுடியாத பசியைத்
தாங்கிக் கொண்டு –
கோபாலர்கள் ஓடிப் போய்க்
கோபாலனிடம் கூற –

புன்னகைத்தான் கண்ணன்; பின்
புகன்றான் பூவைப்பூ வண்ணன்!

'தோழர்களே!
தொய்ய வேண்டாம் மனம்;

பிராமணர்களின்
பத்தினிகளிடம் போய் –

கண்ணன்
கட்டளையெனக் கூறி
அன்னம் கேளுங்கள்;
அன்புடையது அன்னையர் இனம்!'

நந்தகுமாரன் –

பிராமணப்
பெண்டிரிடம் சென்று –
கோபாலர்கள்
கோரினர் உணவு வேண்டுமென்று!

'அன்பு மிகுந்த
அந்தணகுல அன்னைமீர்!
எம்மை இங்கு
ஏவியவர்கள் –
கண்ணனும்
கண்ணனவன் அண்ணனும் –

பசிக்கு – அன்னம்
பெறவேண்டி;

கொடுத்தால் நன்று;
கொல்கிறது பசி குடல் கிண்டி!'

யாதவச் சிறுவர்
யாவரும் – இன்னணம்
மாதவன் பேரை
மொழிந்ததும்...



அந்தண மாதர்
அகம் மகிழ்ந்தனர்;
பெறற்கரிய
பேறு என்று –
நினைந்து நினைந்து
நெஞ்சு நெகிழ்ந்தனர்!

'கோபாலர்களே!
கோவிந்தனுக்கும் உங்களுக்கும் –

அன்னம் படைக்க – நாங்கள்
முன்னம் புரிந்த தவம் –
என்னென்று புகல்வது? ஓர்ந்தோம் –
எங்கள் வினை அகல்வது!

உலகம் உண்ட
உத்தமனுக்கு – நாங்கள்
உணவு
ஊட்டுவதா?

ஓதம்சூழ் உலகில்
ஒவ்வோர் உயிர்க்கும் -
ஓ்வாது உணவூட்டும் நோன்பினை
ஓம்புகின்ற...

நாதனுக்கு உற்ற பசியை -
நாங்கள் ஓட்டுவதா?

என்ன பாக்கியம்!
என்ன பாக்கியம்! இப்பேற்றை -
எடுத்தோத
எம்மிடம் ஏதொரு வாக்கியம்?'

இன்னணம்
இயம்பி -
அகம் உருகிய
அந்தண மாதர்...

கூடை
கூடையாய் -
உணவு வகைகளை எடுத்து
உச்சந்தலையில் வைத்துக்கொண்டு...

புறப்பட்டனர் - கோபாலர்
புடை சூழ; கண்ணனுக்கு -
அமுதூட்டப் போகும் மகிழ்வில்
அவர்கள் உள்ளங்கள் ஆழ!

மனைவியர் செயல் கண்டு
மறையோர் முகம் கடுத்தனர்;
கூடை உணவைக் - கொண்டுபோகக்
கூடாது என்று தடுத்தனர்!

கேள்வர் பேச்சைக்
கேட்கவில்லை பெண்கள்; தமைக்
கொண்டவர்
கொண்டிருக்கும் -
சிற்றறிவை எண்ணிச்
சிவந்தனர் கண்கள்!

'யாதவன் கண்ணனே - உங்கள்
யக்ஞபதி; இதை ஏன் -
உணராது போயிற்று
உங்கள் மதி?

எங்கள் உள்ளுணர்வு
எங்களுக்கு உணர்த்தியது...

கன்று மேய்ப்பவன்தான்
கரிய மால் என்று;
அவனுக்கு
அன்னமிடும்
அரிய வாய்ப்பு - எமக்கு
அமைந்தது இன்று!'

இவ்வாறு -
இடித்துரைத்து விட்டு...

யாதவச் சிறாரோடு
யமுனைக் கரைக்கு வந்த -

பிராமணப்
பெண்டிர் -

பரந்தாமனுக்கும்
பலராமனுக்கும் -
பெற்றம் மேய்க்கும்
பிறர்க்கும் -

உணவு படைத்தனர்; சாதி
உணர்வுகளை உடைத்தனர்!
அக் கணமே -
அம் மாதரார் மணாளர்களின் -
அகக் கண்கள் திறந்தன;
அகங்காரங்கள் இறந்தன!

பரீட்சித்துக்கு -
பாகவதம் போதித்த -
சுகர் என்னும் கல்வியாறு -
சொன்னார் கீழ்க் கண்டவாறு:

'அறிவால் - இறையை
அடைய இயலாது;
அன்பால்தான் இயலும்; ஏனெனில் -
அன்பு இறையை ஆராய முயலாது!'

**(தொடரும்)**

# இந்திர விழா

இடைக்குலத்தோர் –
இந்திரனுக்கு...

வருடா வருடம்
விழா எடுப்பர்;
அனைவரும்
அவரவர்...

நா எனும்
நாரில் - அவனது
நாமங்களெனும்
நறுமலர்களை –

அழகிய
ஆரமாய்த் தொடுப்பர்;
வாசவனுக்கு

விருப்பமான –
அறுசுவை
அடிசில்களை ஆக்கி...

படையல் என்று
பவ்வியமாய்க் கொடுப்பர்;
இந்திர விழாவின்
இறுதி நாள் வரை –
இதர வேலைகளை
இயற்றாது விடுப்பர்!

ஆயர் குலத்தோர்க்கு –
ஆடுமாடுகள்தாம் ஆதாரம்;
அவ்
ஆடு மாடுகளுக்கு –
அடர்ந்த புற்களைக்கொண்ட
அடவிதான் ஆதாரம்;





நந்தனன் கோபாலகிருஷ்ணன்...

தாழ்மையொடு தெரிவித்தான்
தன் கருத்தை;

தந்தை வியந்தான்
தன் குருத்தை!

ஆச்சரியமாயிருந்தது -
அத்தனிடம் - கண்ணபிரான்

ஆற்றிய உரை;
ஆதிமுதல் அந்தம் வரை!

'தந்தையே!
தாங்கள் அறியாதது அல்ல;

ஆயினும்
ஆகாது தவறு -
நன்கறிந்த தங்களுக்கு
நானதை நினைவூட்டிச் சொல்ல!

ஆனந்த மாகட்டும்;
ஆனந்தம் அற்றதாகட்டும்;
ஆற்றிய வினைப்படி - அவற்றை
ஆன்மாக்கள் நுகர்கின்றன;

அவ்வினைக்கு இவ்வினை - என
ஆரணங்களும் பகர்கின்றன!

எவ்வுயிர் ஆயினும் - அது
எய்திடும் -
இன்பமோ துன்பமோ - அதற்கும்
இந்திரனுக்கும் தொடர்பில்லை;

புண்ணிய -
பாவங்களுக் கேற்ப...

உயிர்க்குலத்திற்கு
உரிய -
உவகையை; உலைவை;
உண்டாக்குவது மட்டுமே -

அமரேசனுக்கு
அமைந்துள்ள அதிகார எல்லை!

எஞ்ஞான்றும்
எவ்வுயிர்க்கும் -

பரமாத்மாதான்
பர்த்தா; நடக்கும்
காரியம் எதற்கும் - அவனே
கர்த்தா!

வாசவன்
வெறும் கருவி;
கருவி நிற்கும்
கர்த்தாவின் கையை மருவி!

அடிசில்
ஆக்கி -
அனைவர்க்கும் அளக்கிறான்
அன்னதாதா; அவ்
அன்னம் புசித்தோர்
அன்பு பாராட்டுவது -
அவன் மீதா? அல்லது
அவன் ஏந்திய அகப்பை மீதா?

எந்தையே!
எல்லாவற்றுக்கும் -
பரம காரணம்
பரம் பொருள்;

அப் பரம்பொருளே -
ஆதல் வேண்டும்...

பக்தி ததும்ப - நாம்
பாடுகின்ற - நல்ல
பனுவல்களுக்கெல்லாம்
பாடு பொருள்!

இறைவன் மலைபோல்
இருப்பவன்;

ஆடாது -
அசையாது -

வாடாது -
வதங்காது -

பொழுதும் நிலை பெயராத
பொருப்பவன்!

நமக்கும் - நம்
நிரைக்கும் -
நீரும் சோறும்
நிதம் நல்கும்

கோவர்த்தன கிரியைக்
கும்பிடுவோம்; அதுவே
நேர் நிற்கும் இறையென்று
நம்பிடுவோம்!

இத்துணை நாள் – நாம்
இந்திரனைத் தொழுதது போதும்;

அதையே – இனியும் நாம்
அனுசரிப்போமாயின் –
அது நம்
அறியாமையைத்தான் ஓதும்!'

கண்ணனின்
கருத்தை...

அப்படியே ஏற்றான்
அவன் தந்தை;
மகனின்
மணிமொழி கேட்டு –
வெயில் தொட்ட வனசம்போல்
விகசித்தது அவன் சிந்தை!

'கிருஷ்ணா! அறம் –
கிளக்க நீ கூறியது...

எனக்கு
ஏற்புடைய ஒன்று;

கோலாகலமாய் – விழாக்
கோலவும் கொண்டாடவும் –
கோதறு தகவு உடையதுதான் –
கோவர்த்தனக் குன்று!

அரூபம் என மொழியப்பெறும்
ஆதிமூலத்தின் –

சொரூபம் தான்....

குறிஞ்சி;
மருதம்;
நெய்தல்;
முல்லை;
பாலை; எனும்..

ஐந்திணை; ஐந்தும்
ஐந்து துணை; இவ்

இயற்கை - அவ்
இறைக்கு இணை!

கோபாலா! நீ குறித்ததுபோல் –
கோவர்த்தன கிரியை...

எல்லாம் வல்ல
எம்பிரானாய் எண்ணி;

பூஜை
புனஸ்காரம் பண்ணி;

விழா எடுப்போம்; இந்திர
விழாவை விடுப்போம்!'

என்று கூறி – தன்
ஏரார்ந்த குலக்கொழுந்தை...

நெஞ்சாரப் புல்லினான்
நந்தகோபன்;
கோனார் குலத்தின் கோவான
கோல ரூபன்!

வணக்கத்திற்குரிய –
வான்புகழொடு –
வாழ்வரை – கோவர்த்தனத்தின்
தாழ்வரையில்...

கீர்த்திமிகு
கிரிபூஜை தொடங்கியது;

பிருந்தாவனமே – அந்தப்
பிரதேசத்தில் முடங்கியது!

மனைவி
மக்களொடு –
யாதவர்
யாவரும் -

தங்கள் மனைகளைத்
தாளிட்டு விட்டு – அங்கு வந்து
தங்கினர்; சோறு
பொங்கினர்!

அதிகாலையில் - யமுனை
ஆற்றினில் ஆடி;

புத்தாடை
புனைந்து –
பொட்டும் பூவும்
பொலிவுறச் சூடி;

பரிமளப் பொருள்களைப்
பாதாதி கேசம் –
மிச்சம் மீதியின்றி
முச்சூடும் பூசி;

மரைவிட்டுத்
தரை வந்த –

மகாலட்சுமிபோல் தோற்றினர்
மாடு மேய்க்கும் குலத்தில் –

உதித்த பெண்டிர் – தம்
உதடுகள்வழி புன்னகை வீசி!

பொற்பரசி என்றும் –
கற்பரசி என்றும் –
பிறங்கிய – அப்
பெண்ணரசிகள்...

வரையடி வாரத்தில்
வண்ணக்கோலம் இட்டனர்;

கோலங்களின் நடுவே
கோல மலர்களைப் –

பசுஞ்சாணத்தில்
பந்திபந்தியாய் நட்டனர்! 342

ஆடவர் –
ஆங்கு பந்தல் அமைத்தனர்;
அதன் நடுவே –
அடுப்பமைத்து –
ஆயர்குலத்து
அரிவையர் –

புத்தரிசி கொண்டு
பொங்கல் சமைத்தனர்!

பல்வகைப்
பலகாரங்களும் செய்தனர்;
அவற்றின்மேல்
ஆழாக்கு ஆழாக்காய் –
அன்று காய்ச்சிய
ஆவின் நெய்யைப் பெய்தனர்!

உருமி;
உடுக்கை;
தப்பு;
தாரை;
முழவு;
மேளம்;
கொம்பு;
குழல்;

எனப் பல்லியம் - ஓசை
எழுப்ப எண்டிசை அதிர; அவ்–

ஒலியின் அதிர்வில் – கரை
ஓரத்து ஆல்களிலிருந்து –
ஒருசில கிளைகளும் –
ஒருசில இலைகளும் உதிர;

ஆட்டமும் பாட்டமுமாய்
அமர்க்களப் பட;
அதிகாலை நேரத்தில்
அடவியின் –
அமைதி
அறவே கெட;

குதுகலம்
கொப்புளிக்க;
உல்லாசம்
ஊற்றெடுக்க;

மாதராரும் –
மற்றவரும் –

உதடுகள் குவித்து
உள்நாக்கால் குலவையிட்டு –
தலைவாழை இலைகளில்
தயிரன்னம் பாலன்னம் –
அக்கார அடிசில்
ஆகியவற்றின் குவியலிட்டு –

பயபக்தியோடு
படையல் வைத்து –
மலையரசு
மனம் மகிழ வணங்கி –

சாரி
சாரியாய் –

கிரிவலம் வந்தனர் – தம்
கிளைகளோடு; கோவர்த்தன
கிரிக்குத் தந்தனர் - முனம்
கிட்டிடாத பீடு!

நந்தர் வேந்து
நந்தகோபனும்; அவனது
நாயகியாம்
நங்கை நல்லாள் அசோதையும்;

பலராமனும்; அவனைப்
பெற்றெடுத்த உரோகிணியும்;

பிற –
பிருந்தாவன வாசிகளும் –
கோவர்த்தன கிரியைத் – திருக்
கோயிலாய் எண்ணினர்;

தமது
தேகங்கள் –
நிலம் தோய
நமஸ்காரங்கள் பண்ணினர்!



எவன்
எல்லாவற்றிலும் உளனோ...
எவனுள்
எல்லாமும் உளதோ...

அவன்;
அந்த அச்சுதன்;
உவமிக்க வொண்ணா
உத்தமி தேவகியின் – மணி
உதரத்தில்
உதித்த அச் சுதன்;

கண்ணன்;
காசு வண்ணன்;

அவனும் – தனது
அத்தன் அம்மையைப்போல் –
கோவர்த்தனத்தைத் தொழ; நவ–
கோள்களுக்கெலாம் வியப்பு எழ;

புரந்தரனுக்குப் –
போனது தகவல் – அவனைப்
புறந்தள்ளி – வெறும்
புல்பூண்டுள்ள பொருப்புக்கு...

விழா நடந்தது என்று; அவனை –
விழுங்கியது அவமானம் கொன்று!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## குன்று குடையானது!

'இந்திர விழா' வை –
இடைக்குலம் கொண்டாடாதபடி...

கெடுத்தான்; அதைத்
தடுத்தான் ஆநிரைக் கண்ணன் –
என
ஏகமாய்க்
கடுத்தான்; சிடு
சிடுத்தான் ஆயிரம் கண்ணன்!

**44** கவிஞர் **வாலி**

வாசவன் – என
வழங்கப் பெறுபவன்;
புரந்தரன் – எனப்
புகழப் பெறுபவன்;
இந்திரன் – என
இசைக்கப் பெறுபவன்;
இமையார் அரசு;
இந்திரை ஆளன்;

கொதித்தான்;
கொக்கரித்தான்;
வாய்த்த நற்புத்தி
வக்கரித்தான்!



இருக்கும் புத்தியைப்
பெருக்கும் பண்பிலாது –
தருக்கும்;
செருக்கும்; அதனைச் –
சுருக்கும்;
கருக்கும்;

என்பதற்கு
எடுத்துக் காட்டானான்;

வாய்மை –
தூய்மை –
ஆய்மை – அவனுக்குச்
சேய்மை ஆனதனால்...

எடைபோட
ஏலாதவன்!' என்று – தன்னை
எடைபோட்டான்!

தடக்கைகளை வீசி நடந்தான்;
தனக்குத் தானே பேசி நடந்தான்!

'வான் வேந்து –
நான்;
உப்பு வியர்வை ஊறாதது என் –
ஊன்;
அன்றாடம்
அருந்த
அமுது தரும் – காமதேனு எனும்



காய்மைக்கும்
கயமைக்கும் கூட்டானான்!

தன்னைப் பற்றித்
தானே ஒரு வினாயெழுப்பித் –
தான்
விரும்பிய வண்ணம்
விடைபோட்டான்;

தற்பெருமை என்றொரு –
தராசில் தன்னை ஏற்றிவைத்து...

'எவராலும்

ஆன்;

சந்தானம்;
தேவதாரம்;
கற்பகம்;
மந்தாரம்;
பாரிசாதம்;

எனப்படும்
ஏரார்ந்த –
ஐந்தருவாகிய
பைந்தரு...

எஞ்ஞான்றும் பூத்துப் - பூவழி
எனக்கெனப் பிலிற்றும் தேன்;
பாற்கடல்
பயந்தது -
வெண்வேழம் - நான்
வீற்றிருக்கத் தான்!

பறந்து திரிந்த
பர்வதங்களின்...

விரிந்த சிறகுகளை
வச்சிராயுதத்தால் -
வெட்டி
வீழ்த்தியவன் நான்;

அரக்கர்களை
அடக்கி -
அதல பாதாளத்தில்
ஆழ்த்தியவன் நான்;

நாடகத் தரம்பையர்
நால்வரும்...

காற்சிலம்பு
கலீர் கலீரென ஒலிக்க - என்
திருவோலக்கத்தில்
தினம்புரிவர் நிருத்தம்;

வித்தியாதரர்
வீணை நரம்பை மெல்லத் தடவி -
வைகலும் பாடுவர் - எனது
வரிசை பேசும் விருத்தம்!

மூவுலகுக்கும் -
முடிவேந்தாயிருக்கும்...

எனக்கு - விழா
எடுக்காது - ஒரு
மலைக்கு விழா எடுப்பதோ
மாடு மேய்ப்போர்? என் -
சீற்றம்

சீக்கிரம் அறிவர் - அந்தச்
சின்னக் கண்ணனுக்குச்
செவி சாய்ப்போர்!'

இன்னணம்
இறுமாப்பில் - தன்னை
இழந்து நின்ற
இந்திரன்...

'சம்வர்த்தம்' எனச்
சாற்றப் பெறும்...

கொண்டல் குழாத்தை - வரக்
கூவினான்; கூவி -
ஆயர்பாடியை அடியோடு
அழிக்குமாறு ஏவினான்!

"ஊழிக்கால மேகங்களே! எனது -
ஊழியர்களே! எனக்குரிய -
தனிப்பெரும் விழவைத்
தவிர்த்து விட்டனர் -
தயிர் வெண்ணெய்த்
தாழியர்களே!

பிரளயம் நேர்ந்ததோ - எனப்
பீதியுறும்படி...

நீங்கள் ஏந்தி நிற்கும்
நீரை எல்லாம்
நிலம் இறக்க வேண்டும்; ஆயர் -
குலம் இறக்க வேண்டும்!

இடைச் சேரியில்
இடையறாது பெய்க; பெய்து -

யமுனை நீரைப் பெருக்கி -
அதனை
யாதவர் ஊர்புகச் செய்க!

குழல் ஊதும் - ஒரு
குட்டனின் உரை கேட்டு...

இந்த
இந்திரனின் -

வலியறியாது
வம்பை விலைக்கு வாங்கினர் -
நந்தர்; அச -
மந்தர்!

அவர்தம் -
ஆடுமாடுகளை -

வெள்ளத்தால் அள்ளியெடுத்து
வீசுங்கள் ஆழியில்;

கொட்டும் மழையில் -
கொட்டில் முழுதும் -
'பொட்'டெனச் சரிந்து
புதைய வேண்டும் பூழியில்!"

இன்னணம் - கட்டளை
இட்டபின்பு...

வாசவன்
வாயுவை விளித்தான்;
அவனுக்கும் - சில
ஆணைகளை இட்டுக் களித்தான்!

'காற்றுக்கு அரசே!
காட்டு உன் பரிசே!

ஊழிமழைக்கு
உறுதுணையாய்ச் செல்;

பெருஞ்சூறையாய் வீசி
பிருந்தாவனத்து -
விருட்சங்கள் அனைத்தையும்
வேரொடு கல்!

மழைவருமுன்
மண்ணைக் கிளப்பி -

விண்ணை
விழிக்குப் புலப்படாதபடி -
மறை; புழுதியை
இறை!

என்
ஏற்றம் புரியாதார்க்குப்
புரியவை; அவரிடமிருந்து
பூமியைப் பொருள்களைப் பிரியவை;

கன்று கறவைகளைக்
கதிகலங்க அடித்து - ஆயர்
காடு கழனிகளைக்
கதுவிக் கண்டபடி பொடித்து -

இந்த இந்திரன் இசையை
இடையர்க்குத் தெரியவை;
அவர்கள்
அனைவரையும் -
வீடுவாசல் இழந்து
வறியர்களாய்த் திரிய வை!'

காற்றையும்;
கனமழை மேகங்களையும்;
அனுப்பினான்
அமரர் ஏறு -
ஆய்க்குடியை
அழிக்கு மாறு!

வாசுதேவன்
வாழும் -
நன்னகர் பிருந்தாவனத்தை
நாசமாக்கப் புறப்பட்டன -

பொன்னகர் விட்டு - மேகப்
பொதிகள்; ஊழிக்
காற்றால் கூடின - அவற்றின்
கதிகள்!

வாடை; கொண்டல்; என -
வழங்கப் பெறும் -

புரவிகள்
பூட்டிய -

மேகரதம்
மேலேறி -
வலம் வந்த
வருணன்...

வாங்கினான் கையில்
வெளிச்ச மின்னலைச் சாட்டையாய்;
வானம் விளங்கியது
வருணனுக்கான ராஜபாட்டையாய்!

அவன் -
ஆணைப்படி....

நீரிடியும் -
நெருப்பிடியும் -
நிலம் இறங்கி -
நின்ற மரங்களை எரித்தன;
கணத்தில் அவற்றைக் -
கன்னங் கரேலெனக் கரித்தன!

இருண்டது யாங்கணும் நிலம்;
மருண்டது யாதவர் குலம்;
அடித்தது பேய்மழை
அடிக்கடி;
அலமந்து போயிற்று
ஆய்க்குடி!

'இன்னும் இன்னும்' என்று
இந்திரன் கூவினான்;
கண்மண் தெரியாது
கண்டபடி தாக்கக் -
காற்றை மழையைக்
கடுமையாய் ஏவினான்!

யமுனை
யாறெனும் -

நீர்ப்பாயைச் சுருட்டி
ஊர்க்குள் விரித்தது சூறை;
உடனே -
ஊர் -
பூராவும் உடுத்திக்கொண்டது
புதுவெள்ளம் என்னும் கூறை!

திக்கு
திசை -

தெரியாது
திரிந்தன கறவைகள்; ஈரச்
சிறகுகளைப் பிரித்துச்
சிக்கலெடுக்க மாட்டாது -
சிலம்பின
சின்னஞ்சிறு பறவைகள்!

அசோதை
அஞ்சினாள்;
உரோகிணி
உலைந்தாள்;
நந்தகோபன்
நடுங்கினான்;
ஒருசாணாய் எண்சாணும்
ஒடுங்கினான்!

'கண்ணா! கண்ணா!' எனக்
கதறினர் கலங்கினர் -
யமுனை வெள்ளத்தில் சிக்கிய
யாதவர்;

கண்ணனல்லால்
களைகண் -
யாதொன்றும் - அறி
யாதவர்!

நீள் விசும்பில் -
நீங்காமல் நின்றது...

கான்மேயும்
கரிக் கூட்டம் -

வான்மேய
வந்தாற்போல் கர்ப்போட்டம்!

இந்திரன்
இறுமாப்பிற்குத் – தன்
இளவல் கட்டுவான்
இறுதி – என்று
பெரியவன்
பலராமன் –
பேசாமையைப்
பேணுவதில் காட்டினான் உறுதி!

சின்னக் கண்ணன்
சிறுநகை புரிந்தான்;
மெல்ல
மெல்ல –
சிறுநகையைப் புறம்தள்ளிச்
சினத்தைச் சொரிந்தான்!

அடுத்த கணம்
அவன்...

காண்டற்கரிய
காரியம் செய்தான்;

கோவர்த்தன கிரியை – இமை
கொட்டும் நேரத்தில் கொய்தான்!

வலக்கைச் சுண்டுவிரலில் –
வாங்கிப் பிடித்தான்...

குளிர்முகில்
குந்திக்
குலவுகின்ற
குன்றை;
குன்றெனும்
குடை ஒன்றை!

வாசுதேவன் –
விரித்த குடைநிழலில்...

ஒட்டுமொத்தமாய் – ஊர்
ஒண்டியது;
கால்நடையும்
கண்ணபிரான் –
காலடியே
கதியென்று அண்டியது!

ஒருநாளல்ல; இருநாளல்ல;
ஓரேழு நாள்கள் – கண்ணன்
ஏந்தினான் மலையை;
எதிர்த்தான் மழையை!

பதினான்கு
புவனங்களையும்...

சுமக்கின்ற –
சுத்த சைதன்னியத்திற்கு –
மலையொரு சுமையா? ஆழிக்கு –
அலையொரு சுமையா?
தெய்வத்தின் முன் – இந்திரன்
தோற்றான்; இன்னொரு நாள் –

சாயரட்சையில் – கண்ணனைச்
சந்தித்து – கண்ணீர் மல்க
வாசவன் மன்னிப்புக் கோர
வாசுதேவன் அதை ஏற்றான்!

கோவிந்தனை – ஊர்
கொண்டாடியது;

எவன் இவன் –
எனும் எண்ணம் – அதன்
இதயத்தில்
இழையோடியது;
வழக்கம் போல்
விஷ்ணு மாயை – அன்னணம்
எழுந்த
எண்ணத்தை மூடியது!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## ராசலீலை

இடைச்சேரி பூராவும்–
இழுத்துப் போர்த்திக் கொண்டு...

கும்பகர்ணனாகி–
குறைந்தபட்சம்–
ஒரு ஜாமம்
ஓடியிருந்தது;

கத்திக் கத்தித் – தொண்டை
காய்ந்து போய் – தனது
கச்சேரிக் கடையைக் –
கட்டிவிட்ட...

நுணல் வாழும் – நதிக்கரை
மணல் வீடும் மூடியிருந்தது;

ஓய்ந்து படுக்காது
ஒரே ஒரு–
சுவர்க்கோழி மட்டும்
சுதிவிட்டுப் பாடியிருந்தது;

நுகத்தடி செய்ய உதவும்
நுணாமரத்தடியில் – உதிர்ந்த
வெள்ளைப்பூக்கள் மேல் – நிலா
வெளிச்சம் விளை யாடியிருந்தது!

45 கவிஞர் வாலி

ஆம்;
அகண்ட –
வானத்தில் – சொக்க
வெள்ளியை உருக்கி - யாரோ ஒரு
பூஜ்ஜியமாய் வார்த்தாற் போல்
பூர்ணிமை; அந்தப்
பூர்ணிமையால் –
புசிக்கப்பட்டிருந்தது
போஜனம் போல் – இரவின்
பூரண மை!

அந்த
அழகிய வட்ட நிலா – உலகோர்
திருஷ்டியிலிருந்து
தப்பிப்பதற்காக –
முயற்கறை கொஞ்சம்
முகத்தில் பட்ட நிலா;

முகில்கள்
முயன்று முயன்று
முழுதும்
முழுங்க முடியாமல்...

வாய் வலித்து – உமிழ்ந்து
விட்ட நிலா;

யமுனை
யாற்றில்
இறங்கி அலைகள்மேல் – நீச்சு



இட்ட நிலா;

கோவர்த்தன
கிரியின்...

இண்டு
இடுக்குகளிலெலாம் – வெளிச்ச
நாற்றுகளை
நட்டநிலா;

ஆணைப் பிரிந்த பெண்ணையும் –
பெண்ணைப் பிரிந்த ஆணயும் –
சுள்ளென்று
சுட்ட நிலா;
அந்த வகையில் –

அது துட்ட நிலா! கெட்ட நிலா!

வெளிச்சம்தான்
விளைக்கும் நிழலை;
ஆனால் –
அந்த –
விதிக்கு மாறாக –, நிழல்
விளைத்தது வெளிச்சத்தை; ஆம்!

நிழல்
நிறத்து –
உடல் ஒன்று
உமிழ்ந்தது ஒளிச்சத்தை!

தீர்த்தக்கரையில் – மணல்
திடர் ஒன்று; மணல்
திடர்மீது
திகழ்ந்தது –
திங்களைத்
தின்னவல்ல சுடர் ஒன்று!

அடடா
அதுதான்...

கண்ணன் என்னும்
கருந் திங்கள்; அந்தக்
கருந் திங்களைக்
கண்டமாத்திரத்தில் –
கண்கள் கூசி நின்றது
ககனத்தில் வருந்திங்கள்!

வான்நிலாவைப் பழித்த
ஊன்நிலா...

குவித்தது – தனது
குங்குமப்பூ வாயை; குவித்த
வாயில் வைத்து – மெல்ல
வாசிக்கத் தொடங்கியது வேயை!

வலக்கை இடக்கை
விரல்கள் இருநான்கும் –
பொத்திப் பொத்தி எடுத்த
புல்லாங்குழலின்...

துளைகள் வழி – வாசத்தேனில்
துளையமாடிய –வேர்ப்பலாச்
சுளைகள் விழ –

அவ்
அரிய –
செவிநுகர்க் கனிகளைச்
சேமித்த காற்று – ஆய்ச்சியர்
காதுகளில் கொட்டவும் –அவர்
கண்ணுறக்கம் கலைந்து எழ –
கண்ணன் நினைவு – நெஞ்சைக்
கலப்பை போல் உழ;

விரக
வாதைக்கு –
ஆற்றாது



அவரெலாம் அழ;

'கொல்லாதே!
கொல்லாதே! ' என்று
கோபாலனை – அந்தக்
கோதையர் தொழ;

உடுக்கை நிகர் இடையினின்று
உடுக்கை அவிழ; ஒருநான்கு –
குணங்களும் தடம் புரண்டு
குப்புறக் கவிழ;

வேணுகானம் – மேலும்
வேகமாய் வந்து வருத்தியது;
ஆய்ச்சியரை – அது ஓர்
அவசநிலையில் இருத்தியது!

கோபியர் எனப்படும் –
கோதையர் எல்லோருமே...

கண்ணனை அவாவிக்
கருத் தழிந்தோர்; சிலர் –

356

கன்னி கழியாதோர்; சிலர் –
கன்னி கழிந்தோர்!

மாயன்
மாட்டு
மையல் கொளாத்
தையல் –

பிருந்தாவனத்தில்
பிறந்தா ரில்லை; பெண்ணெலாம் –
பிரானெனும் தென்றலுக்காகவே
பிறப்பெடுத்த முல்லை!

சுயம் இழந்த – அந்த
சுந்தரிகளை...

ஆற்றங்கரைக்கு வரச் சொல்லி –
அழைத்தது வேய்ங்குழல் ஓசை;
அந்த
அர்த்த ராத்திரியில் –
அதற்கேற்ப
அவர்களை விரட்டியது ஆசை!

மாமன்;
மாமி;
மணாளன்;
மழலை;

ஆகிய உறவுகள்
அமைந்திருந்தும் –

அத்தகு
ஆயர்குலப் பெண்ணெலாம்...

தமது வீட்டின்
தாள் திறந்தனர்;
கண்ணனை நோக்கிக்
காலால் பறந்தனர்!

கோவிந்தனும்
கோபியரும் –
கொண்ட உறவு
கொச்சையான தல்ல;
சரீரத்தோடு
சம்பந்தப்படுத்திச் சொல்ல!

அது

ஆக்கை உணர்ச்சி –
அற்றுப் போன
ஆன்மப் புணர்ச்சி!

புனிதமான – இப்
புணர்ச்சிக்குக் காரணமாய் –
பண்டு – ஒரு வரலாறு
உண்டு!

முன்னொரு காலம்
முனிபுங்கவர்கள் –
தாருக வனத்தில்
தவம் புரிந்து வந்தனர்;

அவ்
அமயம் –
திருமால் மோகினியாகத்
திருவவதாரம் எடுத்துவர...

அந்த
அழகுக்கு –
இருடிகள் தங்கள்
இதயங்களைத் தந்தனர்!

ஜகன்மோகினியான
ஜகத்ரட்சகனை –
பவித்திரனான
பரம புருஷனை –

ஆரத் தழுவ
ஆசைப் பட்டனர்; அவனைத் –
தழுவினால்
தமக்கு வாய்க்கும் வீடென்று –
தாங்கள் ஆற்றிய
தவத்தை விட்டனர்!

பகவான் பால்
பித்தம் முத்தினர்; தமது –
பிரேமையைத் திருமாவிடம்
பிரஸ்தாபித்தனர்!

அச்சுதன்
அவர்களது
அன்பினை
அங்கீகரித்தான்;

'கண்ணனாய் நான் வரும் காலம் –
கோபியராய் நீங்கள் வருவீர்!'
என –
எம்பிரான் விரித்தான்!

அனந்தசயனன்
அருளினான் அன்று;
அவ்
அருள்மொழிக் கேற்ப...

தாருக வனத்துத்
தவசிகள் தாம் –
தயிர் கடையும் குலத்தினில்
தழைத்தனர் கோபியர் என்று!

உச்சி வானில் நின்று –
உடுபதி...

நீல
நிலாவைப்
பூமியெங்கும்
பொழிய;

கோபாலன்
கோல இதழ்களில் –
கொலுவிருந்த குழலிலிருந்து
கொம்புத் தேனாய்...

இசை –
இழிய;

இசை வரும்
திசை பார்த்துத் – தமது
இல்லம் விட்டு ஓடிவந்த
இடைச்சியர் உணர்வு அழிய;

விரக
வெப்பந்தாளாது – அவர்தம்
விழிவழி
வென்னீர் வழிய;

ஆரம்பமானது –
ஆற்றங்கரையில்...

ரம்மியமான
ராசலீலை;
ரஜோகுணமும் சத்வகுணமும் –
ரசித்துத் தொடுக்கும் ராகமாலை!

உடலம் இருக்கும்; உலவும்
சடலம் போலே!
உறவும் இருக்கும்; ஒரு துளி
உதகமாய்த் தாமரை இலைமேலே!

விரசம் இல்லாத
சரசம்; அதில்
பிரவாகமாய் இழிவது
பக்தி இரசம்!

தேவனைத் தழுவுகிறது
ஜீவன்; தேவனன்றோ –
ஜீவனின் உயிர்த்துணை
ஆவன்! அவனல்லால் யாவன்?

முளரியொத்த இதழ்களை –
முத்தமிட்டு இருக்கும்
மூங்கிற் குழாயிலிருந்து – இசை
முத்துக்களைக் கொட்டியபடி...

மாதவன் நிற்கிறான்
மய்யப் புள்ளியாய்;
ஆடுகிறார்; பாடுகிறார்;
ஆயர்குலப் பாவையர்;
அங்கிங் ககலாது
அவனைச் சுற்றி...

அம்புலியைச் சுற்றியுள்ள –
ஆயிரம் தாரகை வெள்ளியாய்!

ஒவ்வொரு கோபியாய் –
ஒவ்வொரு கோபியாய்...

மாயவன்
மருவுகிறான்;
மருவி
மருவி –
உள்ளாவியை
உருவுகிறான்;

அவள் உருகுவது கண்டு –
அவனும் உருகுகிறான்;
அவள் பருகுவது கண்டு –
அவனும் பருகுகிறான்;
உருகி முடித்துப் –
பருகி முடித்துப் – பின்



அவள்
ஆவியை -
அவளது
ஆக்கையில் செருகுகிறான்!

அடுத்தவளைத் தழுவிவிட்டு -
அவன் தன்னிடம் வரும் வரை...

மற்றவளுக்கு
மனம் வலிக்கிறது;
சராசரத்தில் உள்ள
சகலமும் சலிக்கிறது!

'கோவிந்தா!
கோபாலா! எனக் -
கூவுகிறாள்; அவன் தோளில்
தாவுகிறாள்!

ஒருவனாய் நின்று -
ஒவ்வொருத்தி நோயையும் ...

தவணை முறையில் -
தீர்த்து வைப்பது
சரியல்ல என்று - கண்ணன்
சிந்தித்து...

ஆளுக்கொரு கண்ணனாய்
அவதாரம் எடுக்கிறான்;

ஆரத் தழுவி - அவலம்
தீரத் தழுவி - அனைவர்க்கும்
ஒரே சமயத்தில் - ஆனந்தம்
ஓவாது கொடுக்கிறான்!

நிலக்கிரீடை முடிந்து -
சலக்கிரீடை தொடங்க...

கோபாலனும்
கோபியரும் -
யமுனை
யாற்றில் இறங்கி -

அடிக்கிறார்கள் நீச்சல்;
அட்டகாசமான கூச்சல்;
ஒருவர் மேல்
ஒருவர் -
நீரையடித்தும்;
நெருக்கிப் பிடித்தும்;

ஒருவருக்கும் உண்டாகவில்லை
ஒரு துளியும் ஓச்சல்!

உச்சத்தில் ஏறிநின்றது
உன்மத்தம்;

பாதி மயக்கத்திலிருந்த
பாவை ஒருத்தி - திடுமென
பயங்கரமாய்ப்
போட்டாள் ஒரு சத்தம்...

'கண்ணனைக்
காணவில்லை!' என்று; அதேநேரம் -
கோபியர் எண்ணிக்கையில்
குறைந்திருந்தது ஒன்று!

(தொடரும்)

# ராதே! ராதே!

பெண் ணவளின்
பெயர் ராதை;
பேசுதற் கரியது - அவளது
பிரேமையின் காதை;

காதல் வடத்தில்
கட்டுண்ண வல்லது
கடவுள் என்று - அவள்தான்
காட்டினாள் பாதை;

ஆதர்ச
ஆயிழை
ஆரென்றால் - இன்றும்
ஆன்மிகம் சுட்டுமந்த மாதை!

கோபியர்களிலேயே - அவள்தான்
கோபாலன் நெஞ்சில் - அமர்ந்து
கோலோச்சியவள்; அனங்கனின்
நூலோச்சியவள்;

எம்பிரான்
எண்ணத்துச் சோலையில்
எஞ்ஞான்றும் சிறகடிக்கும்
வண்ணத்துப் பூச்சியவள்;
விருந்தா வனத்து
வஞ்சியர்க்கு நாச்சியவள்!



# கிருஷ்ண விஜயம்

46 கவிஞர் வாலி

ஆம்!
அவள் -
ஆயர் குலத்துதித்த
அழகு தேவதை;

படி -
பார்த்ததில்லை...

பூரணமாய் - அப்
பூவையின் அந்தத்தை - ஒரு
பனுவலில் வைத்துப்
பாடிய புலவனின் நாவதை;

வீசுங்காற்று - நின்று
வேடிக்கை பார்க்கும் - அவள்
வீதிவழி - கைகள்
வீசிநடந்து போவதை;

கண்ணன் பால்
காதல் பூத்திருந்ததால்...

அவள்
அனுபவிக்க நேர்ந்தது -
அந்தி தோறும்
அவளுக்கு ஏதோ ஆவதை;

உச்சி முதல்
உள்ளங்கால் வரை -
காயம் ஏதுவுமின்றியே
காயம் பூராவும் நோவதை;

பசலை நோய் -
பசியின்மை -
பள்ளி கொள்ளாமை - எனப்
படுத்தியது அவளை மூவதை!

இரவும் பகலும் -
இத்துணை...

வேதனை தந்தும் - அந்த
வேதனைத் தவிர்க்கவில்லை -

அவளது
ஆசை மனம்;

வாழ்ந்தாலும் அவனோடு -
வீழ்ந்தாலும் அவனோடு - எனும்
கீர்த்திமிகு காதலில் - அவள்
கிரௌஞ்ச இனம்!

கண்ணன் - ராதையைக்
கண்டுகொள்ளவில்லை; அதாவது -
வலிய வந்தும் - கனியை
வண்டு கொள்ளவில்லை!

கோவிந்தன்பால் - அவள்



கொண்டிருந்த பிரேமம்...

ஒருசில காலம்
ஒருதலையா யிருந்தது:
ஒருதலையா யிருந்தும் - அது
ஒருதலையா யிருந்தது!

ராத்திரி பகலாய் -
ராதை...

கண்ணனையே புசித்தாள்;
கண்ணனையே பருகினாள்;

கண்ணனையே உடுத்தினாள்;
கண்ணன் மீதே உறங்கினாள்!

எழுத்தாணி கொண்டு - பனை
ஏட்டினில்...

மடல் வரைந்து - அந்த
மாதரசி -
கண்ணன்
காணாத வகையில் - அவன்
பின்னால் சென்று - மயிற்
பீலியோடு அதனைச் செருகுவாள்;

அதை
அவன் எடுத்துப் -
படிக்கையில் எட்ட நின்று
பார்த்துப் பாகாய் உருகுவாள்!

குறும்புக் கண்ணனோ - மடலைக்
குறுநகையோடு படித்துவிட்டு...

அதைக் கசக்கி
ஆற்றில் போடுவான்;
அவளை
அலட்சியம் செய்துவிட்டு -
ஆலம் விழுதில்
அமர்ந்து ஊஞ்சல் ஆடுவான்!

அந்தோ! பாவம்!
அவளுக்குக் கிடைக்கவில்லை...

விரகத்திலிருந்து
விடுதலை;
ஆயினும் -
அவள் நிறுத்த வில்லை
வாசுதேவனுக்கு - மடல்
விடுதலை!

என்ன விடுத்து
என்ன?
ஓதக் கடல்வண்ணன்
ஓடோடி வரவில்லை -
ஒண்டொடியாள் ராதையின்
ஒக்கலைப் பின்ன!

அவள்
அவன் நினைவிலேயே...

இரவில்
இறப்பாள்; மீண்டும்
பகலில்
பிறப்பாள்!

நாளாக நாளாக; நாளெலாம் -
வாளாக வாளாக; வாளெலாம் -
நங்கையின்
நன்னெஞ்சை -
அரிந்து
அது...

தூளாக; தூளாக; துன்புக்கே அவள் -
ஆளாக; ஆளாக;

ராதை
ராதையாகவும் -
கிருஷ்ணன்
கிருஷ்ணனாகவும் -
இருந்தார்களே தவிர -
இருவரும் தழுவி -

ராதாகிருஷ்ணன் ஆகவில்லை;
ராகம் முழுமையாய் வேகவில்லை!

இனி பொறுப்பதற்கில்லை - என
இதயம் பொங்கப் பொங்க...

நீள்விழியாள் - கண்ணனுக்கொரு
நீண்ட கடிதம் வரைந்தாள்;
வரைந்து விட்டு
வரும் பதில் வரும் பதில் என -
வைகலும் - காற்றினில்
வைத்த பூரமாய்க் கரைந்தாள்!

யமுனை
யாற்றோரம் -
ஏகாந்தமாய் அமர்ந்து - அவ்
ஏட்டைப் படித்தான் கண்ணன்;

ராதையை
ரகசியமாய் -

ரசிக்கும்
ராத்திரி வண்ணன்!

வாசிக்க வாசிக்க
வருத்தியது வாசுதேவனை - இள
வாழை மடல்
வரைந்த மடல்!

'ஏழை
ஏந்திழையை...

இருக்கவும் விடாது -
இறக்கவும் விடாது -
இம்சிக்கும்
இயமா!

இடையினத்து
இடையினத்தார்க்கு -
இடையறாது
இடையூறுகள் இழைப்பதுதான்...

சுந்தரக் கண்ணனே! உனது
சுயமா?

கால் இல்லாக் காற்றைக்
கால் என்பதுபோல்;
கால்; வாய்; இல்லா நீர்நிலையைக்
கால்வாய் என்பதுபோல்;

கண் இல்லாக் கள்வனைக்
கண்ணன் என்றனரோ? உனைக்
கண்ணன் என்றவரும்
கண்ணற்று நின்றனரோ?

பெண்ணின் முகக்குறியறியாப்
பேயனே!

பேய்ச்சி முலைப்பாலருந்திய
பெரு மாயனே!

நிறம்தான் நீலம்;
நின் நெஞ்சுமா நீலம்?

நச்சரவு ஏறி
நடம்புரிந்த ஏந்தலே! ஏன் -
சச்சரவு என்னிடம்? நான் -
சரண் புகுந்தேன் உன்னிடம்!

நின்னை நினைந்து
நிதம் நைகிறேன்;

விண்மேகம் அனைய
கண் மேகத்தால் - அடை
மழையை - எனது
மயல் தீ அவியப் பெய்கிறேன்;

அந்தியானால் - என்
அகத்து வாசலில் -
அம்பும் கையுமாய் நிற்கும்
அனங்கனை வைகிறேன்;

கண்ணுக்கிடும் மையைக்
காலுக் கிடுவதும் -
காலுக்கிடும் மருதாணியைக்
கண்ணுக் கிடுவதும் -

ஏறுமாறாக - இப்படி
ஏதேதோ செய்கிறேன்!

உன்
உருவம் காட்டி - என்
உயிரை
உரிவது போதாது என்று...

ஊதும் குழல் கொண்டு - என்
உள்ளத்தைக் குடைகிறாய்; உன் -
மோகன இசையால் - என்னுள் ஓர்
மோகக் கூடையை முடைகிறாய்; என் -

நெஞ்சத் தடாகத்தில்
நீச்ச லடித்துப் - பின்
நிமிஷத்தில் - ஒரு
நீர்க்குமிழியாய் உடைகிறாய்;
அடுத்து - வேறோர்
ஆய்ச்சி மனத்துள் அடைகிறாய்!

அய்யா! உனது -
அழகிய...

உதட்டில் - நீ
உட்கார்த்தியிருப்பது -
ஊது குழலா? இல்லை -

366

ஊதுலைக் குருகா?

சிந்தைக்குள்
சிறுபொறியாய் இருக்கும் –
விரகத்தை ஊதிக் – கனல்
வளர்ப்பதுதான் உன் தொழிலா?
ஏழைநான் நீ எரிக்கவே –
ஏற்பட்ட பூம் பொழிலா?

என்னைக் கேட்காமல்
என்னை –
என்னிடமிருந்து நீ
எடுத்துக் கொண்ட பின்...

எனக்கென்று



என்ன இருக்கிறது?
தாபச் சூடு
தாளாது –
மேனி மொத்தமும்
மெல்ல மெல்லக் கருக்கிறது!

ஆயினும் ஒன்று – நீ
அறிவது நன்று!

காமம் மனிதமானது;
காதல் புனிதமானது; நான்

...சைப்பது
...ண்டாவது; இந்த –
...ண்டாவதில் இல்லை – நாம்

இரண்டாவது!

உத்தம
உறவு என்பது...

ஊனைத்துளைத்து உள்ளேபோய்
உயிரைப் புணர்வது;
அன்னணம் புணர்ந்து – ஓர்
அத்துவைதத்தை உணர்வது!

தணலில் காய்ச்சிய
தேனிரும் பில் –
தெளித்த
தெண்ணீர்த் துளிபோல்...

கண்ணா! உன்னுள் நான்

காணாமல் போகவேண்டும்;
கண்ணன் ராதை காதல்
காவியம் ஆகவேண்டும்!

மடலைப் படித்து முடித்த –
மாயவன்...

ராதையின்பால் - தனக்கிருந்த
ரகசியக் காதலைத் தெரிவிக்க –
விரும்பினான்; விரும்பித்
திரும்பினான்!

தூரத்தில் – ஒரு
தூங்குமூஞ்சி மரத்தடியில்...

விசும்பை -
வெறித்துப் பார்த்தபடி
வீற்றிருந்தாள் ராதை;
வாழ்வா? சாவா? என வாடிய பேதை!

அவளறியாது
அவள் பின் சென்று -
கண்ணன் அவள் தோள்களைக்
கனிவொடு பற்றினான்;

கரை கொள்ளாக்
களிப்பில் - அவள்
கன்னங்கள் வழி
கண்ணீர் வடிய..

அதைத் - தனது
அதரங்களால் ஒற்றினான்!

சலக்கிரீடை
சமயத்தில்...

கண்ணன்
காணாமல் போனது
இந்த ராதையோடுதான்; அவளும் -
இருந்தாள் பிற கோதையோடுதான்!

கண்ணனுக்கு - ராதையிடம்தான்
காதல் அதிகம் விளைந்தது;

அந்த கர்வத்தில்
அவள் கண்ணனைத் - தனது
ஆசைப்படியெல்லாம்
ஆட்டிப் படைக்க...

கண்ணன் செய்த ஒரு காரியம் -
கர்வத்தைக் களைந்தது!

நிலவொளியில்
நீண்ட நதிக்கரையில் -
கண்ணன் ராதையோடு
கரம்கோத்து நடக்கையில்...

'கால்வலிக்கிறது' என்றவள்
கண்ணன் தோளில் ஏறிக்கொள்ள -
பூவுலகைச் சுமப்பவன்
பூவையைச் சுமந்து சென்றான்;

ஓரிடம் வந்ததும்
ஒண்டொடியாள் ராதையின் -
உத்தரவுப் படி
உடனே நின்றான்!

பூமரம் ஒன்றின் -
பூக்களைப் பறிக்க விரும்பி..

கண்ணன் நெடுந்தோள்களில்
கால்வைத்து நின்று - ஒரு
கையால் கிளையைப் பற்றி - மறு
கையால் பூப்பறிக்க லானாள் -
ராதை; கர்வம்
ரத்தத்தில் கலந்த பூங்கோதை!

ஒரு கட்டத்தில் - ராதை
ஒரு கிளையைத் - தனது
இருகைகளால் பற்றித் தொங்க;
இதுதான் தருணம் என்று...

போயே
போய்விட்டான் கண்ணன்;
அறிவு புகட்டி - அவளது
அகந்தையைப் போக்க -
அவாவிய
ஆகாய வண்ணன்!

கண்ணன் விட்டதும் -
கீழே விழுந்தாள் ராதை;
தக்கணமே தெளிந்தது -
தானெனும் போதை!

கண்ணன் ராதை -
கதையைச் சொல்லிய சுகர்...
இன்னொன்றும் -
இயம்பினார் -
பாம்புவிடம் - தீண்டப் போகும்
பரீட்சித் திடம்!

'தகவுடையாரைத் - தெய்வம்
தலையில் வைத்துத் தாங்கும்;
தருக்குடையாரைத் - தெய்வம்
தரையில் விட்டுத் தான் நீங்கும்'

(தொட

368



# கிருஷ்ண விஜயம்

**பிறப்பின் ரகசியம்.**

**ம**துராபுரி
மகராஜனின் –
மாபெரும்
மாளிகையின்...

புழைக்கடையில் இருந்ததொரு –
பூங்கா;

பொழுதெலாம் – அப்
பொதும்பரில்...

சிறகடித்துச்
சிலம்புகின்ற – சின்னஞ்சிறு
தேன்சிட்டுகள் – இரவில்கூட
தூங்கா;

பூக்களின்
புல்லி வட்டத்தில் – கொஞ்சம்
இளைப்பாற வந்தமரும்
இளங்காலும் –

பூந்தோடு உள்ளிருக்கும்
பூந்தாது உடல் ஒட்டத் – தேன்
அருந்த வரும்
அறுகாலும் –

அவ்
அழகிய
பூங்கா புகுந்தால் – எளிதில்
நீங்கா;

வைகலும் – காற்று

**47** கவிஞர் **வாலி**

வாருகோல் கொண்டு கூட்டுவதால்...

தேவையற்ற தூசி தும்பு – அங்கு
தேங்கா; அவ்வளவு –
துப்புரவு; துறக்கம்தான் –
ஒப்புரவு!

இன்னணம்
இயற்கையில் உள்ள...

வனப்பையெல்லாம்
வழித்து வழித்து – உடல்
பூராவும் பூசி நிற்கும்
பூங்காவை –

வெயில் தாழ...
வேனிற்காலத்தில் காண்கையில்...

சொர்க்கம் அனையது – அச்
சோலை – எனச்
சற்றுமுன்
சொல்லியிருந்தேனே –

அச்சொல்
அக்கணம் –

அங்கு
ஆகியிருந்தது தாபிதம்;
அடடா! ஓர் –
அலகு இல்லாச் சோபிதம்!

விளக்கு வைக்கும் வேளையில் –
வயதுக்கு வரக்கூடிய...

பூக்கள் எவை? அவையெலாம் –
பூப்படைந்தன; அதிகாலையில் –
பூப்படைந்த பூக்களெலாம்
மூப்படைந்தன!

பூங்கா
பூராவும் –

வாசம் செய்தது
வாசம்;
மாசம் – சித்திரை
மாசம்!

அந்தியம் போதில்

அவ் –
உத்தியான வனத்தில்
உலவ வந்தாள்...

அரசன் மனைவி
அரசி;
அவள்
அவ்வாறு வரும்போதெலாம் –

செடிகொடிகள்கூட
சந்தோஷிக்கும் –
அரசியின்
அழகுமேனியை உரசி!

அவள்
அரசனை மணந்து –
ஒருசில மாதங்களே
ஓடியிருந்தன;
மன்றல் முடித்தபின் – அம்
மாதரசியின்...

வனப்பும்
வாளிப்பும் –
மெருகு ஏறி
மேலும் கூடியிருந்தன!

அவள்
அங்கவிலக்கணம்
அனைத்தும் அமைந்த
அரச பத்தினி;

அவளது
அழகிய பற்களை –
விஞ்சும் விதமாய்க் – கடலில்
விளைந்தால்தான் உண்டு முத்தினி!

இருபது வயது
இளம்பெண்;

இந்து –
இரவி –
இவை
இரண்டும் – அவளது
இடக்கண்; வலக்கண்;

அரச வம்சம்
ஆனதால் –

அவள் கண்
அறிந்ததில்லை அலக்கண்!

கொழுமை
கொடிகட்டிப் பறந்தது...

திருமுடி தொடங்கி
திருவடி வரைக்கும்;

மருதாணி பூசிய
மகராணியின் பூம்பாதம் –
படும் போதெல்லாம்
புளகம் வரும் தரைக்கும்!

எவ்வளவு பொற்புடையவளோ –
அவ்வளவு கற்புடையவள்; அவ் –
உத்தம ஸ்திரீயின் பெயர்
'உக்கிரபானு'; பெயரில்தான்

உக்கிரம்
உட்கார்ந்திருந்ததே தவிர –
உள்ளத்தில் – அவள்
உக்கிரமில்லாத பானு!

அன்று
அவள் – வெறுமனே
காற்று வாங்கலாம் என்றுதான்
காவற்சோலைக்கு வந்தாள்;

வந்தவள்
வசந்த காலத்துச் சூழலால் –
தாக்குண்டு
தளிர்மேனி மெல்ல வெந்தாள்!

கங்குலும் பகலும்
கரங்கள் குலுக்கும் பொழுது;

பூரணமாய் – இன்னும்
பூமி இறங்கவில்லை –
விசும்பிலிருந்து – இரவெனும்
விருட்சத்தின் இருள் விழுது!

தாமரை ஆட்சி முடிந்து – இனித்
தங்கள் ஆட்சி முளைத்ததென...

தண்ணீர்
ததும்பிய – அல்லித்
தடாகத்திலிருந்து வந்த
தகவல்களும்;

அழகிய தோகையை
அகலமாய்த் துருத்தி –
ஆலும் மயில்களின்
அகவல்களும்;

வசந்தத்திற்கு
வரவேற்பு இதழ் –
வாசித்தளிக்கும் முகத்தான்
வனக் குயில்கள்...

கூக்கூ எனக்
கூவிய கூவல்களும்;
சேய்மையில் உள்ள
சிற்றருவியின் ஊடே புகுந்து...

மலர்ப் பூங்கா வந்து சேர்ந்த
மந்த மாருதம் – தன்
மேனியை உதறித் – தூவானம்
போல்
மெலத் தெளித்த தூவல்களும்;

ஓர்
ஓரமாய்க் –
கரந்து நின்ற
காமன்...

ஆங்கு தனித்து நின்ற
அரசி மீது –
அம்புகள் தொடுக்க
ஆயின தோது;

பஞ்ச
பாணங்கள்
பாய்ந்து
பசலை நோய்க்கு ஆளானாள் மாது!

பாலுணர்வு – அவளுள்
படர்ந்தது;
மஞ்சள் தடவிய – திரு
மாங்கல்யம் அருளிய...

ஆளனொடு
அமளியில்
ஆரத்தழுவி
ஆனந்தம் துய்க்கும்...

ஆதுரம் – அவளது

அங்கமெங்கும் அடர்ந்தது!

அவ்
அமயம்...

அவளது மணாளன்
அருகில் இல்லை;

எனவே
எழுந்து எம்பிப் –
படரக் கொம்பின்றிப்
பரிதவித்தது முல்லை!

அரசன்
அயலூரில்; அரசன்
மணவாட்டியோ
மயலூரில்!

அனைத்து
அம்புகளையும் –
அனங்கன்
அவள்மீது எய்தான்; ஓர் –

அவச நிலைக்கு
அவளை ஆட்படச் செய்தான்!

ககனத்தில் உலவிய
கந்தர்வன் ஒருவன்...

பூமியில் – ஒரு
பூங்காவில் – ஓர்
அழகிய மங்கை – நெஞ்சம்
அலைபாய நிற்கக் கண்டான்;

பிறர் மனத்தில் உள்ளதைப்
புரிந்துகொளும் சக்தியுடைய...

அந்த கந்தர்வன்
அவளுள் – காமம்
அரும்பியிருப்பதை
அக்கணமே அறிந்து கொண்டான்!

அரசியின் வனப்பில்
அவன் கிறங்கினான்;

அவள்
அடுத்தவன் மனைவி – என
அறிந்தும்
அதை வசதியாய் மறந்துவிட்டு...

நீள் விசும்பிலிருந்து
நிலம் இறங்கினான்!
எழிலார்ந்த – அவ்
ஏந்திழையை அனுபவிக்க...

அந்த
அற்பன் எண்ணினான்;
அவளது
ஆளன் போலவே – தன்னிடம்
உள்ள சக்தியால் – தன்னை
உருமாற்றம் பண்ணினான்;

காமத்தால் – அவிந்த
கண்ணினான் –
நாணமின்றி – அவளை
நண்ணினான்!

தனியே
தவித்த பெட்டையை – நெருங்கித்
தொட்டான்
தோள் பட்டையை!

அயலூர் சென்றிருந்த – தனது
ஆளன்தான்...

திரும்பி வந்தனன் – என்று
திளைத்தாள் மகிழ்ச்சியில் –
அந்தப் பாவை; சூது வாது –
அறியாத வெள்ளைப் பூவை!

பெருங்காமம் – அவளது
பிடர் பிடித்து உந்த...

கணவன் வடிவில் நின்ற
கந்தர்வனைத் தழுவினாள்;
எச்சில் முத்தங்களால் – அவனை
எங்கணும் கழுவினாள்!

அவனும்
அவளை –
இடையில்
இருகரம் கொடுத்து ஏந்தினான்;

இதழ்மீது
இதழ் வைத்து
இருக்கும் நறவம் – மீதம்
இன்றியே மாந்தினான்;

பிறகு – அவளது
பொன் அனைய...

உடல் – எனும்
கடல் மீது –
ஓர்
ஓடம் போல் நீந்தினான்!

அவரவர் – தமது
ஆடைகளை –
ஓர்
ஓரமாய்க் குவித்தனர்;

அவள் காமத்தீயை
அவனும்;
அவன் காமத்தீயை
அவளும்;

முயன்று முயன்று –
மூச்சிரைக்க அவித்தனர்!

ஆசைகள்
அடங்கிய பின் –

ஆடைகளைத் – திரும்ப
அணிந்துகொண்டு –
அவள் – தனது
ஆளனோடு...

உரையாடுகையில்
உண்மையைக் கண்டுபிடித்தாள்;

ஏமாந்து போனதை
எண்ணி – அவ்
ஏந்திழை – கழுவில்
ஏற்றிய உயிர் போல் துடித்தாள்;

மாலை மாலையாய் – அம்
மாதரசி கண்ணீர் வடித்தாள்;

அதன்பின்
ஆத்திரம் மேலிட்டு –
அவன் நடுநடுங்க
அனல் மூங்கிலாய் வெடித்தாள்!

'என்னைத் தின்றவனே! நீ –
எவன்?' என –
வினா வழி
வெந்தணலைத் துப்பினாள்; அதை –
அவன்மேல்
அப்பினாள்!

'நானொரு கந்தர்வன்; எனது –
நாமம் 'திரமிடன்';
உன்னைத் தழுவினேன் – என்னை
உன்னழகு தகித்தவுடன்!

பிழைதான் எனினும் – நீ
பெற்றெடுப்பாய் என்னால்...

அனைத்து நற்குணங்களும்
அமையப் பெற்ற – ஓர்
ஆண்மகவை; அம்புவி மெச்சும்
அதன் தகவை!'

என்று – அவன்
எடுத்துரைக்க –
அவள் சீறினாள்;
அதன்பின் கூறினாள்!

'மாயம் புரிந்து
மாற்றான் மனையைப் –
புல்லிய
புல்லனே! உன் –
விந்தில் என்னனம்
விளையும் நல்ல மகவு?

அந்தணர் –
அறவோர் –
அமரர் –
ஆகியோரிடமிருந்து...
அப்பிள்ளை
ஆனமட்டும் பெறும் இகவு!'

என்று – அவள்
ஏங்கி அழ; அவள்
சாபத்திற்கு அஞ்சி – இதுதான்
சமயமென – விருட்டென்று
புறப்பட்டான் கந்தர்வன் –
பூமியில் புழுதி எழ!

அன்னணம்
அவதரித்த –
புத்திரன்தான் கம்சன்;
புகழ்சால் போஜ வம்சன்!

(தொடரும்)

376


சே! வழக்கம் போல இன்னிக்கும் ரயிலைத் தவற விட்டுட்டோம்!


அப்பா! நம்ம ஃபேமிலி டாக்டர் வந்திருக்கார்!


யார் சொன்னது.. வண்டி ஓட்டும்போது போன் பேசக்கூடாதுனு! அதெல்லாம் சும்மா டார்லிங்!

## நாரதர் கலகம்.

ஒரு முறை நாரதர்தான் –
ஓதினார்...

கம்சனின் காதில் – அவனொரு
கந்தர்வனின் விந்து என்று;

'அப்படியா?' என –
அலட்சியமாய்க் –
காதில் வாங்கினானே தவிர –
கலங்கவில்லை அவன் அன்று!

**48** கவிஞர் **வாலி**



நாளாக
நாளாக —

அவனை
அவனது பிறப்பின் அவலம் –
மாற்றியது – ஒரு
மிருக மாக;
எந்த நேரத்தில்
எப்படி நடப்பான் என்று...

ஊராரோ
உற்றாரோ –
ஊகித்து
உணர வொணாதபடி –

விட்டிருந்தான் மனத்தை – அது
விரும்பிய மார்க்கம் போக!

மதில்மேல் நிற்கும்
மார்ச்சாலம்; அது –
எப்பக்கம் குதிக்கும்
என்பதைக் குறித்தல் –
ஆரால் ஏலும்? அவனிருந்தான் –
அந்த மார்ச்சாலம் போலும்!

தேவகி திருமணத்தை
தேசம் மெச்ச நடத்தினான்;
அசரீரி –
அச்சுறுத்தியதும்...

சிறுநொடிப் போழ்தும்
சிந்தியாது – தனது
சிற்றப்பன் மகளையும்; அவளது
சிந்தைக்கினிய மணாளனையும்;

காராகிருகத்தில் –
கிடத்தினான்!

ஆறு குழந்தைகளை
அரிந்தான்;
ஏழாம் குழந்தை மாயை – கைக்கு
எட்டாது மறைந்ததும் –
'விதி வழி
வாழ்க்கை!' என்று அறிந்தான்!

வசுதேவரையும் தேவகியையும்
விடுவித்தான் சிறையிலிருந்து;
விலங்கு பூட்டி
வைத்திருந்த அறையிலிருந்து!

ஆதிமூலத்தின்
அவதார நோக்கத்தை...

விரைவுபடுத்த
விரும்பிய நாரதர் –



கம்சனை அவ்வாறு
கவலையற்றிருக்க விடுவாரா?

வந்தார் அவனிடம்; அவனொடு
வார்த்தையாடினார்; அவரது
வார்த்தையை விட – அவனுயிரை
வாங்குவதில் வாள்கூரா?

380

'கம்சா! நீ
கஜகர்ணம் போடுகிறாய் –
கண்ணனைப் பொசுக்க; காலடிக் –
கட்டெறும்பாய் நசுக்க!

உன்
உக்கிரம் உச்சம்;
எனினும்
என்ன புண்ணியம்?
மீசையில்
மண் ஒட்டியதுதான் மிச்சம்!

காரணம் – நீ
கணக்குத் தெரியாதவன்;
எப்படியெல்லாம்
ஏமாற்றப்பட்டிருக்கிறாய் –
என்பதை
எள்ளளவும் புரியாதவன்!

தேவகி வயிற்றில் ஏழாவதாய்த்
தோன்றிய –
கரு
கலைந்துவிட்டதாய் எண்ணினாய்;
எட்டாவதை
எதிர்பார்த்து –
வைகலும் உனது
வாளைக் கூர்மை பண்ணினாய்!

உண்மையில் – ஏழாவதாய்
உண்டான கரு –
உரோகிணி வயிற்றுக்கு மாறி
உதித்தது பலராமன் என்று;
இம்மாற்றத்தை – திருமால்தான்
இயற்றினான் அன்று!

நீ –
நினைத்தது போல் – தேவகி
எட்டாவதாய் – ஈன்று
எடுக்கவில்லை பெண் சேயை;

அது –
அசோதைக்குப் பிறந்து...

இங்குவந்து – உன்னை
இளிச்சவாயனாக்கி விட்டு –
விசும்பில்
விருட்டென்று ஏறிய மாயை!

தேவகியிடம் – நிஜமாகத்
தோன்றிய எட்டாம் சேய்தான் –
கண்ணன்; அசோதையின்
கைக்கு மாறிப்போன கார்வண்ணன்!

மாற்றியவன் – உன்
மைத்துனன் வசுதேவன்;
ஆக –
அந்தக் கண்ணன் கையில்
ஊசலாடிக் கொண்டிருக்கிறது –
உனது ஜீவன்!

அவனைக் கொல்ல – நீ
ஆன மட்டும் முயற்சித்து...

தோல்வி மேல்
தோல்வி கண்டாய்;
அந்தக் கண்ணன்
அழியாமல் நின்று –
அன்றாடம் வெண்ணெய் உண்ண–நீ
அவமானம் உண்டாய்!

நாளொரு மேனியும் –
பொழுதொரு வண்ணமுமாய் –
நந்தகோபன் மகனாக – அவன்
நன்கு வளர்ந்து நிற்க..

அல்லும் பகலும் – நீ
அலை பாய்கிறாய் – அவனைக்
கொல்லும் வித்தையைக்
கற்க!

இதுவா உன் வீரம்? இதுகாறும்–
இறங்குமுகமே காணாத தீரம்?
எங்கே போயிற்று – சிங்க
ஏறு அனைய உன் கம்பீரம்?'

நாரதர் இவ்வாறு

நவின்றதைக் கேட்டு...

கம்சன்
கனல்பட்ட வேயாய் வெடித்தான்;

முனிவு
முற்ற –
பற்களை நறநறவென்று
பயங்கரமாய்க் கடித்தான்;

வெள்ளப் பெருக்காக
வெளிப்போந்த – தனது
வெகுளிக்கு – ஒரு
வடிகாலாக...

தடக்கைகளை ஓங்கித்
தரையில் அடித்தான்;
அப்படியும்
ஆத்திரம் அடங்காமல்
பிட்டத்தின்
பக்கமாய்ச் செருகியிருந்த..
உடைவாளை
உருவி ஓங்கிப் பிடித்தான்!

'என்னை
எளிதாக –
வஞ்சித்து விட்ட
வசுதேவனைக் கொல்லாது விடேன்!'

என – அவன்
எழ;
தீப்பொறி விழி வழி
தெறித்து விழ;

'கம்சனே! உருவிய
கட்கத்தை உறையில் இடு;
சினம் விடுத்து –
சிறிது எனக்குன் செவிகொடு!

வசுதேவனை தேவகியை – நீ
வாளால் அரிந்து விட்டால்...

நகவம் அற்ந்த
நக்கணமே –

கண்ணனும் – அவனது
அண்ணனும் –
கண்காணா இடத்திற்கு ஓடிக்
கரந்து வாழ்வார்கள்;

காலம்
கனியும் வரை
காத்திருந்து – பின் உன்னைக்
கடிய வாளொடு சூழ்வார்கள்!

வசுதேவன் தேவகியை – நீ
விட்டு வைத்தால்...

இப்போது
இருக்கும் இடத்திலேயே
இருப்பார் கலக்கமற்று;
இடைச்சேரிபால் காதல் உற்று!

வேண்டுமானால் –
ஒன்று செய்;
மறுபடியும் உனது
மைத்துனனையும்; உன்
சகோதரியையும்
சிறையில் வை!'

என்று நாரதர்
எடுத்துரைத்தார் மெல்ல;

உருவிய வாளை
உறையில் இட்டுவிட்டு –
கம்சன் முயன்றான்
கடுஞ்சினத்தை வெல்ல!

பிறகு – சுய
பச்சாதாபத்தோடு பேசினான்;
தானே
தன்னை ஏசினான்!

'நாரதரே!
நான் மகாமடையன்;
இல்லையேல் – என்னை
இவ்வாறு –
சஞ்சலப்படவைப்பானா – ஒரு

சிறு இடையன்?

அசரீரி சொன்ன
அந்தச் சமயமே – நான்
தேவகியைத்
தீர்த்திருக்க வேண்டும்;
வசுதேவன் தடுக்க – பாச
வலையில் வீழ்ந்தேன் மீண்டும்!

சில
சமயங்களில்...
பாசமே –நம் கழுத்துக்குப்
பாசக்கயிறு ஆகிறது; அது
புரியாமல் பாசத்தின் வழி
புத்தி போகிறது!

'எங்கை!
எங்கை!' என்று –
தங்கை மேல் அன்புவைத்துத்
தமையன் கெட்டேன்;
தங்கையின் கருவறையில் –
தயாராகிறது என் கல்லறை –
என்று அறிந்தும் –
எங்கையைக் கொல்லாது விட்டேன்!

நாரதரே!
நானிலத்தில்...

பல்லுயிரும்
படாதபாடு படுவது –
பாழும்
பாசத்தால்; பாசம் –
உடனிருந்தே கொல்லும் – என
உணராத மோசத்தால்!

உறவு என்பதே – ஓர்
உயிர்க் கொல்லி; அதை
வீழ்த்த வேண்டும்
வேரொடு கல்லி!'

கஞ்சன் –
கசப்போடு பேசி முடித்ததும்...
வந்தவேலை முடிந்ததென –
வானம் ஏறினார் நாரதர் – முக
மலர்ச்சியைக் காட்டி; தனது –
மகதியாழை மீட்டி!

நாரதர்
நகர்ந்தவுடனேயே..

வசுதேவரையும் தேவகியையும்
விலங்கிட்டுச் சிறைவைத்தான் –
கஞ்சன்; கண்ணனையே எண்ணிக்
கவல்கின்ற நெஞ்சன்!

கோபாலனைக்
கோற

அவன்
அனுப்பிய –
அசுரரெல்லாம்
அதம் செய்யப்பட்டதால்...

ஆரைப் புதிதாய்
அனுப்புவது என்று –
கம்சன்
கவலைப்படுகையில் –

'கேசி' என்பவன் – அவன்
கவனத்திற்கு வந்தான்;

அபார
ஆற்றல் மிகு –
அவ்
அசுரன் வசம் –

கண்ணனைக்
கடியும் பணியைத் தந்தான்!

குளம்புகளால் – பூமியைக்
குதறவல்ல – பருத்த
குதிரை வடிவெடுத்துப் – பலர்
குடல் வெடவெடென நடுங்க...

பிருந்தாவனம்
புகுந்தான் கேசி;
பறந்தது

பூமிக்கும் வானுக்குமாய் – அத்
துரகம் எழுப்பிய
தூசி; அது –

கனைத்த
கனைப்பையும்; தன்னை
முடிப்பதில் அதற்கிருந்த
முனைப்பையும்;
கண்டுகொண்ட
கண்ணன்....



அந்த
அசுவத்தின் வாய்க்குள் –
தனது
திருக்கையை நுழைத்து – அதன்
உயிரை
உருவி –
வெளியே எறிந்தான்
வீசி!

கேசி மரித்த சேதி
கேட்டு...

அவனது
ஆருயிர் நண்பன் –
'வியோமன்' என்பவன்
வீறு கொண்டு எழுந்தான்;

கொடுஞ்சினம்
கொப்புளிக்க –
கோபாலனைக்
கொல்ல வந்தவன்...

கண்ணன்
காலடியில் –
நசுக்குண்டு
நிலத்தில் விழுந்தான்!

கேசி;
கேசியின் நண்பன் வியோமன்;
இவ்
இருவரின் வீழ்ச்சி கேட்டு –

கம்சன்
கதிகலங்கிப் போனான்; மனம் –
கயிறு அறுந்த
கறங்குபோல் அலைபாய லானான்!

ஓரிரவு முழுவதும் யோசித்து –
ஒரு –
தீர்மானம் செய்தான்
'தனுர்யாகம்' செய்ய; அவ் –
வேள்விக்கு
வரவழைத்து –
நந்தகோபன் குமரனின்
நல்லுயிரைக் கொய்ய!

அதுகுறித்துப் பேச
அழைத்தான் – தனது
அமைச்சர்
'அக்குரூரர்' எனும் புனிதரை;
மந்திரிகள்
மத்தியிலுள்ள ஒரே மனிதரை!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## அக்குரூரர்.

கடுஞ்சிறையில் தற்சமயம்
காவலில் இருக்கும் –
கம்சனின் தகப்பனாருடைய
காலத்தில் இருந்தே –

அமைச்சராக இருப்பவர்
அக்குரூரர்; இம்மியளவும்
அறநெறியிலிருந்து இழியாது
அரசுப்பணி ஆற்றும் சூரர்!

அரசன் கம்சனின்
அவைக்கண் வீற்றிருந்த
அமாத்தியர்களில்
அனேகர் – அவனது
சின்னத் தனமான
சிந்தனைகளுக்குச்
சிரக்கம்பம் செய்து
சிலாகிக்கும் சினேகர்;
அக்குரூரர் மாண்பை – அறியார்
அக் குரூரர்!

அருங்குணங்கள் ஒருசேர
அமையப் பெற்ற அக்குரூரர்...

ஆன்று –
அமைந்தவர்;
சத்துவ குணங்களுக்கு – ஒரு
சரீரமாய்ச் சமைந்தவர்;

கம்சனின்
கயமைகள் கண்டு –
மெல்லவும் சொல்லவும் கூடாது
மனத்துள் குமைந்தவர்;

ஆயினும்
அறம் வெல்லும்; மறம் வீயும் –
என்றெண்ணிக் – காலத்தை
எதிர்நோக்கிக் கமைந்தவர்!

கண்ணன்
கடவுள் அம்சம் என்று –
கணித்தவர்; தன்மனத்தைக்
கண்ணனோடு பிணித்தவர்!

கண்ணனைக்
கண்ணாரக் காணும் –
காலம் வாராதா எனக்

49 கவிஞர் வாலி

கவல்பவர்;

நொடிக்கு
நொடி –
நுணங்காது எட்டெழுத்தை
நுவல்பவர்!

பக்தியில் – மற்றொரு
பிரகலாதர்;
எல்லாம் வல்ல
எம்பெருமானுக்கு –
ஏவல் செய்ய
ஏங்கும் தாதர்!

காவலன்
கம்சனிடமிருந்து
அழைப்பு வர; அதை ஏற்று
அக்ரூரரும் வர...

அவரை – எதிர்கொண்டு
அழைத்து – ஏரார்ந்த
ஆசனத்தில்
அமர்த்தி –

உபசார வார்த்தைகளால்
உவகை உண்டாக்கி;
அவன்பால்
அவருக்கிருக்கும்
கசப்பு உணர்வைத் – தன்
கனிவால் ஒருவாறு நீக்கி ;

பணிவோடு அவர் கைகளைப்
பற்றிக் கொண்டு பேசலானான் –
மதுராபுரி
முதல்வன்;
புகழ்சால் உக்கிர சேனன்
புதல்வன்!

"அருள்மிகு
அக்ரூரரே! அரியவரே! என்
அன்புக்கும்
ஆராதனைக்கும் உரியவரே!

போஜர் குலத்தார்
போற்றுவதும்;



விருஷ்ணி குலத்தார்
வழிபடுவதும்;

உம்மையல்லால் – இவ்
உலகுமிசை வேறொருவர்
இல்லை;
உமது
உள்ளம் நிறைய – நீர்
எம்மிடம் வைத்திருக்கும்
ஏராளமான வாஞ்சையை
எடுத்தோத – எளியேன்
எங்குபோய்த் தேடுவேன்
சொல்லை?

யான் இவ்வமயம்
யாசித்து நிற்கிறேன் –
உமது
உதவியை;
ஆர்
அலங்கரித்தார் – என்



அரசில் – உம்மைப்போல்
அமைச்சுப் பதவியை?

நிஜமாகச் சொல்கிறேன்;
நீர்...
அறத்தின்
ஆணி;
ஆர்விடாயையும் தீர்க்கும்
அன்புக் கேணி;
கவலைக்கடல் வீழ்ந்தாரைக்
கரை சேர்க்கும் தோணி;
ஏழை எளியோரை – மேலே
ஏற்றிவிடும் ஏணி!

உம்மால் – என்னரசு
உற்றது ஏற்றம்; உம்
உபதேசங்களை ஏற்காது
உண்டோ எனக்கோர் ஊற்றம்?

இப்பொழுது
இல்லை –
என் உயிர்
என் மெய்யிலே; அது –
உள்ளது
உமது கையிலே!

ஆம்;
அடியேனை – நீர்தான்
காக்க வேண்டும்; நான் கொண்ட
கவலையை நீக்க வேண்டும்;
என்னுள் இருக்கும்
எமபயம் போக்க வேண்டும்!

என் தங்கையின்
எட்டாம் குழந்தை –
என்னைக் கொல்லும்
என்று –

அசரீரி சொன்னதைத் – தாங்கள்
அறிவீர்கள் நன்று!

எட்டாம் சேய் – என் கைக்கு
எட்டாச் சேய்; என் கைவாள்



வெட்டாச் சேய்; என்பிடியில்
கிட்டாச் சேய் – என்றிருக்கிறது;

வசுதேவன்
வஞ்சனையால் – அது
இங்கிருந்து
இடம் மாறிச் சென்றிருக்கிறது!

ஆம்;
அழகு கொழிக்கும்...

பிருந்தாவனத்தில் – நந்தன்
பிள்ளையாய் வளர்கின்ற –
கண்ணன் தான் – எனக்குக்
காலனாய் வந்துதித்தவன்;
தேவகியிடம்
தோன்றி –
அர்த்த ராத்திரியில்
அசோதை வீட்டை மிதித்தவன்!

நாரதர்

நவின்றபடி...

அந்தக் கண்ணன்தான் –
அந்தகார வண்ணன்தான் –
என்னைத் துவம்சம் – செய்ய
எண்ணியுள்ள திருமாலம்சம்!

கண்ணன் – என்னைக்
கொல்லுமுன் –
கண்ணனை – நான்
கொல்ல முயன்றும் ...

நான் அனுப்பிய பேரை – அவன்
நிர்மூலம் செய்துவிட்டான்;
ஒவ்வொருவர் உயிரையும் –
ஒரு பூப்போல் கொய்து விட்டான்!

அவனை – வஞ்சனையால்தான்
அழிக்க வேண்டும்; இங்கு –
வரவழைத்து – அவனும்
வந்துவிட்டால் – அதன்பின்
பிருந்தாவனத்திற்கு – அவன்
போவதேது மீண்டும்?

அவன் உயிரை – நான்
அபகரிக்க –
உம்மை விட்டால் யார் எனக்கு
உபகரிக்க?

நாளையே
நான் –
தொடங்க இருக்கிறேன்
'தனுர்யாகம்';

நீண்ட வில்லில் – அந்த
நீலகண்டப் பெருமானை...

ஆவாகனம் செய்து –
அந்தணர் செபிப்பது தான் –
தனுர்யாகம் – என்றேத்தும்
பார்வேந்தர் லோகம்!

அந்த யாகத்திற்கான
அழைப்பு ஓலையை –

நீர் எடுத்துச் சென்று
நந்தகோபனிடம் தாரும்;

அவனையும்
அவன் குடும்பத்தாரையும் –
அரசு ஆணையாய்ச் சொல்லி
அழைத்து வாரும்!

நந்தகோபன் – என்
நிழலில் வாழும் சிற்றரசன்;
கம்சனுக்குக்
கப்பம் கட்டுவதால் தான்–
வாழ்கிறான் அவன்; இல்லையேல்
வாழ்வு இல்லாத வெற்றரசன்!

தன்னை வளர்த்த
தாய் தந்தையோடு –
இங்கு வரும் கண்ணனுக்கு
இறுதிகட்ட...

வகுத்திருக்கிறேன்
வழி;
வாய்பிளந்து நிற்கிறது – அவன்
வருகைக்காக மரணக்குழி!

எடுத்துச் செல்லும்
என் பூந்தேரை;
கையோடு கூட்டிவாரும் – அந்தக்
கண்ணன் குடும்பத்தாரை!"

நீசன் கம்சன்
நிதானமாய் –
நிகழ்த்திய
நீண்ட உரையைக் கேட்டு...

அக்குரூரர் – சற்று
அதிர்ச்சியுற்று நின்றார்;
அமைச்சன் என்ற முறையில்
ஆட்சேபிக்க முடியாததால் –
'ஆகட்டும்' என்று சொல்லி
அவ்விடம் விட்டுச் சென்றார்!

கம்சன்
களித்தான்;
குதுகலப் புனலில்
குளித்தான்!

தனது திருமாளிகைக்குத்
திரும்பியதும்...

அக்குரூரரின் மனம்
அலைபாய்ந்தது;

கோவிந்தனைக்
கோறுகின்ற –
காரியத்திற்குத் தன்னைக்
கருவியாகப் பயன்படுத்தும்...

கம்சனை எண்ணி – அவரது
கண்களில் கனல் காய்ந்தது!

செய்ய நேர்ந்த
செயல் குறித்துக் கூசினார்;
பிறகு தனக்குத்தானே
பேசினார்!

'கம்சா!
காலநேமியின் அம்சா!
கண்ணன் வருவான்; நீ –
கண்ணனால் சா!

விதியடா, மகனே!
விதி! இல்லையேல் –
அரசன் போக்கில்
அமைச்சன் பிழை கண்டால் –
அதைத் தடுக்க
அஞ்சியிருக்குமா அவன் மதி?

உன்னால்
உந்தப் பெற்று தான்...

இழைக்கிறேன்
இந்தத் தப்பு;

என் செய்ய?
என்னுள் –
இருக்கிறதே இன்னும் – எனது
இரைப்பைக்கு நீ இட்ட உப்பு!

இழிஞனே! உன் மூளைக்கு
இருக்குமாகில் கூர் –
ஒன்று
ஓர்!

உதடுகுவித்து
ஊதினால் அணையும் –
அகல் விளக்கு! அணையுமா
பகல் விளக்கு?

விளக்குதான் தின்னும்
விட்டிலை; இது –
விளங்கியும் – உன்
வீம்பை நீ விட்டிலை!'

அவர் வீட்டில்
அமர்ந்தவாறு –
அக்குரூரர் இவ்வணம்
அங்கலாய்த்து இருக்கையில்...

அரண்மனையில்
அமர்ந்து...

கம்சன்
கண்ணனைக் கொல்வதற்கான
திட்டங்களைத்
தீட்டினான்;
மாவுத்தனை –
மல்லர்களை –
அழைத்து
அவை கூட்டினான்!

'மாவுத்தனே! நான்
மொழிவதை மனத்தில் வை;

நானழைத்து
நந்த கோபனொடு –



கண்ணன் வருகையில்
காரியத்தைக் கவனமொடு செய்!

குவலயம் புகழும் – நமது
'குவலயா பீடம்' யானையை –
மதம் ஏற்றி
மாளிகை வாசலில் இருத்து;

ஓர் – இரும்பு
உலக்கையை – அந்தத்
தும்பியின்
துதிக்கையில் பொருத்து!

வாசல் வழி – கண்ணன்
வருகையில் ...

ஆனைக்கு
ஆணையிடு –
அவன் தலையில்
அந்த உலக்கையால் தாக்க;

அது போதும்
அந்த –

அசோதை மகனின்
ஆவியை அறவே போக்க!

மல்லர்களே!
மதயானைக்குத் தப்பி –

கண்ணன் வந்தால்
காட்டுங்கள் வலி;
அவன் உங்களுக்கு
ஆகவேண்டும் பலி!

என் ஆணையை –
ஏற்று ..

மாவுத்தனும் –
மல்லர்களும் –
காவு கொள்ளவேண்டும்
கண்ணனை;
அவன் கூடவே – அவன்
அண்ணனை!

செவ்வனே – இவற்றைச்
செய்து முடிக்காவிடில்...

உங்கள்
உயிர்களுக்கு
உத்தரவாதம் இல்லை;
உணர்ந்திடுக என் சொல்லை!'

கம்சன் சொன்னதைக்
காதில் வாங்கினர்;
மாவுத்தனும் மல்லரும்
மன்றம் நீங்கினர்!

செய்ய தேர் – போய்ச்
சேர்ந்தது...
அமைச்சர்
அக்குரூரர் வீட்டுக்கு; ஆக
அழைப்பு விடுத்தான் கம்சன்
அவனது கேட்டுக்கு!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## பிருந்தாவனத்தில்...

பிருந்தாவனத்தை நோக்கிப்
போய்க் கொண்டிருந்தது தேர்;
அதனுள்
அமர்ந்திருந்தது –
ஆழ்ந்த சிந்தனையொடு
அக்குரூரர் என்னும் நேர்!



ஒருபக்கம் உலைவு;
ஒருபக்கம் உவகை;
இப்படி
இருந்தது அவரது உள்ளம்;
இரண்டின் வெளிப்பாடாய்
இழிந்தது விழிவழி வெள்ளம்!

'என்னைக் கம்சன்
ஏவியிருக்கும் காரியத்தை –
ஏற்ற காரணத்தால்
என்மேல் கவியலாம் பழி;

ஆயினும்...
அடடா!
இகவுமிக்க
இச்செயலிலும் – ஒரு
தகவுமிக்க
தரிசனம் காணுமென் விழி!

அந்த வகையில்
அவன் எனக்கு
ஆற்றியிருக்கிறான் – ஓர்
அரிய சேவை;

கிட்டுமா?
கிட்டுமா?
என்றிருந்த
எனக்குக் கிட்டுமே...

பிருந்தாவனத்தில்
பகவானின் சேவை!

தீமை என்று – நாம்
தீர்மானிப்பதை – நமக்கு
நன்மை என்று
நவிலாமல் நவிலும் ஊழ்;

சில
சமயங்களில் –
உதவி புரிவதில்
ஊழுக்கு உண்டோ ஒரு கேழ்?

கண்ணனைக்
கண்ணன் அல்ல –
விசும்புவிட்டு வையம் வந்த
விஷ்ணு என்று –
அறிந்தவன் நான் – எனது
ஆறாம் அறிவு சொல்ல!

அறிந்தும் –
அந்தோ!

மதுராபுரியிலிருந்து
முப்பது முப்பத்தைந்து –
கல் தொலைவில்
கடவுள் இருக்கையில் –
கண்டு – ஜன்மம்
கடைத்தேற இயலாமல்...

வஞ்சகன் கம்சனுக்கஞ்சி
வாளாயிருந்து விட்டேன்;

வாடி –
வருந்தி –

அச்சுதா!
அனந்தா!
ஆனந்தா!
ஆராவமுதா! என்றெல்லாம்...



அவன் திருநாமங்களையே
அன்னம் தீர்த்தமா யருந்தி;
எஞ்ஞான்றும்
எய்த்துப் போனேனே தவிர –

கம்சன்
கண்களில் –
மண்ணைத் தூவிவிட்டு
மாதவன் வாழும் –

பிருந்தாவனம் போய்ப்
பிரபத்தி பண்ணாது கெட்டேன்!

அடியேன் முனம்புரிந்த
ஆகூழ்...

பிருந்தாவனம் செல்ல – என்னைப்
பணித்தான் துட்டன்;

அங்குபோய்
அகம் பூராவும் இனிக்க – அது
இளகும் போழ்தில்
இருவிழிகளும் பனிக்க –

காணக் கிடைப்பான் எனக்குக்
கண்ணனெனும் கரிய குட்டன்!'

இன்னணம் –
இதயத்துள் எண்ணும்போதே...

அக்குரூரருக்கு
அந்த எண்ணமே அண்ணித்தது;

கண்ணன்
காதல் –
மீதூர
மீதூர –

எளிய பக்தர் அக்குரூரரை
என்ன என்னவோ பண்ணித்தது!

அன்றே –
அந்தியம்போதில் –
அக்குரூரர்

அடைந்தார் பிருந்தாவனத்தை;
வணங்கினார் வாழ்த்தினார்
வழிநெடுக வரிசையாய் நின்று –
வியப்பொடு அவரது
வருகையைப் பார்த்த சனத்தை!

நண்ணினார்
நந்தன் இல்லை;
நந்தனும் – அவன்
நாயகியும் – அவ்வமயம்
இல்லில்
இல்லை!

கண்ணனும் அண்ணனும்
கறவைகள் அடைந்திருக்கும்
கொல்லைப் புறத்துக்
கொட்டில் பக்கம் உள்ளதாய்...

அரண்மனைப் பணியாளர்கள்
அறிவிக்க –
அக்குரூரர் அவ்விடத்தை
அடைந்தார்;
அங்கு
ஆதிமூலமும்;
அந்த
ஆதிமூலத்தின்
அமளியான
ஆதிசேஷனும்;

கண்ணனாய் மாறி – அவன்
அண்ணனாய் மாறி –
மாடு குளிப்பாட்டுவது கண்டு
மனம் உடைந்தார்!

திடீரென்று வாசுதேவன்
திருவடிகளில் விழுந்தார்;

அகவையில் பெரியவர்
அன்னணம் பணிவது –
அபசாரம் ஆகும் என
அவரை அவரது –

தோள்தொட்டுக் கண்ணன்

தூக்கவும் எழுந்தார்!

எவன் தொட்டால்
எல்லாத் தொல்லையும்
தொலையுமோ –
அவன் தொட்டதில்
அவர் தொய்ந்து போனார்;

விழி
விளிம்பில் –
நன்றியுணர்வு
நீர்கோத்து நிற்க;

நா
நாராயண நாமத்தைக் –
கல்லாதான் புதிதாய்க்
கற்பது போல் கற்க;

முதன் முதல்
முகுந்தனின் –
திவ்விய
தரிசனம் கிடைத்த திகைப்பில்...

வாயிருந்தும்
வார்த்தையற்றவர் ஆனார்!

அவ்வமயம்
அசோதை ஆளனொடு வர –
அக்ரூரரை
அழைத்துக் கொண்டு...

கண்ணனும் அண்ணனும்
கூடத்திற்கு வந்தனர்;

நந்தனும் – அவனது
நாயகியும் – அந்த
நல்ல மனிதரை
நமஸ்கரித்து...

தாம்பூலம் சந்தனத்தோடு
தக்க மரியாதை தந்தனர்!

வந்த விஷயத்தை – நந்தன்
வினயமாக வினவ...

விரித்தார் – ஞான
வித்து;
அக்ரூரர் என்னும்
அறக்கடல் விளைந்த முத்து!

'ஆயர்குலத்தின்
அரசே!
சிறந்த குணங்களின்
சிரசே!

காவலன் –
கம்சன் –

தற்பொழுது
தனுர்வேள்வி நடத்தத்
தீர்மானித்து – அதற்கான
தயிர் நெய் பால் – அனைத்தும்

எடுத்துக் கொண்டு – தாங்கள்
எழுந்தருள வேண்டும் என்று –
என் மூலம் – கட்டளையாய்
எழுதித் தந்திருக்கிறான் ஓலை;

தங்களை – ஓம
திரவியங்களோடும்;
தாரம்; தமர்;
தனயர்களோடும்;

மதுராபுரிக்கு வருமாறு – இம்
மடல் தந்து வேண்டுவதுதான் –
அரசன்
அடியேனுக் கிட்ட வேலை!'

இன்னணம்
இயம்பி – அரச ஓலையை
நந்தனிடம் – அக்ரூரர்
நீட்ட...

பிரியமாய் – அதைப்
பெற்றுக் கொண்டு –
பேசினான் நந்தன்;
பேசரிய பேறுடைய விந்தன்!

'அருளார்ந்த

அமைச்சர் பெருமானே!
தாங்களே – அரசனின்
திருமுகத்தை –
எடுத்துக் கொண்டுவந்தது
எனக்களித்த கௌரவம் தானே!

வேள்விக்கு
வேண்டிய பொருள்களோடு
வருவேன் என்று – கூறுங்கள்
வேந்தனிடம் சென்று!

இஃதன்னியில் –
இன்னும் உளதா மீதி – கம்சன்
சொல்லச் சொல்லி
சொல்லாது விடுபட்ட சேதி?'

என்று – நந்தகோபன்

அடுத்தநாள் –
அதிகாலைப் பொழுதில்...

பரந்தாமனையும்
பலராமனையும்
அழைத்துக் கொண்டு
அக்குரூரர் கிளம்பினார் –
தேரில்; பார்த்தார் –
தேம்பி நின்ற மக்களை ஊரில்!

கணப் பொழுதும்
கண்ணனைப் பிரிந்தறியாச் –
சனம்; பொறுக்குமா
மனம்?

புரவிகள்
பூட்டிய



எழுப்பிய வினாவிற்கு...

'மகோன்னதமான வேள்வியையும்;
மதுராபுரி விழா வனப்பையும்;
கண்ணனும் பலராமனும்
கண்டு பரவசப்பட...

அவர்களை முன்னதாகவே
அனுப்பித்தர வேண்டுமென்பது –
கம்சன் விருப்பம்; அவர்கள்
காண்பாராம் நல்ல திருப்பம்!'

என்று
ஏந்தல் சொன்னார் பதில்;
நந்தகோபனுக்கும்
நியாயம் தென்பட்டது அதில்!

பொற்றேர்
போய்க் கொண்டிருந்தது...

மாநகராம்
மதுராபுரி நோக்கி;
அக்குரூரர்
அமர்ந்திருந்தார் –
நிட்காம்ய கர்மமாய்த் – தான்
நிகழ்த்திய காரியம் குறித்து
நூறு சிந்தனைகளைத் – தனது
நுண்ணறிவில் தேக்கி!

கம்சன் திருந்துவானா? பாவ –
கர்மங்களுக்கு வருந்துவானா?
இல்லை
இறுதிவரை
இழிஞர் திருந்தார் – எனும்

இன்னுரைக்குப்
பொருந்துவானா?

என்றெல்லாம் அக்குரூரர்
எண்ணி அலைபாய்ந்தார்;

தான் - ஒரு
தருக்கனின்
துட்கிருத்தியத்திற்குத் -
துணையாகிவிட்ட
துர்பாக்கியம்...

தனது விதியா? வினையா?
என்று
தனக்குள் ஆராய்ந்தார்!

யமுனை
யாற்றின் -
கரையோரம் ஓடிய தேரை -
ஒரு
கட்டத்தில் ஓரம் கட்டி...

அக்குரூரர் மட்டும்
ஆற்றில் இறங்கினார் நீராட;
அனல் வாய்ப்பட்டு - அவரது
அகமும் புறமும் போராட!

வேத
விதிப்படி -
உபநிடத மந்திரங்களை
உச்சரித்தபடி...

அக்குரூரர்
ஆற்றுள் முழுக;

கண்ணனை பலராமனைக்
கண்டார் பளிங்கு நீர்க்குள் -
அவர்கள் திருமுகங்களில்
அருட்புனல் தேனாய் ஒழுக!

வியந்து - நீரை விட்டு
வெளிவந்து பார்க்கையில்...

இருவரும் தேர்த்தட்டில்
இருப்பது கண்டார்;
அவர்களைத் - தான்
ஆற்றுள் பார்த்தது
அர்த்தமற்ற பிரமை - என்று
ஆறுதல் கொண்டார்!

மனத்தைத் தேற்றிக் கொண்டு
மறுபடியும் - அவர்
மூக்கைப் பிடித்துக் கொண்டு
முழுகுகையில்...

கண்ணனை பலராமனைக்
கண்டார் நீரில்;
வெருவி
வெளிப் போந்து பார்த்தால் -
வாசுதேவனும் பலதேவனும்
வீற்றிருக்கின்றனர் தேரில்!

இவ்வாறு
இருமுறை மும்முறை -

மகாபக்தரான அக்குரூரர்
மாறி மாறி மாறி மாறி -
கண்ணனை; அவன்
காதல் செயும் அண்ணனை;
கண்டார் நீரிலும்;
கனக மணித் தேரிலும்!

அச்சமும்
ஆச்சரியமும் -
அவரை
அலைக்கழிக்க...

இறுதியாய் ஒருமுறை - நீரில்
இறங்கி 'ஓம்' எனச் சொல்லி -
அக்குரூரர்
ஆதி அந்தம் முழுகி நிற்க...

ஆற்றின்
அடியில் -
அவர் கண்ட காட்சி -
அற்புதக் காட்சி;
ஆரே கூற வல்லார்
அக் காட்சியின் மாட்சி?

(தொடரும்)

## பட்டணப்பிரவேசம்.

**ப**த்தாயிரம் கோடிப்
பௌர்ணமிகளைக் கொன்று –
பிழிந்தெடுத்த சாற்றினைப்
பிரவாகமாய்ச் சலசலெனப்...

பெருகவிட்டாற் போல் –
பேசற்கரிய ஒரு பால் பரவை;
அதன் நடுவே –
அகல நீளம் அறியவொண்ணாப்

பாயல் என – விரிக்கப்
பட்டிருக்கிறது – ஓராயிரம்
பணா மகுடங்களோடு
பளபளக்கின்ற ஓர் அரவை!

பரவை மேல் உள்ள –
அரவை மெல்லணையாய்க் கொண்டு...

படுத்திருக்கிறான்
பதும நாபன்;
பழமறை துதிக்கும்



பிரணவ ரூபன்!

கவுத்துவம்;
கருந்துளவம்;
மற்றும் – ஒன்பான்
மணிகளாலான ஒளிவடங்கள்;

என
ஏகமாய்
ஏரார்ந்த திருமார்பு
ஏற்றிருக்க;

கொப்பூழ்க்
கொடிமேல் –
விரிஞ்சன்
வீற்றிருக்க;

புயல் நிறம்
பூண்ட நீண்ட திருமேனி –
புனைந்திருந்தது
பீதக வஸ்திரம்;

திருக்கரங்கள் நான்கும்
தாங்கியிருந்தன...

சங்கம்;
சக்கரம்;
சார்ங்கம்;
சஸ்திரம்!

வலமார்பில்
வண்ணமுற விளங்கினாள்...

செங்க்ண்மாலை விட்டுச்
செல்லுதலை – விநாடியளவும்
செய்யாள் என – செப்பப்பெறும்
செய்யாள்!

திருமாலின்
திருக்கண் மலர்களில் –
தண்ணளி வெள்ளம் தடையின்றி
தயில தாரையென்று வழிந்தது;
திருவதரங்கள் – முறுவல்வழி
தீஞ்சுவைத் தேனைப் பொழிந்தது!



விழி தாமரை;
வாய் தாமரை;
கை தாமரை;
கால் தாமரை;

எனத் தாமரைக் காடாய் –
எம்பிரான் தோற்ற...
அமலனாதிப் பிரானின்
அழகைப் பசுந்தேறலாய்
அருந்தி – ஓர்
அவசநிலை உற்ற –

நித்தியசூரிகள் – அவனது
நிகரற்ற நாமாவளியைச் சாற்ற...

அந்த
அற்புதக் காட்சியைக் கண்டு –
அக்குரூரர்

'அச்சோ! அச்சச்சோ!' என்றார்;
தன்னிரண்டு கரங்களையும்
தலைக்குமேல் குவித்துக் - கண்
தித்திக்கத் தித்திக்கத்
திருமாலை தரிசித்து நின்றார்!

"கண்ணா! உன்
கருணையால் உன்னை எனக்குக் -
காட்டிக்
கொடுத்தாய்;

யமுனை
யாற்றைப் -
பாற்கடலாக்கிப்
பாம்புப் பாயலில் படுத்தாய்!

கண்டேன்;
கண்டறியாதன கண்டேன்;
விபுவே!
விஷ்ணுவே!

விகசித்து
விரிந்து கிடக்கும் உனது -

திவ்வியமோ திவ்வியமான
திருமேனியைத்
'தேன்!
தேன்!' என்று என்...

விழிகளை
விரல்களாக்கி -
வழித்து
வழித்து உண்டேன்!

விருந்தாவனத்தில் உனை
விழுந்து வணங்கிய எனை -
தோள்தொட்டு நீ
தூக்கிய பொழுதில்...

ஸ்புடம் போட்ட - உன்
ஸ்வர்ண மேனியை -
ஸ்பரிசித்தேன்; இன்று உன் -
ஸ்வயத்தை தரிசித்தேன்!

இன்றுமுதல்
இற்றது என் பிறவித்தளை;
எண்கண்ணன் நிறுத்துவான்
என்னைப் பிறப்பித்தலை!

பிரபுவே! உன்
பாத பங்கயத்தில்
புகுந்தேன் சரண்; உன்
புகலலால் என்க்கேது அரண்?"

இன்னணம்
இறைஞ்சி - அக்ரூரர்
இரு நொடிகள்
இமைகள் மூடி -

திருமால் திருவடி - தியானித்து -
திரும்பக் கண் திறக்கையில்...

திரும்பிய புறமெலாம்
தீர்த்தம் நிறைந்திருந்தது;
முன் தென்பட்ட - தெய்வ
மூர்த்தம் மறைந்திருந்தது!

அதன்பின்
அக்ரூரர் கரையேறி -
அனுஷ்டானங்களை
ஆற்றி விட்டுத் -

தேருக்குத்
திரும்ப; அவர்
திருமுகத்தில் - புதுத்
தேசு அரும்ப;

'தவசீலரே!
தங்கள் திருமுகத்தில்...
ஆனந்தம்
அரும்பி நிற்கிறதே;
அதன் காரணத்தை நான்
அறியலாமா?'

என்று வினவினான் கண்ணன்;
ஏமாம்புஜக் கண்ணன்!

அக்ரூரர்

ஆயர்குலத்து அணிவிளக்கை...

வைத்தகண்
வாங்காமல் பார்த்தார்; பின் –
வார்த்தைகளை
வாஞ்சையொடு வார்த்தார்!

'கண்ணபிரானே நீதான் – எல்லாக்
காரியங்களுக்கும் காரணன்;
பூரணத்திலிருந்து புறப்பட்டு –
பூமிவந்திருக்கும் பூரணன்!

பதினான்கு –
பிரபஞ்சங்களிலும்...

நேர்ந்தது;
நேர்ந்துகொண்டிருப்பது; நாளை –
நேர்வது; ஒரு மூன்றையும்
நீயல்லால் ஆரிங்கு ஓர்வது?

வினாவும் நீயே;
விடையும் நீயே;
வினா வேறு;
விடை வேறு அல்ல;
இன்னணம்
இருக்கையில்
நீ எனைக் கேட்டால்
நானென்ன சொல்ல!'

சின்னக்கண்ணன் – தனக்குள்
சிரித்துக் கொண்டான்;
எப்பொழுதும் போல் – ஓர்
எளிய புன்சிரிப்பை –
தன் இதழுக்கு நகையாய்த்
தரித்துக் கொண்டான்!

அக்குரூரர் – இன்னும்
ஆனந்த லாகிரியிலேயே –
அமிழ்ந்துபோய் – அதை
அனுபவித்துக் கொண்டிருக்க...

புறப்பட்டது
புரவி கட்டிய தேர்;
புகுந்தது – மாலையில்
புகழ்சால் மதுரை எனும் ஊர்!

மதுரைக்குப் பக்கம் – ஒரு
மலர்வனம்;
கண்ணன் வரும் வழிமேல்
கண்விழிகளை வைத்துக்
காதலொடு – அங்கு
காத்திருந்தது ஊர்ச்சனம்!

வாசுதேவன் சொல்ல – பாகன்
வார் பிடித்து இழுக்க...

வண்ணத்தேர் – அந்த
வனத்தில் நின்றது;
கண்ணனை அவன் அண்ணனைக்
கண்களால் ஊர் தின்றது!

அமைச்சர்
அக்குரூரரிடம்...

'மரியாதைக் குரியவரே!
மாலைக் கருக்கலில் –
நகருக்குள் புக
நாங்கள் விரும்பவில்லை;
விடிந்ததும்
வந்து –

வணங்குகிறோம்
வேள்வி வில்லை!

தாய்மாமன் கம்சனிடம் –
தெரிவித்து விடுங்கள்...

நாங்கள்
நகர்ப் புறத்தில்
தங்கியிருக்கும்
தகவலை;
தணிந்திருப்பான் – அவன்
தன் கவலை!'

என்று – கண்ணன்
எடுத்துச் சொல்ல –
அங்கிருந்து

406

அக்குரூரர் -
அரைகுறை மனத்தோடு
அகன்றார் மெல்ல!

இரா வண்ணன்
இரா வெல்லாம் - அவ்
வனத்தில் உள்ள
விடுதியொன்றில்...

தமையனோடு
தங்கினான்;

பொல்லாக் கம்சனுக்குப்
பொன்றுங் காலம்
போந்தது என்றெண்ணிப்
பொங்கினான்!

புலர்ந்தது காலை;
பூத்தது சோலை;



பூமி உடுத்திக் கொண்டது
புதிதாய் வெளிச்சச் சேலை!

பரந்தாமனும்
பலராமனும் -
பட்டணப் பிரவேசம்
புரிந்தனர்;

தேசுமிகு - இரு
தெய்வத் திருவுருவங்கள்...

வீதி வழி
வரக் கண்டு
மாந்தர் - மாடங்களிலிருந்து
மலர்களைச் சொரிந்தனர்!

மக்கள்
மனங்களில் இருந்தது
கம்சனின் அச்சம்; அதைவிடக்
கண்ணன் காதல் உச்சம்!

அவ் வமயம்
அவ் வீதிவழி -

தனது
தளர் மேனியில் -
முக்கோணல் கொண்ட
மூதாட்டி ஒருத்தி...

கூனிக்
குறுகியவாறு வந்து -
செங்கமலக் கண்ணனுக்குச்
செலுத்தினாள் வந்தனம்;

'திரிவிக்ரா' என்னும்
திருநாமம் உடைய அவள் -
தாங்கியிருந்த கிண்ணத்தில்
தேங்கியிருந்தது சந்தனம்!

'அய்யனே! நான்
அன்றாடம் -
அரைக்கும் சந்தனம்
அதிக மணம் மிக்கது; இதன் -
வாசம்

வேந்தன் கம்சன் –
வெகுவாய்
விரும்பத் தக்கது!

அரசனுக்கான – இந்த
அரிய சந்தனத்தைத் –
தாங்கள்
தரித்தால் மகிழ்வேன்;

நெடுநாளைய
நேர்த்திக்கடன் ஒன்றை –
நிறைவேற்றியது போல்
நெஞ்சம் நெகிழ்வேன்!'

என்றவள் கிண்ணத்தை
எதிரில் நீட்ட...

அதிலிருந்த சந்தனத்தை
அள்ளி யெடுத்துத் –
தன்
திருமார்பில் பூசிக்கொண்டு –

கோபாலன் – மூன்று
கோணல்கள் கொண்ட மூதாட்டியை –
தோள்
தொட்டு –
நிமிர்த்தினான்
நேராக; அவள்
வடிவம்
விளங்கியது சீராக!

பிறகு –
பரந்தாமனும் பலராமனும்
பல்வேறு – ராஜ
பாட்டைகளைக் கடந்து...

அழகு மலர்களால்
அலங்கரிக்கப்பட்ட –
வில்
வைத்திருக்கும் –

வேள்விச் சாலைக்குள் – இள
வேழங்கள் போல் புகுந்தனர்;

அத்துமீறி
அவர்கள் நுழைந்தது கண்டு –
அங்கிருக்கும் காவலர்கள்
ஆத்திரம் மிகுந்தனர்!

தங்களைத்
தாக்க வந்தவர்களைக் –
கண்ணன்
கண்ணிமைக்கும் நேரத்தில்...

புண்ணீர் சிந்துமளவு
புடைத்தான்;
பின் –
பென்னம் பெரிய – அவ்
வில்லை எடுத்து
விருட்டென உடைத்தான்!

அந்த அரவத்தில்
அவ்வூர் அதிர்ந்தது;
கம்சன் மாளிகையின்
காரை உதிர்ந்தது!

யாதவ குலத்து யவ்வன
யானைகள் புகுந்ததால் –
யாகசாலை
சோக சாலை ஆனது; தகவல் –
போஜகுலத்துப்
புரவலன் காதுக்குப் போனது!

பிறகு –
பரந்தாமனும் பலராமனும்...

நகரில் திரிந்துவிட்டு – இரவு
நந்தவனம் திரும்ப – அங்கு
நந்தகோபனையும் – பிற
நந்தர்களையும் கண்டனர்;
அவ்
அழகிய வனத்திலேயே –
அனைவரும் வட்டமாய்
அமர்ந்து உணவு உண்டனர்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## நிமித்தங்கள்.

**வே**ணுகோபாலன் எனும்
வேழக் கன்று –
வேள்விச் சாலை
வேதிகைமேல் சார்த்தியிருந்த –

வில்லை
விருட்டென இறுத்தது கேட்டு –
வெகுளலும் வெருளலுமாய்
விதிர் விதிர்த்து நின்றான்...

மதுராபுரியின்
மன்னன்;
சீலங்க ளில்லாச்
சின்னன்!

விநாடிக்கு விநாடி – அவனை
வெட்கம் விழுங்கியது;
வெள்ளாவி வைத்த துணிபோலவன்
உள்ளாவி புழுங்கியது!

குழலூதும் ஆயர்குலக்
குட்டனை எண்ணிக் குமைந்தான்;
விந்தனைப் பற்றிய

கவிஞர் **வாலி**

வியப்பெய்தி – ஒருமுகச்
சிந்தனை வயப்பட்டுச்
சிலா ரூபமென்று சமைந்தான்!

'எந்தவில்







ஏத்துதற்குரிய பொருளாய் –
எக்கியத்தில்
எழுந்தருளி யிருந்ததோ...

அந்தவில்

அஞ்செழுத்தானை –
ஆவாகனம் செய்து வைத்த
அசாதாரணமான வில்;

கரும்பை – ஒரு







கஜம் முறிப்பது போல் – அதைக்
கண்ணன் முறித்தானெனில்
கழறப்போமோ அவன் வல்?

நினைத்தது ஒன்று;
நிகழ்ந்தது ஒன்று; தலை –

குனியவைத்துவிட்டதே – என்னை
குஞ்சரக் கன்று!

தனுர்யாகம் – என்று
தாக்கீது அனுப்பி –
தலைக்கு ஆபத்தை – நானே
விலைக்கு வாங்கி விட்டேனோ?

அந்த
அளவு –
அவசரத்தில்
ஆயாது விவரங் கெட்டேனோ?

வரிப்புலியை
வளைக்க
வலை விரித்தால் – அது
வலைக்குள் வந்து விழுந்து...

அடுத்த
அரை நொடியில் –
வலைகிழித்து
வெளிப் போந்ததே?
அது எனக்கு
அவமானம் ஈந்ததே?

சே!
சரியான திட்டமிடல் இன்றி...

எடுத்தேன் கவிழ்த்தேன் என
எனது –
சஞ்சலபுத்தி – இன்னணம்
சதி வகுத்ததா?
இல்லை –

இது இப்படித்தானென்று – எனை
வீழ்த்த வேளை பார்த்திருக்கும்
விதி வகுத்ததா?'

மன்னன் கம்சன் –
மறுகி மறுகி...

முட்டாள்தனமான – தன்
முடிவு குறித்து –
முனக லானான்;
மூக்குடைந்து போனான்!

தன்னைத் தானே
திட்டிக் கொண்டான்; 'அவசரக்
குடுக்கை' என்று – தன் தலையில்
குட்டிக் கொண்டான்;

பொட்டு
புடைக்கு மளவு –
முட்டு முட்டென்று – சுவற்றில்
முட்டிக் கொண்டான்;

விரல்களில்
விளைந்திருந்த –
உகிர்களை
உளியொத்த பற்களால்...

விறுவிறு வென்று
வெட்டிக்கொண்டான்!

ஆயினும்
அவனை –
அவனது
ஆணவம்...

அத்தகு
அவல நிலையிலிருந்து
மெல்ல மெல்ல
மீட்டது; மீட்டு – அவன்
கிளர்ச்சியுறுமாறு – வினாக்கள்







கேட்டது!

'கம்சனே! நீ –
கர்வத்தை விடாதே;
முதல் தோல்வியையே
முடிவான தோல்வியா யெண்ணி – ஒரு
நபும்சகனைப் போல்
நாணப் படாதே!

ஆரம்பத்தில் தோற்றால்
அது ஆகுமா தோற்பு?

தோற்றல் என்பது – வெற்றியின்
தோற்றல் எதிர்ப்படும் வரை –
ஒருவன்
நோற்பது நோற்கும் நோற்பு!

நீ யார்?
நினைத்துப் பார்;
அஞ்சும் உன்பேர் சொன்னால் –
அனைத்துப் பார்!

வாள் –



வாளாயிருக்க வேண்டும்;
வாள் –
வாளாயில்லாமல்
வாளாயிருந்தால் – அது
வாளல்ல; வைக்கோல்! நீ
வாளாகவே இரு; என்றும் –
வளையாது உனது கைக்கோல்!

உன்னை நீயே
வையாதே;
தொட்டதற்கெல்லாம்
தொய்யாதே!

எப்பொழுதும்
எப்படியிருப்பாயோ –
அப்படி
ஆணவத்தோடு இரு;
ஆணவம்தான்
ஆட்சித் தருவுக்கு எரு!

தவசி
தவிர்க்கலாம் –
தானெனும்
தருக்கை; உன்னொத்த –
தார் வேந்தனுக்குத்
தருக்குதான் தரும் –
இசையெனும்
இருக்கை!

யாக சாலையில்
யார் –
வில்லை ஒடித்தானோ –அவன்
விலாவை ஒடிப்பேன் என்று
வீறுகொண்டு எழு;
வேந்தர்க்கு சோர்வுதான் வழு!

மற்ற
மனிதர்களைப் போல் – நீயுமொரு







மனிதனே; எனினும் உனை –
மாய்க்க வொண்ணுமோ மனிதனே?

அது –
ஆகாது – என
அறிந்ததால்தானே – உனை
அழிப்பதற்கு...

இறங்கி வந்திருக்கிறது
இறை;
இறையொடு பொருதுவதைவிட
இங்குளதோ உனக்கு நிறை?

வென்றாலும் புகழ்;
வீழ்ந்தாலும் புகழ்; எல்லாம் –
வல்லவனோடு பொருதினான் என
வரலாற்றில் திகழ்!

அச்சம் விடு;
அமைதியாய்ப் படு;
காலை புலர்ந்ததும் –
கண்ணனைப் போக்கிட –
உறையில்
உறங்கும் –
வாளை
வேளையறிந்து வெளியே எடு!'

கம்சனுள்
கரந்திருக்கும் –
செருக்கு இன்னணம்
செப்பியது; அதை –
ஓரளவு அவன் மனம்
ஒப்பியது!

இதற்குள்
இரவு...

நடந்து நடந்து
நடுச்சாமத்தைக் கடந்தது;

ஓசைகள்
ஓய்ந்து –
ஊர்
உறக்கத்தில் கிடந்தது!

கம்சன்
கண்ணுறங்கலாம் எனப் –
பள்ளியறைக்குள்
புகுந்தான்;

மிச்சம்
மிகுதி யுள்ள –
மிரட்சியால்
மனச்சுமை மிகுந்தான்!

உறக்கம்
உள்ளேவர வசதியாக –
இமைக் கதவுகளைப் பூட்டாது
இருவிழிகளும் பூத்திருக்க;

கம்சன்
கட்டளைக்காகக் –
கண்களுக்கு வெளியே
கண்ணுறக்கம் காத்திருக்க;

அன்னணம்
அவன்
ஆணையிடாது
ஆயிரம் யோசனைகளுடன்...

சப்பிர மஞ்சத்தில்
சாய்ந்திருக்க;
கடும் பசியில் அவன் வயிறு
காய்ந்திருக்க;

தாதியர் நுழைந்தனர் – அவன்
தனியறைக்குள்...

வண்ணப் பொன்
வட்டில்களில் வாளிகளில் –

414







வகை
வகையான –

அடிசில்கள்;
அவியல்கள்;
துவட்டல்கள்;
துவையல்கள்;

மான்களின்
ஊன்கள்;
மறிகளின்
கறிகள்;

புறாக்கள்;
சுறாக்கள்;
இறால்கள்;
விரால்கள்;

மற்றும் –
மதுவகைகள்;
மதுவகைகளிலும்
புதுவகைகள்;

என
ஏராளமாய்த் – தமது
எழிலார்ந்த கரங்களில்
ஏந்திக் கொண்டு;

ஆனால்
அவன் –
ஆற்றவில்லை தன்பசியை
அவற்றை எடுத்து உண்டு!

'வேண்டாம் ஊண்;
விலகுக!' என்றான்;
வெளிறிய முகத்தோடு – மீண்டும்
வெறித்தபடி நின்றான்!

கொற்றவன்
கொண்டிருப்பது –
குடற்பசி யல்ல;
உடற்பசி என்று கருதி...

மங்கையர் வந்தனர்
மகிழ் வூட்ட; வீங்கிய
கொங்கையர் வந்தனர்
கொடிய விரகத்தை ஓட்ட!

அவர்களையும் –
'அகலுக!' என்றான்;
அலகை –
அன்றைந்தாற்போல் நின்றான்!

அதன் பின் – ஒருவாறு
ஆசுவாசப் படுத்திக்கொண்டு...

கண்ணாடி முன் நின்று – தன்
கல்லொத்த மேனியைப் பார்த்தான்;

பார்த்தவன்
பகீரென்று –
பயந்துபோய்
பாதாதி கேசம் வேர்த்தான்!

கண்ணாடி – அவனைக்
காட்டியது –
தலையற்ற முண்டமாக; கீழே –
தலைகிடந்தது துண்டமாக!

கண்களைக் –
கசக்கிக் கொண்டு...

அவன் மறுபடியும் – தன்னை
ஆடியில் பார்க்க;
அப்பவும்
அது –
அவனை முண்டமாய்க் காட்ட
அவன் ஆதி அந்தம் வேர்க்க;

கம்சனின்







காதுகளில் கேட்டது -
கலகலவென்று
கண்ணன் சிரிப்பொலி; தனது
கண்கள்
காணுமிட மெல்லாம்
கண்ணன்களாகக் கண்டு - கதி
கலங்கிப் போனான் சூரப்புலி!

இந்தப்புறம்;
அந்தப்புறம்; என
எந்தப்புறமும் மிச்சமின்றி
அந்தப்புரம் முழுமையும்...

பீலியும்;
பீதக ஆடையும்;
திவ்விய
திருவாபரணங்களும்;

சூடிக்கொண்டு; சேவடிசிவக்க -
ஆடிக்கொண்டு; செங்கையில் -
குழலோடும்; செவ்வாயில் -
குறுநகையோடும்;

அனேக கண்ணன்கள்
அங்கு காட்சிதர...
கம்சனுக்குக்
கலக்கம் கோபம் கலந்துவர...

கண்ணன்களை
கதாயுதத்தால் புடைக்க;
கண்ணன்கள்
காணாமற் போக...

அவன்
அடித்த அடி -
அந்தப் புரத்து
அழகுப் பொருள்களை உடைக்க;

கம்சன்
களைத்துப் போய் -
நிலா முற்றத்தில் - வந்து
நின்றுகொண்டான்; முழு
நிலாவை -
நாலைந்து துண்டாய்க் கண்டான்!

அவன் கண்முன்
அனேக -
துர்நிமித்தங்கள்
தோற்றின;
அனைத்தும் அவனை - உச்சமான
அச்சத்தில் ஏற்றின!

எண்ணெய் தேய்த்து - ஓர்
ஏரியில் ஆடல் போலவும்;
ஆடையின்றி அம்மணமாய்
அங்கிங்கு அலைதல் போலவும்;
எருக்க மாலையோடு - கழுதை மேல்
ஏறிவருவது போலவும்;
அழுகிய பிணத்தை -
ஆரத் தழுவுவது போலவும்;

தரையில் விழுந்த
தன் நிழலில் - நிறையத்
துவாரங்கள் ஆங்காங்கு
தோற்றுவது போலவும்;

கண்ணுறங்காமலே - அவன்
கனவுகள் காண நேர்ந்தது;
இமை மூடாமலேயே - அவனது
இரவுப் பொழுதும் தீர்ந்தது!

வான்
வெளுத்தது; அச்சத்திலவன் -
ஊன்
உளுத்தது!

(தொடரும்)




# சம்பந்தி



"உங்க மகளை பெண் பார்க்க வந்திருக்கோம்!"

''வேணாம்... அவளுக்கு வேற இடத்துல நிச்சயமாயிடுச்சு."

"சரி வந்தது வந்தோம்.. டிபன் சாப்பிட்டுட்டுப் போயிடறோமே..."

– கிஷ்கு

"மன்னர் என்ன கேட்கிறார்?"

" 'கோன்' ஐஸ்க்ரீம்!"

– லீலாஜி



# மன்னர்

# கிருஷ்ண விஜயம்

## கம்சவதம்.

**கா**லையிலிருந்தே – ஊர்
களைகட்டி நின்றது;

'வில் –
விழா'வை ஒட்டி...

அமைக்கப்பட்ட – மல்யுத்த
அரங்கை நோக்கி –
ஊர்ச்சனம் சாரிசாரியாக
ஊர்ந்து சென்றது!

பல்வகைப்
பூக்களால் –
தொடுக்கப் பெற்ற
தொடையல்களாலும்;

பளபளக்கும்
பட்டுத் தோரணங்களாலும்;

மணிமணியான
மாக் கோலங்களாலும்;
மங்கலத்தைச் சுட்டும்
மாவிலைக் கொத்துகளாலும்;

அழகுற
அலங்கரிக்கப்பட்ட –
அவ்
அரங்கின் கண்...

கம்சன் அமரக்
கனக அரியாசனம் –
நடு
நாயகமாய்ப்
போடப் பட்டிருந்தது; துகில் –
மூடப்பட்டிருந்தது!

அவ்
அரியாசனத்தைச் சுற்றி –
அமைச்சர்களும்; பிறநாட்டு
அரசர்களும்;

அவரவர்க்குரிய
ஆசனங்களில் வீற்றிருக்க;
அனைவர்
ஆனனங்களும் –
அளப்பரிய
ஆனந்தங்களை ஏற்றிருக்க;

பேரி; தூரி; முதலிய
பல்லியம் முழங்க;
கட்டியக்காரன்
கட்டியம் வழங்க;

படை வீரர்கள்
புடை சூழ;
இருபுறமும் – சாமரம் வீசும்
இடை சூழ;

காலை வெயில் பித்தமென்று
காவலன் தலைக்கு மேல் –

கவிஞர் **வாலி**










குற்றேவல் புரிவோர்
கொற்றக்
குடை கவிக்க;

வேந்தன் வரும்
வழி யெங்கும் –

பணிப்
பெண்டிர் –
நடைபாவடை விரித்தாற்போல்
நறுமலர்களைக் குவிக்க;





கம்பீரமாய்க்
கம்சன் வந்தான்;
அரியாசனத்தில்
அமர்ந்து – சிறு
அரசுகள் கப்பம் கட்ட
அனுமதி தந்தான்!

சிற்றரசுகள் தாம் கொணர்ந்த
சீர்வரிசைகளை...





காவலன்
கம்சனின் –
காலடியில்
காணிக்கையாய்ச் சேர்த்தன;
அவ்
அமயம் –
அனேக வாத்தியங்கள்
அட்டதிக் கதிர ஆர்த்தன!

யாதவப் பிரமுகர்கள் –
யாவரோடும் வந்து...





நந்தகோபனும் – கம்சனை
நமஸ்கரித்தான்;
நந்தகோபன்
நல்கிய கப்பத்தைக் கண்டு...

மன்னவன் கம்சன் – தன்

மகிழ்வைக் காட்டும் வகையில் –
முரட்டு முகத்தில் – சிறிய
முறுவலை மெல்ல விரித்தான்!

அவரவர் இருக்கைகளில் –
அவரவர் அமர...
கம்சன்
கட்டளை யிட்டான்
மல்யுத்தம் தொடங்க; கூடவே –
மக்களின் கூச்சலும் அடங்க!

சாணூரன்;
முஷ்டிகன்;
சலன்;
தோசலன்;

ஆகிய புகழ் மிக்க மல்லர்
அரங்கு ஏறினர்;
அவரவர் குருவை –
அவரவர் கும்பிட்டுவிட்டு...

இருவர்
இருவராய்த் –
தொடை தட்டித்
தோள் தட்டிச் சீறினர்!

நடுவர் –
நாட்டின் கொடியை அசைத்ததும்...

ஒருவரை
ஒருவர்
ஒட்டினர்;
ஒட்டிப்பின் எட்டினர்; பின் –

ஒருசேரக் கட்டினர்;
ஒருவரை ஒருவர் முட்டினர்;
ஒருவரை
ஒருவர் –
நிலங்கிடத்த விரும்பி
நீள்கரத்தால் நெட்டினர்;

அவையோர்
ஆரவாரித்துக் –



கைகளைக்
கொட்டினர்!

இது –
இப்படியிருக்கையில்...

கண்ணனும் – அவன்
அண்ணனும் – அரங்கின்
வாசலுக்கு
வந்ததும்...



420



அவர்களை உள்ளே
அனுமதிக்காமல் –
'அம்பஷ்டன்' என்னும்
ஆனைப்பாகன் தடுத்தான்;

அன்னணம்
அவன் –
மறித்தது
மட்டுமன்றி...

அவர்களை
அடித்து நொறுக்கச் சொல்லி –
அவன்
ஆனையின் துதிக்கையில்...

எஃகாலான உலக்கையை
எடுத்துக் கொடுத்தான்!

ஆயிரம் ஆனைகளின் பலம்
அமைந்தது...

'குவலயாபீடம்' எனும் – அந்தக்

குஞ்சரம்;
அரசன் கம்சனின்
ஆணைப்படி – மாவுத்தன்
அங்குசத்தால் குத்தி
அதற்கு ஏற்றினான் வெஞ்
சினம்!

வெறி ஏறிய – அவ்
வாரணம்...

துதிக்கை உலக்கையைத்
தூக்கி வீசியது கண்ணன்
மேல்;
முன்னம்
முதலையிடமிருந்து – ஓர்
ஆனையை மீட்ட
அவ் அம்புயக் கண்ணன்மேல்!

வாசுதேவன் – மெல்ல
விலகிக் கொள்ள – ஆனை
வீசிய உலக்கை
வெகுதூரம் போய் விழுந்தது;
மத்த வாரணத்திற்கு –
மதம் மேலும் எழுந்தது!

கண்ணனைத் துதிக்கையால் – அது
கவ்வியது; பின் –
கண்ணபிரானைக் –
கீழே எறிந்து –
காலால் மிதிக்க – அவன் மேல்
கடுஞ்சினத்தோடு தவ்வியது!

ஆனையில் காலில்
அகப் படாமல் –
புரண்டான் கண்ணன்;
புயல் வண்ணன்!

பொறுத்தது போதும் – எனப்
பொங்கினான் அய்யன்;
எஞ்ஞான்றும்
ஏழிசையை வார்க்கும் –

ஏரார்ந்த புல்லாங்குழலை



ஏந்துகின்ற கையன்!

வாரணத்தின்
வாலைப் பற்றிச் சுழற்றினான்;

கோளரி போல்
கோபம் கொண்டு – அதன்
தாடையில் அறைந்து – இரு
தந்தங்களையும் கழற்றினான்!

பொருப்பு அனைய
பொல்லா ஆனையை – அதன்
மருப்பு கொண்டே – அடித்து
மாய்த்தான்;

பிளிறப்
பிளிற – அப்
பிள்ளுவத்தைப்
புண்ணீர்ப் புனலில் தோய்த்தான்!

அதன்பின் – அவ்
ஆனைத் தந்தங்களைத்
தன் திருத்தோள்களில்
தாங்கிய வண்ணம்...

பலராமன்
பின் வர –
மல்யுத்த அரங்கினுள் –
மாதவன் புகுந்தான்;
மார்பிலும் மணித்தோளிலும்
மதர்ப்பு மிகுந்தான்!

கண்ணனும் –
கம்சனும் –

முதன்முதலாக – அங்கேதான்
முகத்துக்கு முகம் கண்டனர்;

இருவருமே
இதயத்துள் –
இன்னதென்று
இனம் புரியாத...

உறவின் பாற்பட்ட – ஒருவகை
உணர்வினைக் கொண்டனர்!

மாமன்;
மருமகன்;
உறவு
உள்ளோடியது;
ஓடிய வேகத்திலேயே – அது
ஓய்ந்து கண்ணை மூடியது!

கண்ணனைக் கண்ணுற்றதும் –
கம்சன்...
முனிவு – மிகவும்
முற்றிப் போய்க் கூவினான்;
மாயவனோடு பொருத
மல்லர்களை ஏவினான்!

சாணூரன் என்பவன்
சவால் விடுவது போல்...

துவசத்தம்பம் போன்ற – தன்
துடைகளில் –
ஓங்கி அறைந்து
ஓதக்கடல் வண்ணனை –

அரங்கேறி வருமாறு
அழைத்தான் மல்லுக்கு;
ஒப்பிலாப் பெருமான்
ஒப்பினான் அவன் சொல்லுக்கு!

எம்பிரான்
எம்பியே –

ஏறினான் மேடை; இடுப்பில் –
ஏற்றிக் கட்டினான் ஆடை;
'சின்னப் பையன்; இவனொரு
சோடை!' எனச்
சாணூரன் எகத்தாளமாய்ச்
சொறிந்துகொண்டான் தன் தாடை!

அரங்கின் கண்
அமர்ந்தோரில் –
பாதிமக்கள் வியந்தனர்;
பாதிமக்கள் பயந்தனர்!

'சாணூரன்
சாதாரணமானவன் அல்ல;
துப்புக்கடல் சூழ் உலகில் –
துலாக்கோல் ஒன்றில்லை...
அவனது
அடலை –
ஆற்றலை
அளந்து சொல்ல!

அவன்
ஆறடி உயரத்தில் –
என்பு தோல் போர்த்தி
எழுந்துலவும் பருவதம்;

பல மல்லர்களைப்
பந்தயத்தில் மல்லாத்தி – அப்
பருவதம்
பண்ணியுள்ளது படுவதம்!

சாணூரன் தன்னோடு
சமர் புரிவோன் – தக்கணமே
சாவூரன் ஆவான்;
சவமாகிப் போவான்!

இந் நிலையில்
இந்த நீலநிறப் பிள்ளை –
என் செய்யும்? சாணூரன் கை
எளிதாய் இதனுயிர் கொய்யும்!'

என்று
ஏக பச்சாத்தாபத்தோடு...

கண்ணனைக்
கணித்தது கூட்டம்;
கூட்டத்தின் கணிப்பு - வெறும்
கூளமென்றாக...

கண்ணன் சாணூரனைக் -
கசக்கிச் சாறு பிழிய -
முடிந்தது நொடியில் - அவன்
மூச்சுக் காற்றின் ஓட்டம்!

கம்சன்
கொதித்துப் போனான்;
குறி நெறி அற்றுக்
கூச்சல் போட லானான்!

'நந்தகோபனையும் - அவன்
நாயகியையும் -
சிறை செய்யுங்கள்; பின் அவர்
சிரம் கொய்யுங்கள்!'

கம்சன்
கட்டளையைக் -
காவலர் நிறைவேற்றக்
கருதுகையில்...

வக்கிரம் பிடித்தவனை - இனும்
விட்டுவைத்தல் பிழையென்று -
உக்கிரம் பெருமளவு
உச்சத்திற்கு ஏற -

கம்சன் மேல்
கண்ணன் பாய்ந்தான்;
பொற்றவிசிலிருந்து
பொல்லாத மாமன் சாய்ந்தான்;
அவையோர் பார்க்க
அவமானத்தில் தோய்ந்தான்;
வடவைக் கனலென
விழியிரண்டும் காய்ந்தான்!

கண்ணனைக்
கடிய -
கம்சன் தனது



கைகளிலே -

வாங்கினான்
வாளை;
தரை விரிப்பு
தடுக்கியது அவன் தாளை!

மகுடம் உருண்டது; கீழே -
மன்னனும் உருண்டான்;
மரண பயம்
மேலிட்டுப் போய் வெருண்டான்!

நீல நிறத்து பாலகன் - அந்த
நீசனின்...

மார்பில் குதித்தான்;
மறலியாய் உதித்தான்;
வன்கணாளன் உயிரை -
விலகென விதித்தான்!

கம்சன் - உயிர்க்
கணக்குத் தீர்ந்தான்;
கனவிலும்
நனவிலும்
கண்ணனையே எண்ணிக் கிடந்த
காரணத்தால்...

வையவாழ்வு நீத்து - கம்சன்
வைகுந்தம் சேர்ந்தான்!

(தொடரும்)

424

# கிருஷ்ண விஜயம்

54 கவிஞர் **வாலி**

## தாய்; தாதை; தாத்தா!

மமகாரம் அகங்காரம் மேவி -
மதுராபுரியில்...

அரியணை
அமர்ந்திருந்த -
அரக்க குணத்து
அரசு -

கொண்டல் வண்ணனால்;
கோகுலக் கண்ணனால்;
கொலையுண்டதைச் சொல்லிக்
கொட்டியது முரசு...

எஞ்ஞான்றும்



426

எண்டிசையிலும் – ஓர்
எல்லையெனும் ஈறு
இல்லையெனும் பேறு –

ஏற்று – உலவுகின்ற
காற்று!

கம்சனைக்
கண்ணபிரான்...

கடிந்த
கற்கண்டுத் தகவலை – காற்று
ககனத்தின்
காதுகளுக்குத் தந்ததும்...

விகசித்து நின்றது – அவ்
விசும்புத் தோட்டம்; ஆங்கு –
விரிஞ்சன்;
விடகண்டன்;
வித்தியாதரர்; மற்றுமுள
விண்ணோர் என்று வேணகூட்டம்!

'சலமிசை படுத்திருக்கும்
சருவஞ்ஞனான பரமேட்டி –
நிலமிசை இறங்கிய நோக்கம்
நிறைவேறியது இனிதாய்!' என்று...

அமரரெலாம்
ஆர்ப்பரித்தனர் –
அங்கங்கு
ஆகாய வெளியினில் நின்று!

'கோவிந்தா!' எனக்
கோஷ்டியாய்க் கூவினர்;
துந்துபி முழக்கித்
தூமலர்களைத் தூவினர்!

கண்ணனாய் நிற்கும்
கரிய நெடுமாலை நினைந்து...

'வீழ்ந்தது மறம்;
வாழ்ந்தது அறம்;
வாழிய! வாழிய! எங்கள் –
வாசுதேவன் திறம்!'

எனப் போற்றினர்; பல்லாண்டு –
எம்பிரானுக்குச் சாற்றினர்!

நாரதர் – மகதியாழின்
நரம்புகளை – மெல்லத் தடவி...

திருவெட்டெழுத்தைத்
திதிக்கத் திதிக்கப் பாடினார்;
அரம்பை உருப்பசி
ஆகிய உம்பர் குலத்து –
ஆரணங்குகள் அதற்கேற்ப
அபிநயித்து ஆடினார்!

இமையோர் மகிழ்ச்சி –
இன்னணம் இருக்க...

மதுராபுரியோ
மட்டற்ற பூரிப்பில் –

மழைகண்ட
மயூரம் ஆனது;
பாட்டும் கூத்துமாய் – ஊரே
புழுதிப் புயலாகிப் போனது;

உலைவு ஒழிய; விழிகளில்
உவகை வழிய; வீங்கிய
மதமதப்பில் இருந்தனர்
மக்கள்;
மன்பதையின் – அம்
மதர்ப்பை அளந்து –
சொல்லப் பஞ்சமானது
சொற்கள்!



மாக்கோலம்;
பூக்கோலம்; என –
வீடுகள் தோறும்
விழாக் கோலம்;

அற்றது
அதுகாறும் –
அவ் வீடுகளை
அப்பியிருந்த அலங்கோலம்!

கம்சன்
காலத்தில்...

தலைநகரை விட்டுத்
தலைமறைவான தருமம் –

கம்சன்
காலமான பின்...

தலைநகருக்குள் திரும்பத்
தலை நீட்டியது;
சத்தியம் என்னும்
சாணைக் கல்லில் – அது
மழுங்கிய தன் கூரை
மறுபடியும் தீட்டியது;

வாயடைத்துக்கிடந்த
வேத பாடசாலையில்
சுருதி – மீண்டும்
சுருதி கூட்டியது;

தன் துவசத்தை
உபநிடதமும் – அங்கு
உயர்த்தி நாட்டியது;

வாடிய பயிரினம் – அறத்தின்
வருகையால்...

புதிதாய்ப்
பூத்துத் – தனது

பசிய நிறத்தால் – வாழ்த்துப்
பாவொன்று எழுதிக் காட்டியது;

மொட்டை
மரங்களுக்குப் –
புது இளவேனில் வந்து
பூக்களைச் சூட்டியது;

வீட்டுளேயே
வெருவிக் கிடந்த –
வஞ்சியர்
வளைக்கர மெலாம்...

புத்தரிசிப்
பொங்கல் வைக்க –
அடுப்பில்
அனல் மூட்டியது;
அரக்கனின்
அழிவு –
அவர்களது அச்சத்தை
அறவே ஓட்டியது;
சுருங்கச்
சொன்னால்...



கம்சனைக்
கண்ணன் வீட்டியது -
காசினிக்கே
களிப்பை ஊட்டியது!

ஆனால் -
அது களிப்பல்ல; கேடென்று
அழுதழுது கேளிர் சிலர் -
ஆக்கை நனைந்தனர்;
அவரெலாம் கண்ணபிரானை -
அழிக்க முனைந்தனர்!

தருக்கும் செருக்கும் மிக்க
தாய்மாமனை;
நொடிக்கு நொடி சாவுக்கஞ்சிய
நோய் மாமனை;
அன்பு மருகனைக் கொல்வழியை
ஆய்மாமனை;
கண்விழி கத்தரிவெயிலாய்க்
காய்மாமனை;
சந்ததமும் சதிச் சேற்றில்
சாய் மாமனை;
வாழ்வுக்கூரை பாவக்கீற்றால்
வேய் மாமனை;
புண்ணீர் வெறிபிடித்தலையும்
பேய் மாமனை;
எல்லாவித துர்குணங்களும்
ஏய் மாமனை;
தோமிழைக்கும் நினைவுகளிலேயே
தோய்மாமனை;
தினம் தினம் தன்குலப்பேர்
தேய் மாமனை;
நாகமெனும் நரகல்பேணும்
நாய் மாமனை;
ஒரு பிழையேனும் நாளும் செய்து
ஓய்மாமனை;
வெப்பு வார்த்தை துப்பும்காள
வாய்மாமனை;
பரம்பொருளின் பேர் சொன்னால்
பாய்மாமனை;
மேய்ப்பனை 'சாய்ப்பன்' என்று
மேய்மாமனை;

மாய்மாலங்கள் செய்து செய்து
மாய்மாமனை; 428

கம்சனை; போஜ
வம்சனை;
அல்லவை அனைத்தின் - மொத்த
அம்சனை;

கோவிந்தன்
கொன்றது கண்டு;

மாமன் உயிரை
மருகனே உருவி -
ஏமன் கையில்
எடுத்துக் கொடுத்து...

நிட்டூரமாய் - ஆர்த்து
நின்றது கண்டு;

கம்சன் பால்
காதல் பூத்த - அவனது
கூடப்பிறந்த எட்டுப்பேர்
கூக்குரல் இட்டனர்;

கட்டுத் தறியின்
கட்டுத் தெறிக்கக் -
கன்னமதம் வடிய வடியக்
கிளம்பும் வாரணங்கள் போல்...

புல்லாங்குழல் வேந்தைப்
பூழ்திசெயப் புறப் பட்டனர்!

தம்பியைத்
தாக்கக் - கம்சன்
தம்பியர்
தலைப்பட்டதும்...

பலராமன்
பால்முகம் கடுத்தான்;

புற்றரவு - வெளிப்
போந்தாற்போல் சிடுசிடுத்தான்;

'பரிகம்' என்னும்
பளபளக்கும் -
இருப்பாயுதத்தை
இடக்கரத்தில் எடுத்தான்;

ஒற்றையாய் நின்று – அவ்
ஓரெட்டுப் பேரைத் தடுத்தான்;
வந்து மோதிய
வன்கணாளர்க்கு –
வைய வாழ்விலிருந்து
விடுதலை கொடுத்தான்!

அதன்பின் –
அரசும் அரண்மனையும்...

கண்ணன்
கைக்கு வந்தன;
நால்வகைச் சேனையும்
நந்தகுமாரனுக்கு –
விசுவாசமா யிருப்பதாய்
வாக்குறுதி தந்தன!

அதன்பின் கண்ணன் – தன்
அண்ணனைக் கூட்டிக்கொண்டு...

வசுதேவர் தேவகியை
விலங்கிட்டு வைத்திருக்கும் –
சிறைச் சாலைக்குச்
சென்றான்;
விலங்குகளை நீக்கி – அவர்களை
விடுவித்து நின்றான்!

முதன்
முதலாகக் –
கண்ணனைக்
கண்ணெதிரில் கண்டதும்...

வசுதேவர் தேவகி விழிகளில்
வியப்பு மின்னல்கள் வெட்டின;

களிப்பும்
கலக்கமும் – ஒருவகைக்
கலவையாகி – அவர்களைக்
கருத்தழியச் செய்ய...

அத்தகு
அவச நிலையில் –
அவர்தம் நாவிரண்டும் – மேல்
அண்ணங்களில் ஒட்டின;

வாய்விட்டு
வெளியே வர –
முடியாமல் – வார்த்தைகளுக்கு
மூச்சு முட்டின;

இத்துணை காலங்கள்
இருவரும் கண்களுக்குள்...

கரந்து வைத்த
கண்ணீ ரெல்லாம் –
சுரந்து சுரந்து
சுடச்சுட இமைகளில் சொட்டின!

வசுதேவர் – கண்ணனின்
வனப்பைக் கண்டார்;



கூடையில் வைத்துக்
கூதல் வீசுகையில் –
அடைமழை அடிக்க
அரவம் குடை பிடிக்க –

யமுனை
யாற்றைக் கடந்து –

அந்தகாரம் மிக்க
அர்த்த ராத்திரியில் –
ஆயர்பாடியில்
அசோதை பக்கலில் விட்டபிள்ளை...

இன்று
இளங்கன்றாக எதிர் நிற்க –
அமுதம் அமுதம் என – அவ்

அழகினைக் கண்ணால் உண்டார்!

சங்கு
சக்கரத்துடன் –
தன் கருப்பை வழி
தரையிறங்கிய கரியமால்தான்...

கண்முன்
கண்ணனாய் நிற்கிறான் என்று –
கூப்பினாள் கரம்; தேவகி –
குனித்தாள் சிரம்!

தன்
தாயும் தந்தையும் –
தன்னைத்
தொழுவது தகவல்ல என்று –

கண்ணன்
கருதி –
அவர்களை மாயையில்
ஆழ்த்த...

'மகனே!
மகனே!' என்று...

இருவரும்
இரு பிள்ளைகளையும்
இறுகத் தழுவினர்; தம்
இருவிழி நீரால் கழுவினர்!

அவர்களை
ஆசுவாசப் படுத்திவிட்டு...

கண்ணன்
கம்சனின் தந்தை –
உக்கிரசேனரை
உள்ளே வைத்திருக்கும் –

சிறைக்குச்
சென்றான்;
பாட்டனை மீட்டு – அவர்முன்
பவ்வியமாய் நின்றான்!

உக்கிரசேனர் கண்களில்
உதகம் வழிந்தது;
பேரன்மேல் அவர்மனம்
பாசத்தைப் பொழிந்தது! ௪30

கண்ணன் அவரது
கண்ணீரை ஆள்காட்டி விரலால் –
வழித்து வீசினான்;
வீசிப்பின் பேசினான்!

'பாட்டனாரே! தங்கள்
பாசமுள்ள தனயனை...

நான் கொன்றது குறித்து
நைய வேண்டாம்; புத்திர –
வாஞ்சையினால் என்னை நீர்
வைய வேண்டாம்!

அவன் விதி
அன்னணம் ஆனது; அவனது –
மறச் செயல்களே
மறலியாய் வந்து –
அவனை
அள்ளிக்கொண்டு போனது!

இனி –
இந்த –
மாண்புமிகு
மதுராபுரியின் –

அரியணையில் – தாங்கள்
அமர்ந்து ஆளவேண்டும்;

குறுகிப்போன – போஜ
குலத்தின் புகழ்ச் சரிதம் –
தங்களால் மீண்டும்
தலையெடுத்து நீளவேண்டும்!'

பாட்டனார் ஏற்கவில்லை –
பேரன் பேச்சை;

'மகனை இழந்து – எனக்கு
மகுடமா?' என்பதை –
உணர்த்தும் விதமாக
உக்கிரசேனர் –
வெளித் தள்ளினார் ஒரு
வெப்ப மூச்சை!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

55 கவிஞர் **வாலி**

## குருகுல வாசம்.

**க**ண்ணன்
கண்டுகொண்டான்...

உக்கிரசேனரின்
உள்ளக் கிடக்கையை;
பரிவோடு பற்றினான் – மெல்லப்
பாட்டனார் தமது தடக்கையை!

'அய்யனே! உங்கள்
அவலம் புரிகிறது;
மகன்
மரித்ததில்...

விசனமும்
விரக்தியும் – உங்கள்
விழி வழி
வழிவது தெரிகிறது!

தோளிலும் மார்பிலும் –
தூக்கி வளர்த்த...

மகன் –
மத்தனாயிருப்பான்; ஊர் –
தூற்றுமளவு
துத்தனாயிருப்பான்; வாய்மை –



5-9-04



எட்டுணையுமில்லா
எத்தனாயிருப்பான்; வெவ்வேறு
சாலங்கள் புரியும்
சித்தனாயிருப்பான்; ஆயினும்...

அவனுக்கு
அத்தனாயிருப்பான் – ஆரோ அவன்
பிள்ளைமேல்
பித்தனாயிருப்பான்!

அறவே
அற்றுப்போகாது பந்தபாசம்;
தழைத்ததனால் வந்த பாசம்!

ஆனால் –
அதே நேரத்தில்...

தந்தை
விந்தை – அதிலிருந்து
விளைந்த மகன் – நினையாது
விடுவதுதான் விந்தை!

அய்யனே! நம் –
அங்கங்களில் ஏதேனும் ஒன்று...

அழுகிப் போகுமாயின்

விஷ
விருட்சமாயினும் –
விடாது
வேருக்கு...

தன்னிலிருந்து – அத்தரு
அதனைப் பொறுக்காது –
அரிந்து போக்குகின்ற
அச்செயலைப் போல்தான் –

உங்களிலிருந்து
உங்கள் மகனை –



5-9-04

436

நீக்க
நேர்ந்தது;
அச்செயலைப் புரிய
அறம் என்னைத் தேர்ந்தது!

[illegible]வுப்போது ஏற்படுகின்ற –
அவலங்களால்...
[illegible]ங்களைப் போன்றோர்
[illegible]பித்தல் பொருந்தாது;

இழப்புகளும்
இவ்வாழ்வின் ஒரு பகுதி – எனும்
இயற்கை நியதியை எண்ணி
இ[illegible]ங்குங்கள் வருந்தாது!

[illegible]ாமக்கள்
[illegible]கள் மக்கள் – என்பதை
[illegible]ான வேண்டும்
[illegible]ங்கள் சிந்தை;

[illegible]ங்கள் கம்சனுக்கு மட்டுமா
[illegible]ந்தை?

அன்னணம் கருதி – தாங்கள்
அரியணை ஏற மறுத்தால் –
வந்து சேராதா – போஜ
வம்சத்திற்குப் பெரும் நிந்தை?

யானோ – எனையொத்த
யாதவ குலத்தாரோ –
யாருமே அரசாள முடியாது – என
யயாதி அளித்த சாபம்...

உங்களுக்கும் தெரியும்;
ஊரவர்க்கும் புரியும்;
எனவே
என் வேண்டுகோளை ஏற்று...

மதுராபுரியின்
மன்னவனாகத் – தாங்கள்
மகுடம் சூட்டிக்கொண்டால்
மறுபடியும் –

[illegible]மன்பதை முகமெலாம்
மலர்ச்சியால் விரியும்!'

இன்னணம் பேரன் செப்பினான்;
இறுதியில் பாட்டன் ஒப்பினான்!

அமர – ஓர்
அரசு இல்லாமல் – அரியணை
அரை விநாடிகூட இருத்தல்
ஆகாது என்ற வழக்கப்படி...

உக்கிரசேனர்
உட்கார்ந்தார் –
மதுராபுரி
மயிலாசனத்தில் –

முறையாகப் பட்டாபிஷேகம்
முடித்து; அந்த –
வைபவத்தில்
வாசுதேவன் நின்றான் –
வேந்தனான பாட்டனுக்கு
வெண்கொற்றக் குடை பிடித்து!

சங்கிரகமாகவும்;
சாஸ்திரோக்தமாகவும்;
விழாவை முடித்த கையோடு
வாசுதேவன் பலராமனோடு...

நந்தகோபன் இருக்குமிடம்
நாடிச் சென்று –

தந்தையை வணங்கினான்
தாள் தொட்டு; தந்தை
தனயனைத் தூக்கினான்
தோள் தொட்டு!

பிறகு – அதிகப்
பீடிகை யில்லாமல்...

கோபாலன் – தான்
கோகுலம் வந்த தகவல்களை –
சொல்லச்
சொல்ல –

வியப்பில்
விழிகள் விரிய; அவ்
விழிகள் வெப்பத்தில்
வியர்வை சொரிய; நந்தனின் –



5-9-04

புருவங்கள் ஏறின – நெற்றிப்
பொட்டுக்கு மெல்ல மெல்ல!

'தந்தையே! நான் தரும்
தகவல்கள் – உங்களைத்
திடுக்கிட வைக்கும்; செவியில்
திதிக்காமல் கைக்கும்!

உலக
வழக்கில்...

தோன்றுவது ஓரிடம்;
ஊன்றுவது ஓரிடம்;
என நாற்றுக்கு –
ஏற்பட்டது ஈரிடம்!

நானும் – ஒரு
நாற்று; இந்த
நிஜம் – இதுகாறும்
நீங்கள் அறியாத கூற்று!

நான் –
நந்தர்கள் நாயகனான...

உங்களுக்கும் – அன்பே
உருவான அசோதைத் தாய்க்கும் –
சனித்த
சிசுவல்ல;

கொட்டும் மழையில் – கோகுலம்
கொண்டு வரப்பட்ட காரணம் –
காத்திருந்தான் தாய்மாமன்
கம்சன் எனது சிரம் கல்ல!

தேவகி – என்
தாய்; வசு
தேவர் – என்
தந்தை; அவ்

இருவரோடும்
இமைப்பொழுதுக்குமேல் – நான்
வாழாது – கோகுலம்
வந்ததுதான் விந்தை!

இந்த உண்மையை –
இன்று உரைத்தேனே தவிர...

எந்தையே!
என்றும் உங்கள் பிள்ளை நான்;

அம்மா
அசோதையின் –
தோள்களில்
தொத்திக்கொள்ளும் கிள்ளை நான்!

பெற்றவர்கள் மட்டுமா
பெற்றவர்கள்? நீங்களும் –
பெற்றவர்களிடமிருந்து – எனைப்
பெற்றவர்கள்!



அன்பார்ந்த
அத்தனே!
என் வேண்டுகோள் –
என்ன வென்றால்...

கம்சன்
காலமாகிவிட்டதால் –
பிருந்தாவனம் விட்டுப்
பழையபடி –

அம்மாவும் நீங்களும்
ஆயர்பாடிக்கே செல்லுங்கள்;

இங்கு – சில நாள்கள்
இருந்து விட்டுப் – பிறகு
அங்கு வருவேன் என்று
அம்மாவிற்குச் சொல்லுங்கள்!



உங்கள் அன்பு – என்
உள்ளம் விட்டு அகலாது;

ஒரு நாளைக்கு
ஓராயிரம் பொய் சொன்ன –
ஒருவன்தான் எனினும் – இவ்
ஒரு விஷயத்தில் என் வாய்...

பொய் –
புகலவே புகலாது!

சுருங்கச்
சொன்னால்...

மதுராபுரி
மாளிகையில் நான்;
என் உள்ளமோ
என்றும் ஆயர்பாடியில்தான்!

வருவேன்
விரைவில் கோகுலம்;
விடுங்கள் –
வேண்டாம் வியாகுலம்!'

கண்ணன் இவ்வாறு சொன்னதும்
கதறியழாத குறையாக...

நந்தகோபன் புலம்பி
நலிந்தான்;

கண்ணன் – தன்
கன்று அல்ல என்றறிந்து –
மெய் மின்னல் வேகத்தில்
மெலிந்தான்!

அதையே
அவன் –

கருதிக்
கருதிக்
கவன்றான்; பின்
கம்மிய குரலில் நுவன்றான்!

"மகனே! என்
மனம் தாங்குமா – நீ
சொன்ன
சேதியை?
அதைக் கேட்கையிலேயே இழந்தேன் –
ஆவி பாதியை!

எங்கள் கண்ணன்
எங்கள் கண்ணனல்ல என்பதை –
எவ்வாறு
எங்களால் சீரணிக்க ஏலும்?

ஒரே சமயத்தில்
ஒருசேரப் பாய்ந்ததே –
என் உள்ளத்தில்
எறியீட்டியும் வாளும் வேலும்!

அசோதையை
ஆரால் தேற்ற முடியும்?

கண்ணா! அவளது
கண்ணீர்ப் பெருக்கு – உன்
வருகையலால்
வேறெதனால் வடியும்?

'பெற்றால்தான் பிள்ளையா?
பெறாவிட்டால் இல்லையா?'

என்று –
எங்களை நாங்களே –
சமாதானம்
செய்துகொள்வதைத் தவிர...

வேறு
வழியில்லை;

அதிகம்
அழுவதற்கு – எங்கள்
இருவருக்கும் – ஆளாளுக்கு
இரண்டுக்குமேல் விழியில்லை!"

தந்தையைக் கண்ணன்
தேற்றினான்;

புரவிகள்
பூட்டிய –
ஏரார்ந்த தேரில்
ஏற்றினான்!



5-9-04

நந்தகோபனோடு – மதுரா
நகருக்கு வந்திருந்த...

ஆயர்களுக்கெல்லாம்
ஆடைகள் அணிகள் கொடுத்து –
அனுப்பிவைத்தான் கண்ணன்;
அருள் பிலிற்றும் கண்ணன்!

கண்ணனுக்கு பலராமனுக்கு –
கல்வி பயிற்றுவிக்க...

தக்க குருவை வசுதேவர்
தேடிக்கொண்டிருக்கையில் –
அவர் கவனத்தில் வந்தார்
அவந்தி நகரில் வாழுகின்ற –

'சாந்தீபினி' முனிவர்; அவர்
சகல முனிவர்க்கும் முனிவர்;

ஆன்றமைந்த
அனேக மகான்களும் –
அவர் தகவு கருதி
அவருக்கு முன் தலைகுனிவர்!

சாந்தீபினி – ஒரு
சதுர்வேதி;
உபநிடதங்களின்
உள்ளீடுகளை –
விரித்துரைப்பதில்
வியாசரில் பாதி;
அவரால்
அய்யம் திரிபு இன்றி –
மனனம் செய்யப்பட்டது
மனுநீதி;

அவரது
ஆனனம் காட்டும் –
அளப்பரும்
அறிவுச் சோதி!

அறுபத்துநான்கு கலைகளையும் –
அரச குடும்பத்தினர்க்கு...

அவர்தான்
ஆதிஅந்தம் –
பிழையறப்
பயிற்றுவித்தவர்; இன்று –

விருட்சமாய்
விளைந்து நிற்கும் – பல
வேந்துகளின்
வித்தகத்திற்கு வித்தவர்!

வசுதேவர் – அவரிடம்
விட்டார்...

கண்ணனையும்; அவன்
அண்ணனையும்; அரிய
கலையும் கல்வியும்
கற்க;
கசடறக்
கற்றுக் –
கற்றபின்
கற்றதற்கேற்ப நிற்க!

ஆர் கண்ணன்?
ஆர் கண்ணனின் அண்ணன்? என –
ஆரம்பத்திலேயே
அறிந்துகொண்ட முனிவர்...

'கல்விக்குக்
கல்வி கற்பிப்பதா?' என –
எண்ணினார்; எனினும்
ஏற்ற பணியைப் பண்ணினார்!

குருகுல வாசம் –
குறைவற முடிந்ததும்...

'குருதேவா! என்ன –
குருதட்சிணை?' என்று –
பணிவுடன்
பிரார்த்தித்தான் கண்ணன்;

ஆசாரியரான முனிவர் –
அதனை மொழிந்ததும்...

'என்னணம் – அது
ஏலும்?' – என
எண்ணினான் கணநேரம் – அந்த
ஏமாம்புஜக் கண்ணன்!



(தொடரும்)




## மகனை – மீட்டுத் தா!

பகல் வண்ணனான
பலராமனுக்கும்;
இருள் வண்ணனான – அவனது
இளவல் பரந்தாமனுக்கும்;

ஆயகலைகள்
அனைத்தையும் –
அறிவித்த
ஆசிரியப் பிரான்...

சாந்தீபினி முனிவர் – ஒரு
சன்னியாசி யல்ல; சமுசாரி;
அவருக்கு
அமைந்த –
அகமுடையாள்
அப்பழுக்கற்ற அன்புவாரி!

அரிய குணங்கள்
அனைத்தும் கொண்டு –
அருந்ததி வரிசையில்
அமரத்தக்க பெண்டு;
அவள்
அறிந்த –
அதிகப்பட்ச கல்வி
ஆளன் தொண்டு;
மாமுனி
மாலையிட்ட – அந்த
மானினி – அவருக்கு
மற்றொரு முதுகுத் தண்டு!

துறவினும்
தூயதாம் என –
இருவரும்

இல்லறம் ஏற்றனர்;
இரவு பகல் – அதையோர்
இனிய நோன்பாய் நோற்றனர்!

காலா
காலத்தில்...

அவர்களுக்கு – ஓர்
அழகிய மகன் பிறந்தான்;
கல்வியைக் கலையைக்
கசடறக் கற்றுச் சிறந்தான்!

மூக்கும்
முழியுமாக –
வளர்ந்து
வனப்புமிகு வாலிபனானான்;

ஒருவரும்
ஓவியத்தில் – எழுத
ஒண்ணாத அவ் அழகன்
ஒருநாள்...

பிரபாஸ க்ஷேத்திரத்தில்
பிறங்குகின்ற சாகரத்தில் –
குதுகலமாய்க்
குடைந்தாடச் சென்றவன் –

இமிழ் கடலுக்கு
இரையாகிப் போனான்!

சாந்தீபினியும் – அவரது
சகதர்மிணியும் –

புத்திர சோகத்தில்



12-9-04

புலம்பித் தீர்த்தனர்;
விழி வழி
வெந்நீரை வார்த்தனர்!

கண்ணீர் வற்றிக் – கண்வழி
புண்ணீர் வெளிப் போந்தது;

மரித்தவன்
மரித்தவனாக –
மகன் பற்றிய நினைவு மட்டுமே
மனத்துள் மீந்தது!

முத்துக் கடலில்
முழுகி –
மரணித்த அந்த
மகனை –

உயிரொடு திரும்ப
உதவ வேண்டும் என்பதைத்தான்...

கற்பித்த
கல்விக்குக் –

காணிக்கையாகக்
கண்ணனிடம் கேட்டார் –

குல
குரு;
'என்னணம் அது சாத்தியம்?'
என – சற்றுக்
குழம்பி நின்றான்
குழலூதும் கற்பகத் தரு!

'சீவித்த நாள்களில்
சிறந்தாரே எனினும்;
அங்ஙனம்
அன்றி –
அறம் தனது
ஆட்காட்டி விரலால் சுட்டும்...

மாண்புகளை ஏற்றொழுக
மறந்தாரே எனினும்;

ஓதம்சூழ் உலகில் –
ஒருவர்...



இறந்தார் எனில்
இறந்தாரே; இன்னுயிரைத் –
துறந்தார் எனில்
துறந்தாரே;

இந்த
இயற்கை நியதியை –
நமக்கு
நான் மறையைக் கற்பித்த
மகாமுனிவர்
மறந்தாரே!'

எனக் கண்ணன்
எண்ணுங்கால்;
பதிலிறுக்காமல் யோசனை
பண்ணுங்கால்;

வித்தியார்த்தியான
வாசுதேவனின் –
விழிகளில் தயக்கம்
விளைவது தெரிந்து...

தனது
திருவாய் மலர்ந்தார் –
மரியாதைக் குரிய
மாமுனி;

கண்ணனிடம்
கணவன் கூறுவதைக்
கண்ணிரண்டில்
கண்ணீர்க் குமிழிகள்...

மல்கிட – செவி
மடுத்தாள் – அம்
மாமுனியின் மனையான
மாதுசிரோமணி!

அது – ஓர்
அன்னையின் துயரம்;
அத்துயரத்தை
அளக்க வல்லார்
ஆர்? அது ஓர்
அசலத்தின் உயரம்!



12-9-04

'கண்ணா!
காசாம்பூ வண்ணா!
எல்லியும் பகலும்
எஞ்ஞான்றும் –
உன்பேர்
உச்சரித்து உச்சரித்து –
அண்ணித்துக் கிடக்கிறது
அடியேனின் உண்ணா!

உன்னையும் –
உன் முன்னையும் – என்னிடம்
வாசிப்பதற்கு
வந்த நாளிலேயே –

அறிந்தேன்
ஆர் என்று;
ஆயினும் நான்
ஆசாரியன் ஆனபடியால் –
அங்கை கூப்புதல்
ஆகாதல்லவா உன் நேர்நின்று!

மாணவ
மணியே!
ஆயர்குல
அணியே!

என் கல்வி –
எனக்கு உன்னைக் காட்டியது;

கண்ணனல்ல –
கடவுளம்சம் – என்றென்
கட்புலன்
கண்டு பிரமிக்கையில்...

உண்மை
உண்மை – என
உறுதி செய்து எனது
உள்ளுணர்வு தலை ஆட்டியது!

சீடனாகி வந்த
சீதேவி மணாளா!
குறையேதுமில்லாக்
கோவிந்தன் எனக் –
குவலயம்
கொண்டாடும் குணாளா!

உபாத்தியாயருக்கு
உரிய காணிக்கையாய் –
உன்னிடம் நான்
உதவும்படி கேட்டது...

என்
ஏக புத்திரனின் உயிர்;
நீ
நினைத்தால் –
நிலங்கிழித்துக் கிளம்பும்
நசித்துப் போன பயிர்!



நீ
நீணிலம் வாழ்...

உயிர்க்கெலாம்
உயிரானவன்;
உண்டாக்கி –
உண்டாக்கியவற்றையே – ஊழியில்
உண்டு காட்டிப் – பிற்பாடு
உண்டதையே உமிழ்ந்து காட்டும்...

அலகிலா விளையாட்டின்பால் –
ஆசையாகிப் போனவன்!

நீ –
நாரணன்;
பரி –
பூரணன்;

446

காரிய –
காரணன்;
ஆதி நடு அந்தம் அற்ற –
ஆரணன்!

அவ்
ஆதிசேஷன்தான் –
உன் மூத்தோன் என்று
உடன் வந்திருப்பவன்;

அய்யனே! பால் –
ஆழியில்...

அனவரதமும் நீ
அறிதுயில் கொள்ள –
அமளியாய்த் தனது
ஆக்கையைத் தந்திருப்பவன்!

மனித சக்தியை மீறிநிற்கும்
புனித சக்தியே!
மரித்த – என்
மகனை...

மீட்டுத்தர உனையலால்
மேதினியில் ஆரால் ஆகும்?

வாடிய
வேரை –
வாழ்வித்தல்
வான்தரும் நீரால் ஆகும்!

வளர்த்த மகனின்
வாழ்வினை –
உண்டு சென்றது
ஊழ்வினை!

ஊழை மாற்ற
உன்னால் முடியும்;
கீழைக் கதிரே! நீ
கிளம்பினால் விடியும்!

மனைவியும் நானும்
மலங்க மலங்க விழிக்க;
அவலம் வைகலும் – எம்மை
அணு அணுவாய் அழிக்க;

கண்ணா! குரு
காணிக்கையாய் – எங்கள்
மகனைக் கொணர்க; பெற்ற –
மாதாபிதா துயர் உணர்க!'

சாந்தீபினி முனிவர் – இவ்வாறு
சாற்றியதும்...

'ஆசிரியப்பிரானே! தங்கள்
அருமைப் புத்திரனை –
உயிருடன் மீட்டுக்கொண்டு
வருவோம்; அவனைத்
தங்களுக்குரிய காணிக்கையாய்த்
தருவோம்!

விசனம்
விடுக; எமை –
ஆசீர்வதித்து – வழி
அனுப்பிடுக!' என்று...

பணிவோடு பேசினான்
பரந்தாமன்; அவனது
பேச்சை வழி மொழிந்தான்
பலராமன்!

ஆசாரியர்
ஆசி கூற....

ஏறினர் இருவரும்
ஏரார்ந்த தேரில்;

பகலும் இரவுமாய்ப்
பயணித்துப் – பின்
போய் இறங்கினர்
பிரபாசம் எனும் ஊரில்!

அதன்பின் –
அந்த க்ஷேத்திரத்தில் –
அமைந்திருக்கும்
ஆழ்கடல் நோக்கிச் சென்றனர்;
கடற்கரையில் – சிறிது
காற்றுவாங்கிய வணம் நின்றனர்!

கடலரசனான வருணன்
கண்ணன் வருகையை ஓர்ந்தான்;
தனது
திரையலம்பும் –



12-9-04



கரைமீது நிற்பது
கரியமால் என்று தேர்ந்தான்!

'எம்பெருமானே!
எட்டெழுத்தானே!

மெய்யடியார்க்கும் எட்டாத
மெய்ப்பொருள் – எனது
கையருகே வந்து
கரைநிற்கக் கண்டேனே!' என்று...

வாயார
வழுத்தி நின்றான்;
'என் பணி
என்ன?' என்றான்!

கடற்
காவலனின் –
கனிவும் பணிவும் கண்டு
கண்ணபிரான்...

திருமுகம் அலர்ந்தான்; பின் –
திருவாய் மலர்ந்தான்!

'சமுத்திரராஜனே! எனது குரு –
சாந்தீபினி முனிவரின்...

அன்பார்ந்த மகனை – ஒருசில
ஆண்டுகளுக்கு முன்னால் – நீ
விழுங்கி
விட்டாய்;

அதன் காரணமாய் – என்
ஆசிரியப் பிரானின் நெஞ்சைப் –
புத்திர சோகமெனும்
புகையிலா நெருப்பால் சுட்டாய்;

கண்ணீர் இன்னும்
காயாமல் இருக்கிறது – என்
குருபத்தினியின்
குளிர்விழியில் மொட்டு மொட்டாய்!

விழுங்கிய மகனை
வெளியே கொண்டு வா; என் –
விருப்பத்தை
விரைவில் பூர்த்தி செய்தால் –
வருணனே! அதற்குரிய
வாழ்வு உனக்கு உண்டு! வா!'

வார்த்தைகளை – இன்னணம்
வாசுதேவன் வீசினான்;

உடல் நடுங்க –
குடல் நடுங்க –
கடல் மன்னன்
கரங்குவித்துப் பேசினான்!

"பிரபுவே!
'பஞ்சசனன்' எனும் அரக்கன் –
சங்கு வடிவில் – என்னுள்
சஞ்சரிக்கிறான்;
தங்கள் குருவின்
தனயனைக் குளிக்கையில் –
விழுங்கித் – தன்
வயிற்றினில் தரிக்கிறான்!

அவனை
அழித்தல் –
எனக்கு அரிது; அவனாற்றல்
என்னிலும் பெரிது!"

கடலரசன் சொல் கேட்டுக் –
கண்ணன் காய்ந்தான்;
கண்ணிமைக்கும் நேரத்தில் –
கடலுள் பாய்ந்தான்!

(தொடரும்)




## வாக்கைக் காத்தான்!

கடல் புகுந்து தேடினான்
கடல் வண்ணன்;
கடல் வண்ணன்
கரத்தில் சிக்கினான் –
வெண் சங்கு
உடல் வண்ணன்!

பஞ்சசனன் எனும் பெயரொடு
பரவைக்குள் வாழ்ந்த...

அவ்
அரக்கனை –
ஆயர்குல அணிவிளக்கு
அழித்தான்; அவனுள் –
குரு
குமாரன் உளனா என்றறியக்
குரூரமான அரக்கனின்
குடலைக் கிழித்தான்!

சங்கரக்கன் வயிற்றில் –
சாந்தீபினி குமாரனைக் காணாது...

கண்ணன்
கரையேறினான் –
பஞ்சசனன் எனும் – அப்
பால்வண்ணச் சங்கோடு;
பின்னாளில் அதுதான்
பிறங்கியது –
'பாஞ்சசன்னியம்' எனும்
பட்டப் பெயரினைத் தாங்கி...

கண்ணபிரான் – திருக்
கரத் தோடு!

ஆசிரியப் பிரானுக்கு
அளித்த வாக்கைக் –
காத்தே தீருவது எனக்
கங்கணம் கட்டிக் கொண்டு –

தன் –
தமையனொடு தேரேறி...

'சம்யமனீ' என்று
செப்பப் பெறும் –
எமனுடைய பட்டணத்திற்கு
எம்பிரான் சென்றான்;

எமபுரியின்
எட்டுத்திக்கும் அதிர – தான்
ஏந்திவந்த
ஏரார்ந்த சங்கை ஊதிநின்றான்!

உதடு குவித்துக் – கண்ணன்
ஊதிய சங்கொலி கேட்டு...

எமன்
எழுந்தோடி வந்து –
எம்பிரானை வணங்கி
என்புகள் உருகினான்;

பகவானுக்கு
பாதபூஜை செய்து – அந்தப்
பாதோதகத்தை
பக்தியோடு பருகினான்!

மாதவனைக் கண்டு
மறலி –
மெய் கூசினான்; பின்
மெல்லப் பேசினான்!

'விளையாட்டாய் – மானுட
வேடம் தாங்கி...
வையமிசை வந்த –
வைகுந்த வாசா!

தடமார்பில் வாழ்கின்ற
தாமரையாள் நேசா!

கோவிந்தா!



19-9-04

கோபாலா! சகல –
புவனங்களையும் புரக்கும்
பூபாலா!

இவ்
இயமன் –
இயற்றவேண்டிய கடமை
இன்னதென்று...

அருள்கூர்ந்து
ஆணை இடுக;
அடியேன்
அதனை முடிப்பேன் கடுக!'

கண்ணன் முன் –
காலன் கைகட்டி நிற்க...

அசோதை மகனான
ஆதிநாராயணன் –
அந்தகனின்
அன்பைப் போற்றினான்; பிறகு –
வந்த
விஷயத்தைச் சாற்றினான்!

'காலனே!
கதிரவன் பாலனே!
துலாக்கோல் போல்
துலங்கும் சீலனே!

வினைப்பயனால் – தனக்கு
விதிக்கப் பெற்ற...

ஆயுள் முடிந்த – எனது
ஆசாரிய புத்திரனின் –
ஆன்மா – உன்
ஆளுகையில் உள்ளதால்...

அவ்
ஆன்மாவை –
என் வசம் தருக; உடனே –
எடுத்து வருக!'

குரு
குமாரன் ஆன்மாவைக் –
காலன் கொணர்ந்து

கண்ணனிடம் கொடுக்க –

452

உடனே – அவ்
உயிர்க்கு...

புயல் வண்ணன் கண்ணன்
பூதவுடலை அளித்தான்;

அதன்பின் –
அப் பிள்ளையை –
அழைத்துச் சென்று –
ஆசாரியன் வசம் சேர்க்க...

குரு – கண்ணீர்க்
குளமாகி நின்று களித்தான்!

மரித்த மகன் – உயிர்
தரித்த மகனாகி –
மறுபடி
மனைவந்த மாளா மகிழ்ச்சியில்...

சாந்தீபினி முனிவரின்
சகதர்மிணி –
உத்தம புத்திரனின்
உச்சி முகர்ந்து –

பாதாதி கேசம்
பதித்தாள் முத்தம்;
பெற்ற கும்பி
பெரிதும் குளிர – அவளது
உச்சந் தலையில் போய்
உட்கார்ந்தது உன்மத்தம்!

குருதேவர்
கும்பிட்டார் கண்ணனை;
வாயார
வழுத்தி –
நன்றிப் பெருக்கில்
நீராட்டினார் நிழல் வண்ணனை!

'என்னென்று சொல்வேன் – உன்
ஏற்றம்? எந்தாய்!
என்மகனை
எழுப்பித் தந்தாய்!

புத்திர

19.9.04

பாசத்தால் – நானும் என்
பத்தினியும் – புத்தி
பேதலித் திருந் தோம்;
பேதலித்த போதும்
பெம்மானே! உன்
கழலிணையைக்
காதலித் திருந்தோம்!

மாணவனாய் வந்து – எங்கள்
மனக்கவலை மாற்றினாய்;
திக்கு
திசையற்று –
தீனர்களாய்த்
திரிந்த நாளில்...

இவ்
இருண்ட வீட்டில் நீயலவோ –
திரும்பவும்
திருவிளக்கை ஏற்றினாய்!

கண்ணா!
கரியமாலே!
பாதம் முளைத்து நடக்கும் –
பழமறை நூலே!

ஓவாது பாடுவோம்
உன் கீர்த்தி;
களைகண் நீயே –
கிருட்டின மூர்த்தி!'

உணர்ச்சிப் பெருக்காய்
உரை நிகழ்த்திய...

சாந்தீபினி முனிவரை
சாந்தப்படுத்தி விட்டு –
மணித்தேர் ஏறி
மதுராபுரி திரும்பினர் –

கண்ணனும்; அவன்
அண்ணனும்!

தாய்
தேவகியோடும்;
தந்தை – வசு
தேவரோடும்;

மதுராபுரி
மாளிகையில்;
அன்னைவழிப் பாட்டனின்
ஆளுகையில்;

நாள்களைக் கண்ணன்
நகர்த்திய போதும் –

அவ்வப்போது
அவ்வப்போது
ஆயர்பாடியில்
ஆடிக் கிடந்த –

நினைவுகள்
நீரலைகளாய்ப் பெருகி – அவன்
இதயக் கடலில்
இரைச்சலிட்டு மோதும்!

யமுனை
யாற்றை;
தீர்த்தக் கரையில் – அவனைத்
தீண்டிச் சென்ற காற்றை;

மார்கழி
மாதத்தில் – அவன்
காதல் வயப்பட்டு – அவனையே
கணவனாய் வரித்து...

கன்னியர் நோற்ற –
காத்தியாயினி நோன்பை;
மாசு மறுவற்ற – அம்
மாதரார் மாண்பை;

பசும்
புல்வெளியில்...
காலை மாலை மேய்ந்த
காலிகளின் –
கழுத்துகளில்
கட்டியிருந்த மணி ஓசையை;

அவன் – தன்
அதர பல்லவத்தில்...

வேணுவை வைத்து
வேண கானம் இசைக்கையில் –

19-9-04

நாலுகால் பாய்ச்சலில் – கால்
நடையெலாம் –

அவன் பால்
அக்கணமே ஓடிவந்த ஆசையை;

இந்திரனின்
இறுமாப்பைப் பொடித்துக் –

குன்றினைக்
குடையாய்ப் பிடித்து...

எல்லோரையும் –
ஏழுநாள்கள் காத்ததை;

வீடுதோறும்
வெண்ணெய் திருடித் தின்று –
குற்றமற்றவன் போல்
குறுநகை பூத்ததை;

அம்மா அசோதையை –
ஆட்டிப் படைத்ததை;
உரல்மேல் ஏறி –
உறிப்பானையை உடைத்ததை;

இன்னும்
இவை போல் –
எத்துணையோ
எத்துணையோ...

பாலப்
பருவத்து லீலைகளை;
தினம்
தினம்
திகட்டாது நடத்திய
திருட்டு வேலைகளை;

வைகலும்
வாசுதேவன் –

எண்ணி எண்ணி
ஏகமாய்க் குமைந்தான்;

சில
சமயங்களில் –
கற்பனைகளில் இறுகிப் போய்க்
கல்லாய்ச் சமைந்தான்!

யாதவர்
யாவரும் –
வரிசை வரிசையாய் – அவள்
விழிமுன் வந்து நின்றனர்;
நின்று நின்று – தம்மை
நினைவுபடுத்திச் சென்றனர்!

உண்ணும் பொழுதும்;
உறங்கும் பொழுதும்; வேறெதும் –



பண்ணும் பொழுதும்;
பயிலும் பொழுதும்;

கோகுலத்து நினைவுகள்
கோவிந்தனைக் கொள்ளையிட்டன;
அவை
அவனை –

நிழல்களாய்த் தொடர்ந்து
தழல்களாய்ச் சுட்டன!

ஈன்ற தாய் தந்தை
ஈங்கிருக்க; அன்பு –
ஆன்ற தாய் தந்தை
அசோதை நந்தன் ஆங்கிருக்க;

திங்கள் பத்து – மடியில்

454

19-9-04

தாங்கிய தாயை விடவும் -
வாய்த்த மகவென்று - மனதில்
வாங்கிய தாயை விழைந்தது...

காண வேண்டுமென்று
கண்ணன் மனம்;
அதற்குக் காரணம்
அவனோடு -
அல்லாடி மல்லாடி
அவனை ஆளாக்கிய...

அசோதை - ஓர்
அன்பு வனம்!

இவ்வாறெலாம்
இடையறாது எண்ணி எண்ணிக் -
கண்ணன்
கல்லெறிந்த குளமானான்;

அவன்
ஆற்றவேண்டிய பணிகள் -
நிறைய உளதால் - மதுராபுரியை
நீங்க முடியாது போனான்!

ஆயினும் - தன்
அன்பார்ந்த...

அன்னை;
அத்தன்;
கோபியர்;
கோபாலர்;

ஆகியோரின் நலங்களை
அறிந்துவர -
ஆரையேனும் கோகுலத்திற்கு
அனுப்புவது பற்றி -

சில நாள்கள்
சிந்தனை புரிந்தான்;
அவன் எண்ணங்களை -
அங்குபோய் எடுத்துரைக்க -
உகந்தவர் - என்று
'உத்தவ'ரைத் தெரிந்தான்!

உத்தவர் - அவனுக்கு
உற்றவர்;
வியாழனிடம் - சகல
வித்தைகளையும் கற்றவர்;

அளப்பரிய
ஆற்றலால்
அமைச்சுப் பதவியையும்
அவர் பெற்றவர்;

யாதவ மரபில்
யாரு மில்லை - அந்த



உத்தமரோடு
உவமிக்க ஒரு நற்றவர்!

அத்தகு உத்தவரை உடனே
அழைத்து வருமாறு...

கட்டளை பிறப்பித்தான்
கண்ணன்;
விருந்தாவன நினைவுகளில்
விலகாது நிலைத்து விட்ட -
வான்மழை
வண்ணன்!

(தொடரும்)

19 - 9-04

## உத்தவர் உபதேசம்

**வா**சுதேவன்
வரச்சொன்னான் என்றதும் –
வந்தார் உத்தவர்;
வாய்மையின் வித்தவர்!

கண்ணன் – அவரது
கரங்களைப் பற்றிக்கொண்டு...

"உத்தவரே!
உத்தமரே! என்பால் –
உழுவலன்பு
உற்ற தமரே!

தாய் அசோதையையும் –
தந்தை நந்தகோபரையும் –
நான் பிரிந்து
நாள்கள் பலவாகிவிட்டன;

அந்தப் பிரிவு
அடிக்கடி படுத்த – என்
வேலைகள் – சில
வேளைகள் கெட்டன!

நான் – இவ்விடத்தை விட்டு
நகர முடியாமல் இருக்கிறேன்;
பணிகள்
பல உள;
பிறரிடத்தில் அவற்றைப்
பகர முடியாமல் இருக்கிறேன்!

ஆனால்
ஆயர்பாடியில் – என்
அத்தனும்
அம்மையும்...

என் பிரிவைத் தாங்க
ஏலாதவர்கள்;
என்
எண்ணமெனும் –

# கிருஷ்ண விஜயம்

58 கவிஞர் **வாலி**



26-9-04

நோன்பல்லால் பிற நோன்பை
நோலாதவர்கள்!

அதுவும் – என்
அன்னை அசோதை – என்
வாய்க்குள்
வையம் கண்டபின்னும் – நான்
ஆரென்று
அறிந்திடாள்; அவ்வளவு பேதை!

தெரு மண்ணை – நான்
தின்றபோது – இந்தப்
பெரு மண்ணைப்
படைத்தவனே இவன்தான் – என
எண்ணினாளில்லை
என் யாய்;

மண் தின்ற
மகவுக்கு –
வயிற்று நோவு
வருமோ – எனத்

தவித்தாள் பாவம்!
தானுமோர் ஏனைய யாயாய்!

குன்றைக்
குடையாக –
ஏந்திக் காத்தேனே
ஏழு நாள் விருஷ்டி; அந்தக்
காரியத்தால் – தன்
கண்ணனுக்குக்
கண்ணேறு படுமென்று
கழித்தாள் திருஷ்டி!

அப்படிப்பட்ட
அன்னைக்கு – இப்போது
எப்படி யிருக்கும்
என் பிரிவு?
அனுபவிப்பார்
அல்லால் –
அடுத்தவரால்
அறியக்கூடுமோ அவ் எரிவு?



26-4-04

நந்தகோபரும்
நலிந்திருப்பார்;
மெய் முன்பிருந்ததைவிட
மெலிந்திருப்பார்!

நான் அவர்களது
நிஜப் பிள்ளையல்ல என்பது...

இருவர்க்கும்
இப்போது தெரியும்;
இருக்கும் தவிப்போடு
இந்தத் தகவலும் சேர...

அவர்களது
அவலம் –
எரியும் கொள்ளியில்
எண்ணெய் கொட்டிய மாதிரி
அதிகம் ஆகும்; ஆதி அந்தம் –
அதிகம் வேகும்!

ஆயினும் வளர்த்த பாசம்
அலைக்கழிக்கும்;
அது அவர்களது –
அறிவை அழிக்கும்;
புலம்புவர்; தமைத்தாமே – கண்
புனலால் அலம்புவர்!

கோகுலம் வாழ் –
கோபியர்களும்...

பிச்சேறிக் கிடப்பர்; சுய –
பிரக்ஞையின்றி நடப்பர்; என் –
பிரிவெனும் கடலை – அப்
பேதையர் எவ்வாறு கடப்பர்?

காலை முதல்
கங்குல் முளைக்கும் வரை –
கோலாகலமாக என்னோடு
கொட்டமடித்த கோபாலரும்...

தனித்துத்
தவிப்பர்; எந்தத்
தண்ணீரால் – அந்தத்
தவிப்புத் தழலை அவிப்பர்?

கறவைகளும் – என்
காதலால்... 460

வற்றி நிற்கும் – பால்
வார்க்கின்ற மடி;
எவர் கொடுத்தாலும் – அவை
ஏற்காது பசும்புல் ஒரு பிடி!

ஆதலால்
அன்புசால் நண்பரே! என் –
உளமறிந்து உதவவல்ல
உயரிய பண்பரே!

தாங்கள்
தக்கணமே...

கோலத் தேர்ஏறிக்
கோகுலம் செல்ல வேண்டும்;

'உங்கள் கண்ணன்
உங்களை மறக்க வொண்ணுமோ?
உங்கள் நலமலால் – அவனது
உள்ளம் வேறொன் றெண்ணுமோ?

வெகு
விரைவில் –
கண்ணன் வருவான்; உங்கள்
கவலைகளுக்கு விடை தருவான்!'
என்று அவர்களிடம்
என் காதலைச் சொல்ல வேண்டும்!"
என வேண்டினான்; விரைவில்
ஏகுமாறு தூண்டினான்!

கண்ணபிரானின் – அன்புக்
கட்டளைக் கேற்ப...

கோதறு மாதவர் உத்தவர்
கோகுலம் போய்ச் சேர்ந்தார் –
மேலையில் – கதிர்சாயும்
மாலையில்!

உத்தவர் வரவில்
உளம் வெகுவாக மகிழ்ந்து...

அவரை
ஆரத் தழுவினான் –

26-9-04

ஆயர்குலத்தின்
அதிபன் நந்தகோபன்;

வெளி
வேலைகளை முடித்துவிட்டு –
அப்பொழுதுதான்
அரண்மனைக்கு வந்த கோபன்!

உரிய
உபசாரங்கள் புரிந்தான்;

தலைவாழை
இலை போட்டு...

அதில்
அறுசுவை
அன்னம் பரிமாறி
ஆவின் நெய்யைச் சொரிந்தான்!

அதன்பின்
அவர்க்கு –
விச்சிராந்தியாய்
வீற்றிருக்க...

தவிசு
தந்தான்; பின் –
தாம்பூலம் சந்தனம்
தந்தான்;
அவை மட்டும்
அன்றி –
அவருக்கு விசிறிவிட
ஆலவட்டம் கொண்டுவந்தான்!

அவனே சிறிது நேரம்
அவருக்கு வீசலானான்;
அவர் 'போதும்' என்று – விசிறியை
அவனிடமிருந்து வாங்கியதும்...

நந்தகோபன் – அந்த
நல்லவரிடம் பேசலானான்!

'உத்தவரே! எமக்கு
உயிர் தந்தீர்;
வாடிய பயிர்க்கு
வான்மழையாய் வந்தீர்!

நண்பர் வசுதேவர்; அவர்
நாயகி தேவகி; ஏனைய –
நம்மவர்;
நாட்டவர் உளரா பாங்காக?

கம்சன்
காலமானபின்...

மதுராபுரி
மாநகரில் – ஏதும்
அசம்பாவிதம் நேரவில்லையே
அமைதிக்குத் தீங்காக?

எங்கள் கண்ணன்;
எழிலி வண்ணன்;
திருமேனி நலம்தானா? இந்தத் –
தாய் தந்தையை நினைக்கின்றானா?

மறவாது –
மனத்துள் வைத்துளானா...

இங்கிருக்கும் – அவனது
இனிய கேள்களை?
அவன்
அல்லும் பகலும்
ஆரத் தழுவிய
அன்புத் தோள்களை?

கொஞ்சமேனும் எண்ணுகிறானா –
கோகுலத்தை? எழிலார்ந்த –
கோவர்த்தன கிரியை? எளிய –
கோபாலர் குலத்தை?

எங்களைக் காணும் பொருட்டு –
என்றேனும்...

ஒரு நாள் – இங்கு
வருவானா? மாட்டானா?
ஆயர்பாடியை விடவும்
அழகின் விலாசமான –
மதுராபுரியே
மேலென்று வேட்டானா?'

26-9-01

இவ்வாறு நந்தகோபன்
இருவிழிகளில் நீர்துளிக்க –
உத்தவரிடம்
உசாவுகையில்...

அருகிருந்த
அசோதை –
அழுகையை
அடக்க மாட்டாது...

ஒரு பாட்டம்
'ஓ'வெனக் கொட்டித் தீர்த்தாள்;



அதன்பின்
அவள்
உத்தவரைப் பார்த்து – ஒரு சில
உஷ்ண வார்த்தைகளை வார்த்தாள்!

'புனிதரே! மா –
மனிதரே!

குயில்
குஞ்சை...

தனதென்று
தப்புக் கணக்கிட்டு –
வளர்த்துப் பின் ஏமாறும்
வாயசம் போல் என் கதை ஆனது;

கைப் பிள்ளை – என்
மெய்ப் பிள்ளை அல்ல; தேவகியின்
பைப் பிள்ளை; என்னளவில் அது
பொய்ப் பிள்ளை என்று... 462

அறிந்த நாள் தொட்டு – கண்
அயர்ந்தேனில்லை; இந்தத்
தாயுறக்கம் – வெறும்
நாயுறக்கம் என்றாகிப் போனது!

சிறகு முளைத்து
சின்னஞ்சிறு –
பார்ப்பு பறந்ததும்
பாசம் விடும் பறவைக்கு; பால் –

ஊறும் மடியில்
ஊட்டுவதைக் –
கன்று மறந்ததும்
காதல் விடும் கறவைக்கு;

பறவை;
கறவை;
போலிந்தப்
பொல்லாத பெண் ஜன்மத்தால் –
உதற முடியுமோ
உறவை?

எது
எப்படியிருப்பினும் –
எங்கள் கண்ணன்;
எங்களுக்கே உரிய கண்ணன்;

கோகுலம் விட்டுக் –
கோலநகர் மதுரை போன பின்பு...

ஊரும்
ஊராக இல்லை; அழகிய யமுனா
நீரும்
நீராக இல்லை; அவன் மேய்த்த
ஆனும்
ஆனாக இல்லை; அவனை மேய்த்த
நானும்
நானாக இல்லை!

ஊழ்க்கை வசமானது – எங்கள்
வாழ்க்கை; வேறு என் சொல்ல?

26-9-04



நித்தம் – கண்ணில்
நீத்தம் வடியக் – கண்ணன்
நிற்க வைத்தான்; இது அந்த –
நிழல் வண்ணனுக்கு நீத மல்ல!'

இன்னணம் யசோதை – கண்ணீர்
இழிய இழிய இயம்பியதும்...

உத்தவர் தேற்றினார்; ஞான
உரையொன்று ஆற்றினார்!

'அம்மா! நீயும் உன்
ஆளன் நந்தகோபரும் –
பெற்ற
பேறு –

பேசப் போனால் – அதுபோல்
பெற்றாருண்டோ வேறு?

காலம் நீத்த மூலம் அல்லவோ –
கண்ணனாய் வந்த மகவு;

அதற்கு
அம்மையாய் அத்தனா யிருந்து –
ஆளாக்கினீர்களே
ஆர்க்கு வாய்க்குமத் தகவு?

அறத்தை நிறுத்திடவும்;
மறத்தை ஒறுத்திடவும்;

வையம்
வந்தவன் – உங்கள்
வீட்டுப் பிள்ளையாய் இனியும்
விளையாடிக் கொண்டிருந்தால்...

அவதார நோக்கம்
அர்த்தமற்றுப் போகும்; பின் –
பூபாரம் தாளாது –
புலம்பிய தரைமங்கையின் –
பொழுது – புலராப்
பொழுதாகவே அன்றோ ஆகும்!

எனினும் – கண்ணபிரான்
என்னை அனுப்பினான் இங்கு...

உங்கள் எல்லோரையும் – அவன்
உள்ளம் சிந்திப்பதாகவும்;

உங்கள் எல்லோரையும் – அவன்
விரைவில் சந்திப்பதாகவும்;

சொல்லச்
சொல்லி;
சிந்தாகுலத்தை எடுங்கள்
சிந்தையிலிருந்து கல்லி!'

உத்தவர்
உரை கேட்டு –

நந்தகோபனும் – அவன்
நாயகியும் – ஓரளவு
அமைதி உற்றனர்; ஆன்ம –
அனுபூதி வரப் பெற்றனர்!

உத்தவர் – இரவு
உறங்கி எழுந்தார்;

புலரியில்
பூஜை புனஸ்காரங்கள் முடித்து...

கோவிந்தன் சொன்னதைக்
கோபியரிடம் சொல்லப் போனவர் –
வியப்பில்
விழுந்தார்!

(தொடரும்)

பிரமர கீதை

யமுனை என
யாவராலும் அழைக்கப்பெறும் –
காளிந்தி நதியின்
கரை நெடுகவும் தன் குதிகாலை –

வைத்து
வைத்து –
குதித்து
குதித்து –

# கிருஷ்ண விஜயம்

வெயில் சிறுபிள்ளை போல்
விளையாடித் திரியும் அதிகாலை!

தீர்த்தக் கரையில்
திரும்பிய கங்கிலெல்லாம்...

பொதுவாக – அனேக
பொதும்பர் உண்டு; அங்கு
பொறிவண்டுகள் மேயும் – காலைப்
போது போதுகள் விரியக் கண்டு!

அத்தகு –
அழகிய –

இளமரச் சோலைகளில்
இங்கும் அங்கும் சுற்றினர் –

இளம் கோபியர் தமது
இயல்பு இழந்த கோலத்தில்;

கண்ணன் என்னும்
கரிய மாணிக்கத்தைக் –



59 கவிஞர் **வாலி**



காணாத
காய்ச்சலில்...

செம்மை ஏறி நின்றது – அவர்
செய்ய விழிகளின் நீலத்தில்!

‘கண்ணா!
கண்ணா!’ என்று –
கூச்சம் விடுத்து ஒருத்தி
கூவினாள்;



தருவொன்றின்
தாழ்ந்த மரக்கிளையைக் –

கண்ணன் தோளெனக்
கருதித் தொத்த நினைத்து –

ஆடை வரிந்து கட்டி – ஒருத்தி
அதன்மேல் தாவினாள்;
அயராது முயன்று – இறுதியில்
அக்கிளையை மேவினாள்;

'கேசவா! என்னோடு –
பேச வா! எழிலார்ந்த –
மயிற்கண் விசிறி கொண்டு – என்
மயிர்க்கால் வியர்வைகள் –

ஆவியாய்
ஆகும் வண்ணம் வீச வா!
வாசக் களபம் – மார்பெங்கும்
வெப்பம் தணியப் பூச வா!'

என்றொருத்தி –
ஏக்கம் தாளாது கேவினாள்;

'வாசுதேவா! நீ வந்து
வாசமலர் சூட்டாமல்...

சிக்கும்
சிடுக்குமாய் –
பேனும்
பிசுக்குமாய் –

இருக்கும்
இவளது பரட்டை முடியைப் பார்;
வாரி
வகிடெடுத்து
வாசப் பூ – இவ்
வார்குழலில் இனி வைப்பார் யார்?'
என
எரிந்து – தன்
அளகபாரத்தை – ஒருத்தி
அஞ்சு விரல்களால் நீவினாள்!

கண்ணன்பால்
காதல் பெருகிக் –
கசிந்து

கண்ணீர் பெருக்கி –
அலகை போல்
அலைகின்ற –
ஆயர்குலப் பெண்டிரின்
அவஸ்தையைப் பார்த்த –

உத்தமர்
உத்தவர் –
'என்ன பக்தி!
என்ன பக்தி!' என்று...

விக்கித்து நின்றார்
வியப் பெய்தி; அவர் –
வாயுளேயே நின்றது – கண்ணன்
விடுத்த செய்தி!

அவ் –
அமயம்...

ஓர்
ஓரத்தில் –
ஒற்றையாய் உட்கார்ந்திருந்த
ஒருத்தி –

கண்ணருகே வந்து சுற்றும் – ஒரு
கருவண்டைப் பார்த்து – அதைக்
கண்ணன் விட்ட தூதாகக்
கருதி...

அவசநிலையில்
அவ் வண்டொடு பேசலானாள்;

அடுக்கடுக்காக
அவள் –
குழலூதும் வேந்தின்மேல்
குற்றச்சாட்டுகளை வீசலானாள்!

"வண்டே! கரு
வண்டே!

உனக்கும் –
உன்னை
ஏவினானே தூதாக – அவனுக்கும்
என்னப் பொருளோ பெண்டே?

கண்ணனைப் போல்
காரியமானதும் – கை
கழுவுகின்ற கள்ளத்தனம்
கருவண்டே! உனக்கும் உண்டே;
வாய் வெடித்த
வாசப் பூக்களும் – நீ
வாய் வைத்தபின்
வஞ்சிப்பவன் என்றறிந்து...

மடற்கத வடைக்குமே –
மறுபடி நீ வரக் கண்டே!

கோவிந்தன் விடு தூதெனக்
கோகுலம் வந்த –
வண்டே! கேள்! – இந்த
வஞ்சி வஞ்சிக்கப்பட்டதை;

கைவிடேன்
கைவிடேன் என்றும் – கையணைத்த
மெய்விடேன்
மெய்விடேன் என்றும் –

குழல்மேல் சத்தியம் செய்து –
குறும்புகள் நித்தியம் செய்து –
குலவி – என்
குளிர்நிழலென உடன் உலவி –

கண்ணன் – அதன்பின்
காற்றில் வார்த்தையை விட்டதை!

கண்கள் என்று
கண்ணனைக் கண்டனவோ – அன்றே
காதல் என்னுள்
கசிந்தது;

மனம் அவனுக்கு
மசிந்தது; அவன்
மருவ மருவ – எனது
மருங்குல் ஒசிந்தது; என் –

இதழ்வழி
இழியும் வாசமிகு –
நறவத்தை அந்த
நாயகன்...

மாந்த மாந்த மாந்த – என்
மானம் நசிந்தது;

மேலும்

மேலும் –
முயங்க
முயங்க –

முத்துமுத்தாய் – மேனி
முச்சூடும் வேர்வை பொசிந்தது!

இல்லை எனக்கொரு சுயம்; எனை –
இழந்தேன் அவன் வயம்;

சீவான்மா –
பரமான்மா – என
ஈரான்மா அல்ல – இனி
ஓரான்மா என ஆனபின்பு...

அற்றது
ஆக்கை உணர்ச்சி;
அரும்பியது
ஆன்மப் புணர்ச்சி!

எனக்கும் கண்ணனுக்கும்
ஏற்பட்ட தெல்லாம்...

தசைகள் கொண்ட
நசைகள் அல்ல –
இச்சையாய் இணைந்தனர் – எனக்
கொச்சையாய்ச் சொல்ல!

ஒருத்தி
ஒருவனுக்கு
வாழ்க்கைப்பட்டுப் – புகும்
வீடு வேறு;

நான்
நந்தகுமாரனுக்கு
வாழ்க்கைப்பட்டுப் – புகும்
வீடு வேறு; அது வீடு பேறு!

மணியிலிருந்து உதித்து – பின்
மணியிலேயே ஒடுங்கும் –
ஓசை அனையது – எனது
ஆசை;

நீரிலிருந்து எழும்; பின்
நீரிலேயே விழும்; அவ் –
அலை யனையது – எனது
நிலை!

பாவை நான் அறிவேன் – அவன்
பரப்பிரமம்;

அன்னணம்
அறிந்துகொண்ட
பெண்ணுக்கு – அவன் பிரிவு
பெரும் சிரமம்!

ஆவி;
ஆக்கை;
அனைத்தும்
அவனுக்கே...

என
எழுதிவைத்தேன் சாசனம்;
எஞ்ஞான்றும் – அவன்
எட்டெழுத்தே என் போசனம்;

அவன்
அகலாது
அமர்ந்திருக்க – என்
அகத்தை ஆக்கினேன் ஆசனம்;

அவன்பால் – எனக்கு
அரும்பிய பிரீதியைப் பார்த்து...
'அடி!
அசட்டுப் பெண்ணே!'
என்று என்னை
எள்ளியது இவ்வூர் மாசனம்!

ஊர் – ஆரூடம்
உரைத்தது போலவே அவன்...

ஒருநாள்
ஓடிப்போனான் மதுராபுரி;

கண்ணனைக்
காதலித்த பாவம் – நானிப்போது
களத்துமேட்டில் கிடக்கும்
கதிர் கழன்ற வைக்கோற்புரி!

வண்டே! கரு
வண்டே!

ஏய்ப்பதையும்
ஏய்த்துவிட்டு – அவனால்
ஏய்க்கப் பெற்ற

ஏந்திழையார் பாதம் பிடித்து...

சமாதானம்
செய்ய –

உன்னை அனுப்பினானோ – அந்த
உத்தமன்? அவனைவிட –
உயர்ந்தவன் – ஒரேயடியாக
உயிர் வாங்கும் நமன்!

வண்டே!
விலகி நில்;

கண்ணன் சொன்னானென்று – என்
காலைச் சுற்றாதே; நான் –



மசியமாட்டேன்; நீ
மதுராபுரிக்கே செல்!

கன்னியர் மனத்தைக்
கரைக்கும் வித்தையை – எங்கு நீ
கற்றாயோ? அந்தக்
கண்ணனைக் குருவாய் உற்றாயோ?

அவன்தான்
அகடவிகடம் புரிவதில்
அசகாய சூரன்; பூவை நெஞ்சை –
அபகரிக்கும் சோரன்!

பொழுதுக்கு நூறு
பொய்கள் நுவலும் திருடன்; அத் –
திருடனா – அந்தத்
திருமகளுக்குப் புருடன்?

விட்டிருப்பான் கண்ணன் –
விதவிதமாய்ச் சரடு; அந்த –
மாதரசி பாவம்! அவற்றில்
மயங்கிப் போய் – அணிந்தாள்
மணிக் கழுத்தில் – அவன் தந்த
மாங்கலியச் சரடு!

அவளை
அவன் –
ஏற்றிவைத்திருக்கிறான் – தன்
ஏரார்ந்த மார்பில்;

ஆனால்
அவனது
எண்ணம் இருக்கிறது – பிற
ஏந்திழையார் சார்பில்!

மகாலட்சுமியே – அவனிடம்
மயங்கினாள் என்றால்...

எம்மனோர்
எம்மாத்திரம்? அவனது
பிரியமான பேச்சு – அச்சச்சோ!
பிரம்மாத்திரம்!

குழையக்
குழையப் பேசிக்
குமரிப் பெண்டிர் நெஞ்சைக்
குறிவைத்து அடிப்பான்;
பொறி கலங்க வைத்துப்
பொக்கெனப் பிடிப்பான்;

ஏகபத்தினி விரதன் போல்
ஏகமாய் நடிப்பான்:
ஒரு நாள் சொல்லாது கொள்ளாது
ஓட்டம் பிடிப்பான்!

அவன் செய்த மாயங்கள்
அம்மவோ!

சொல்லப் போனால் –
சலிக்கும்;
வாய் –
வலிக்கும்!

இராமனாய் – நிலம்
இறங்கிய போது...

மரத்திற்குப் பின்

மறைந்திருந்து –
வாலிமேல் தொடுத்தான்
வாளி;

சோதரனை ஏவிவிட்டு
சூர்ப்பணகையின் –
மூக்கை ஆக்கினான்
மூளி!

வாமனனாய்
வந்தான்; அவனை –
மாவலி
மனதார வழுத்தினான்;

வழுத்திய – மா
வலியைத் – தனது
பாதத்தால்
பாதாளத்தில் அழுத்தினான்!

இற்றை நாளில் –
இங்கு...

கண்ணனாய் வந்து – தொடர்கிறான்
கபட நாடகம்;
ஆர்
அறிவார்
அவன் கருத்தை?
அத்துணையும் பூடகம்!

கருவண்டே! என்
காதில் விழும்படி –
கண்ணன் பெருமையைப் பாடாதே;
கணக்கு பிழையாய்ப் போடாதே!

அவன் யோக்கியதை
அறிவேன் யான்; யான் –
கானல் நீரைக்
காவிரி நீராய் நினைத்த மான்!

ஊரை விட்டேன்;
உறவை விட்டேன்;
பிரபத்தி செய்து – அவனுக்கே
பிச்சாகிப் புத்தி கெட்டேன்!

அதுசரி; உன்னிடம்
அவன் என்ன சொன்னான் சேதி?

விரைவில் எனைப் பார்க்க
வருகிறேன் என்றானெனில் –
நம்பித் தொலைக்கிறேன்;
நீ சொல் அவனிங்கு வரும் தேதி!

அவன் விட்டாலும்
அவனை நான் விடேன்;
வேறொரு மானுடர்க்கு
வாழ்க்கைப் படேன்!

அவன் நாமம்;
அவன்பால் நிலைத்த காமம்;
இவை இரண்டும் – நான்
இடையறாது நடத்தும் ஓமம்;

ஈங்கொரு நாள்
ஈமம் – சேரும் ஒருயிர்க்கு
ஈதலால் வேறெது
ஈயும் சேமம்?

அறுகால் வண்டே!
அறுகால் வண்டே!
மதுராபுரி செல்; என் அவலம் –
மன்னனிடம் சொல்!"

வண்டோடு ஒரு கோபிகை –
இவ்வாறு
வார்த்தையாடியதைக் கேட்டு...

'அடடா! அப்பழுக்கற்ற
அன்பு!' என –
உத்தவர் உருகிப் போனார்
உள்ளிருக்கும் என்பு;

உன்மத்தத்தில்
உலவித் திரியும் –
ஆயர்பாடிப் பெண்டிரை
அழைத்துப் பேசினார் பின்பு!

(தொடரும்)

★'பிரமரம்' என்றால் வண்டு; பெண் – வண்டிடம் பேசியதில் – ஆன்மானுபூதி அடங்கியிருப்பதால் – இது 'பிரமர கீதை' என்று போற்றப்படுகிறது!

472



# நம்ம ஊரு பாண்டு!

**கமல்:**

மேக்கப்பை ஹாலிவுட்டிலிருந்து வரவழைக்கறவன் 'மனுஷன்'. ஹாலிவுட்காரனாவே மாற்றவன் பெரிய மனுஷன். இப்ப நான் மனுஷன்! பெரிய மனுஷனா மாறுவேன்!

பியர்ஸ் ப்ராஸ்னனுக்கே கிஸ்ஸிங் டெக்னிக்கை சொல்லிக் கொடுத்தது நான்தான்! ஒரு காலத்துல கிஸ் பண்றப்போ அவரோட ரெண்டு உதடுங்க மட்டுமே சேரும், நாலு உதடு சேர்றா மாதிரி கோச்சிங் கொடுத்தது நான்தான்! நாலு உதடு சேர்ந்தாதான் கிஸ்ஸுன்னா, கிஸ் அடிக்கறதுல பாவம் இல்லே!

**அர்ஜுன்:**

நான் புடிச்ச அளவுக்குத் துப்பாக்கியை எந்தவொரு ஹாலிவுட் ஹீரோவாவது புடிச்சிருப்பானா, சொல்லுங்க? நான் ஹீரோயினோட டூயட் பாடறப்பக்கூட உஷாரா இருப்பேன்... குறுக்கே வில்லன் வந்துடுவானோனு! சமயத்துல ஹீரோயின்கிட்டகூட உஷாரா இருப்பேன்... திடீர்னு தாக்கிடுவாளோனு! டூயட்டிலெல்லாம் மூஞ்சியை உம்முனு வெச்சுட்டிருப்பேன். அதுமட்டுமில்லே... நாட்டுமேல எனக்கு ஒரு தனி bond அதாவது, பிணைப்பு உண்டு! அதனால நான்தான் பெஸ்ட் ஜேம்ஸ்பாண்டு!





**ரஜினி:**

ஆண்டவா! கோலிவுட்டிலிருந்து என்னைக் காப்பாத்து. ஹாலிவுட்டை நானே பார்த்துக்கறேன்! அளவுக்கு அதிகமா சுட்ட வில்லனும், அளவுக்கு அதிகமா கெட்ட ஹீரோவும் நல்லா நடிச்சதா ஹாலிவுட்ல கிடையவே கிடையாது! பாண்டு கவுண்ட் டவுன் ஸ்டார்ட்ஸ்... 0... 0... 7..!

– பாஸ்கி

## அத்தை குந்திதேவி

'கோபாலனைப் பிரிந்திருக்கும்
கோபிகைகளே!
எம்பிரான் வாசுதேவனின்
எண்ணத்தை வண்ணத்தை –
எண்ணெய் திரி எனத்தாங்கி
எரிகின்ற தீபிகைகளே!

உங்கள்
உள்ளிருக்கும் –
விரகப் பொறியை
விசிறிப் பெரிதாக்க வேண்டி...

பகழிகளைப்
பாய்ச்சுகின்றனவோ –
பஞ்சபாணன் என்னும்
பாபிகைகளே?

உண்மை ஒன்றுரைப்பேன்;
உங்களை ஒப்பார் – என
ஒருவரை இசைத்ததில்லை
ஓதம்சூழ் இப்பார்!

கண்ணன்பால் – நீங்கள்
காட்டுகின்ற பக்தி –
கொஞ்சநஞ்சமல்ல; ஒரு
கோல்கொண்டு நானளந்து சொல்ல!

கீர்த்திமிகு – கிருட்டின
மூர்த்தியின் மாட்டு –
முதலை போன்ற – இத்தகு
மூர்த்தன்னியமான பிடிப்பு...

மும் மலத்தின்
முனைகளை முறித்துப் போட்ட
முனிபுங்கவர்களிடம் கூட
முகிழ்த்த தில்லை;

கண்ணனைக்
கருதிக் கருதிக்
கவல்கிறீர்களே – இந்தக்
காட்சி போல்...

என் நெஞ்சை – வேறு
எதுவும் நெகிழ்த்த தில்லை!

காணவில்லையே
கண்ணன் மூர்த்தம் – எனக்
கதறும் உங்கள் கண்களில்
கண்டேன் தீர்த்தம்!

உலைந்து
உலைந்து – உருக்
குலைந்து போனீர்; உதட்டுநகை
தொலைந்து போனீர்!

ஆயர்குலத்து
ஆயிழைகளே!
ஆடை சுமந்து நிற்கும்
அன்பு மழைகளே!

உங்கள்



# கிருஷ்ண விஜயம்

உணர்வுகளைக் –
கண்ணன் நினைவிலேயே
கரைத்து விட்டீர்;

மனத்தளவில்
மணமுடித்து – அந்த
வாசுதேவனுக்கே
வாழ்க்கைப் பட்டீர்;

ஏகாக்கிரசித்தம் –
எனும் சொல்லுக்குப்



பொருளா யிருந்து – பரம்
பொருளைத் தவிர – பிற
பொருள்களை – ஒரு
பொருளாகக் கொள்ளாது...

புற நினைவுகள் – நெஞ்சுள்
புகாது வேலி இட்டீர்;

நற்பயிராய் – ஞானச்
சொற்பயிர் விளைய...

நாரணன்
நாமத்தையே –
நல்ல விதையாக
நாக்கு வயலில் நட்டீர்;

இருக்கு முதலாக
இருக்கும் மறைகளை –
இடையறாது ஓதும்
இருடிகளுக்கும் இலேசில் –

எட்டாத உயரத்தை – நீங்கள்
எளிதாய்த் தொட்டீர்;

கருத்தில் கண்ணன் என்னும்
கரும்நெருப்பை ஏந்தி –
கரும வினைகள் முற்றும்
கரியாகச் சுட்டீர்;

கண்ணன் ஏற்றம்
கழறாத எவரோடும் –
ஒருநாளும்
ஒருபோதும் ஒட்டீர்;

கண்ணனின் வேணு
கானத்தில் களித்ததல்லால்...

கும்பல் கும்பலாகக்
குயில்கள் – கொம்புத்தேனைக்
குரலில் குழைத்துக் கூவினும்
குதுகலித்துக் கைகள் கொட்டீர்!,

இந்த
இளம் வயதில்...

என்ன வைராக்கியம்!
என்ன வைராக்கியம்! உங்கள் –
ஏற்றம் விளக்கிட
எனக்கேதொரு வாய்வாக்கியம்?

கருமயோகம் என்றால் – இது
கருமேயாகம்; சருவ
பரித்தியாகம் என்றால் – இது
பரித்தியாகம்!

அவன்
அறிவான் – இங்கு
அவன் பொருட்டு யுவதிகள்
அனுபவிக்கும் அவதிகள்!

அக் கண்ணன்
ஆகாய வண்ணன் –
பயிர்க்கெல்லாம்
பருவமழை அன்னான்; உங்கள்
உயிர்க்கெல்லாம்
உய்கை
உண்டென உங்களிடம் – என்னை
உரைக்கச் சொன்னான்!

வழக்கம் போல்
வாழுங்கள்;
அவன் நினைவில்
ஆழுங்கள்!

கண்ணன் உங்கள்
கண்ணீர்க்கு அணை; நீங்கள்
கவலைக் கடலைக்
கடக்க உதவும் புணை!'

உத்தவர் இவ்வாறு
உரை ஆற்றினார்;
தேம்பும் கோபியரைத்
தேம்பாது தேற்றினார்!

பகவானிடம் – அப்
பெண்டிர் கொண்ட பக்திக்கு...

மனத்துள்
மரியாதை பண்ணினார்; இத்தகு

பரம
பக்தைகளின் –
பாததூளியே மூவுலகையும்

புனிதமாக்குமென எண்ணினார்!

மறுநாள் – உத்தவர்
மதுராபுரி போய்ச் சேர்ந்து...

கண்ணனிடம் – கோகுலத்தில்
கண்டதைக் கேட்டதைக் கூற –
சிலையெனச்
சமைந்தான்
கோவிந்தன் – அவன் மனம்
கோபியர் அன்பில் ஊற!

ஆயர்பாடிக்கு
அடுத்தபடி –
அவனது சிந்தனை
அத்தினாபுரம் சென்றது;
அது
அவனது –
அன்புக்குரிய
அத்தையிடம் போய் நின்றது!

அத்தினபுரத்து
அரச பரம்பரையில் வந்த...

பாண்டுவின்
பத்தினியான
குந்திதேவிதான் – நந்த
குமாரனின் அத்தை; அந்தப்
பெண்ணரசிதான்
பெற்றெடுத்தாள் –
பஞ்ச
பாண்டவர்களில்...

தருமன்; வீமன்; விஜயன் – எனத்
தரணிபுகழ் மூன்று முத்தை!

பாண்டுவின் – மற்றொரு
பத்தினியான மாத்திரி –
பிறகு
பெற்றெடுத்தாள்...

நகுலன்; சகாதேவன் – என
நாமங்கள் சாற்றப் பெற்றவரை –
நாடு மெச்சும்
நன்மக்கள் என்று;

மாத்திரியின் –
மரணத்துக்குப் பிறகு...

குந்தி
குறிப்பிட்டாள் – அந்த
நன்மக்களைத்
தன்மக்கள் என்று!

வனத்தில்
வாழ்கையில்...

முனிவு கொண்ட – ஒரு
முனிவரின் கோபத்தால்;
கோபத்தில் – அவர்
கொடுத்துப்போன சாபத்தால்;

பாண்டு மன்னன் –
பொக்கெனச் சாக...

தன்னால்தான்
தவறு நேர்ந்ததென்று – அவன்
தாரம் மாத்திரி தீப்புகுந்து
தலைவன் பின்னே தானும் போக...

அதன்பிறகு
ஆரணியத்தை விட்டு –

குந்தியையும் – அவள்
குமாரர்களையும் – கண்
குருடனான திருதராட்டிரன் – தன்
குடும்பத்தோடு தங்க வைக்க...

அத்தினாபுரம்
அழைத்துப் போனான்;

சகோதரன் பாண்டுவின் –
சம்சாரம் பிள்ளைகளுக்கு...

துஷ்டமகன்
துரியோதனன் பேச்சைக் கேட்டு –
திருதராட்டிரன்
தீமை நினைக்க லானான்!

இது
இப்போது –
கண்ணபிரான்
கவனத்திற்கு வர...

குந்தியும் – அவளது
குமாரர்களும் – அங்கு
எவ்வாறு உளர் என்றறிய
எண்ணினான்; அதைத்
தெரிந்துவர – அக்குரூரரைத்
தேர்வு பண்ணினான்!

'அக்குரூரரே!
ஆன்றமைந்த குணாளரே! உமது –
அறவலி கண்டு
அஞ்சுவரன்றோ வன்கணாளரே?

ஆதலால் உமைத் தேர்ந்தேன்
அத்தினாபுரம் செல்ல; என்
அத்தை குந்திதேவியும்
அவள் குமாரர்களும் – அங்கு
அரவணைக்கப் படுகின்றாரா
அவமதிக்கப் படுகின்றாரா –

என்றறிந்து
என்னிடம் வந்து சொல்ல!

கணவனை இழந்து –
கௌரவம் இழந்து –
கொழுந்தன் மனையில் – தீக்
கொழுந்துகள் மத்தியில்...

அவத்தைப்படுகிறாள் – என்
அத்தை – என்றெனக்கு
அறிவுறுத்துகிறது என்
அகமனம் இன்று;
நிலைமையைக் கண்டுவாருங்கள்
நீங்கள் நேரில் சென்று!'

கண்ணன்
கேட்டுக்கொள்ள...

அக்குரூரர்
ஆகட்டும் என்றார்;
அடுத்த நாளே
அத்தினாபுரம் சென்றார்!

விழியிலா வேந்து
வரவேற்றான்...

அக்குரூரரை
அன்புகொண்டு;
ஆரத்தி எடுத்தாள்
அரண்மனைப் பெண்டு;
அதன்பின்
அரச மரியாதையோடு – அவரை
அழைத்துச் சென்று
ஆசனத்தில் இருத்தி...

அருகிருந்து
ஆலவட்டம் வீசினாள் ஒருத்தி!

மதுராபுரி
மன்னனைப் பற்றியும்;
மன்னனின் பேரன்
கண்ணனைப் பற்றியும்;



அக்குரூரரிடம் – கேட்டு
அறிந்தான் குருட்டரசன்;
இருவிழி போலவே
இதய வெளிச்சமும்
இழந்து நிற்கும்
இருட்டரசன்!

வீடுமன்;
விதுரன்;
துரோணர்;
துரியன்;

ஆகியோரிடமும்
அக்குரூரர் அளவளாவினார்;
அதன் பிறகு
ஆகாரம் உண்டு – சற்று
அரண்மனைப் பூங்காவில்
அவருலாவினார்!

அவரைக்காண
அங்கு வந்தாள்

குந்தி தேவி;
குளிர் விழியில் வெள்ளம் மேவி!
'சோதரரே! நம்
சொந்தங்கள் நலம்தானா?
அந்தக் கண்ணன் – இந்த
அத்தையை நினைக்கின்றானா?

செந்நாய்கள் மத்தியில் –
சிக்கிக் கொண்ட...

பெண்மானாய் – என்
பிள்ளைகளோடு இங்கிருந்து –
போராடுகிறேன்; கண்
புனலில் நிதம் நீராடுகிறேன்!

பாண்டவர்களின்
பராக்கிரமம் கண்டு –
பொறாமையில் துரியோதனன்
பொங்கி...

அவர்கள்
ஆகாரத்தில்
விஷம் சொரிந்தான்; பல
விதங்களில் சதி புரிந்தான்!

மகனை வழிப்படுத்த – என்
மஞ்சனுக்கு வக்கில்லை;
என் பிள்ளைகளுக்கும்
எனக்கும் திக்கில்லை!

கண்ணன்
காப்பாற்றுவானா? இந்தக்
கலத்தைக்
கரையேற்றுவானா?'

அக்குரூரர் குந்திக்கு
ஆறுதல் கூறிவிட்டு...

திருதராட்டிரன்
திருமாளிகை போனார்;
அறங்களை
அவனுக்கு எடுத்தோத லானார்!

'மன்னா!
மகன்களிடையே...

பாரபட்சம்
பார்க்காதே;
பார்த்துப்
பாவங்களைச் சேர்க்காதே!

துரியனைத்
திருத்து; அவனை
இருக்க வேண்டிய இடத்தில்
இருத்து!'

இவ்வாறு அக்குரூரர்
இடித்துக் கூறியதும்...

பார்வையற்ற மன்னன்
பேசினான்; அவர்
கூறிய குற்றம் குறித்து – சற்று
கூசினான்!

'அக்குரூரரே! நான் –
அறிவேன் என் பாரபட்சம்;

எனினும்
என்னைப்
பித்தாக்கி வைத்திருக்கிறது
பிள்ளைப்பாசம்; அது உச்சம்!

இது விதி; விதிக்கு விலக்காக –
ஏதொரு விதி?
எப்போது
என்ன நடக்குமென்று –
கண்ணன் அறிவான்; அவனுக்குக்
கூறுங்கள் என் துதி!'

அக்குரூரர்
அத்தினாபுரம் விட்டார்;
புரவித் தேரேறி – மதுரா
புரிக்குப் புறப்பட்டார்!

பரீட்சித்திடம்
பகர்ந்தார் –
சுகர்; கிளி
முகர்!

'பரீட்சித்து மன்னா!
பாசம்...
வழுக்க
வல்லது –
குளத்திலிருந்தாலும்; மனித –
உளத்திலிருந்தாலும்!'

(தொடரும்)

480



**ஜராசந்தன்**

கதிர்கள் மேலேறிக்
கயல்கள் –
சதிர்கள் மெல்லப்பயின்று
சந்தோஷிக்கும் வயல்கள்;

வயல்கள்
வாடாதிருக்கப் –
பருவம் தவறாது வந்து
புனல் வார்க்கும் புயல்கள்!

வேழங்கள்
வேண அளவு உண்ண –
வரைகள் நிறைந்த
வரைகள்;

வரைகளின் – தாழ்
வரைகளில் –
வாழைப்பூ மடல் போல் – செவிகள்
விரைத்து நிற்கும் மரைகள்!

நீர் என்னும்
நீள் வாள் ஏந்தி – அதன்
கூர் கொண்டு நிலத்தைக்
கூறு போடும் நதிகள்;

நதிகள் ஓரம்
நடக்கும் ஓதிமங்கள்; அவை –

# கிருஷ்ண விஜயம்

61 கவிஞர் **வாலி**



இறகு முளைத்த
இலவம் பஞ்சுப் பொதிகள்!

பார்க்குமிடமெல்லாம்
பசிய நிறம்;
வான்பறவைகட்கு – அதைவிடவா
வசிய நிறம்?

ஆயினும்
அவற்றின் கூட்டம் –
வாய்வைத்தும் கூடத் – துளியும்
வாடிப்போவதில்லை தோட்டம்;

என்ன செய்ய?

ஏராளமான விளைச்சல்!
எந்தப் புள்ளும் – இரைப்பை
ஏற்கும் அளவுதானே கொள்ளும்!

நாட்டு வளத்தை –
நவிலப் போனால்...

பஞ்சம் என்பதை – என்னவென்று
பார்த்தறியாத மன்பதை; ஆம்;

அவர்கள்
அனுபவத்தில் –
பார்க்க வாய்ப்பேயில்லை – வன்



பசிவந்து உயிரைத் தின்பதை!

எந்தத் தினமும்
எது தரித்திரம் – என்று
மருந்துக்கும் கண்டதில்லை
மகத நாட்டின் சரித்திரம்!

அத்தகு
அருமை பெருமைமிக்க –
மகத நாட்டின்
மன்னவனின் நாமம்...

ஜராசந்தன்;
ஜகப்புகழ் ஈட்டியவன்;
ஜலத்திலும் நிலத்திலும் –
ஜயக்கொடி நாட்டியவன்!

அவனது –
அன்பு மகள்கள்...

அஸ்தி; பிராப்தை; என
அழைக்கப்பெற்ற – இரு
அம்புலிகள்; அந்தம் ஆதி
அவிர்ந்த அம்பொற் கிளிகள்!

ஜராசந்தன் –
ஜீவனையே வைத்திருந்தான்...

தன்
தனயைகள் மீது;
பொத்திப் பொத்தி வளர்த்தான்
புத்திரிகளை –

வருத்தம் என்பதன்
அருத்தம் என்னவென்று கூட –
அவர்கள்
அறிந்திட வாய்ப்பில்லாது!

மகள்கள்
மலர்மேனிகள் மேல் – தெருமண்
துகள்கள்
துளியளவு மேவக் கண்டால்...

துடிதுடித்துப் போய்த்
துப்புரவாளர்களைக் கொண்டு –
துவசம் தாங்கித்
துரகங்கள் கட்டிய தேரோடும் –
வீதிப் புழுதிகளை

விநாடிக்கு விநாடி வாரிடுவான்;

பூவைகள் மீது
பூவரச மரத்துப் –
பூ விழுந்தாலும்
பூமியை வளைத்தாளும் – அப்
பூபாலன் தன் விழியிரண்டில்
பூ விழுந்தாற் போல் வீரிடுவான்!

காமன்
கரும்பு வில்லை –



ஓங்கிப் பிடிக்கும்
ஓர் இளவேனிற் காலத்தில்...

புரவலனின்
புதல்வியர் இருவரும் –
பூப்பெய்திப்
புஷ்பவதிகள் ஆயினர்;
அவர்களது
அந்தமில்லா அந்தம்பற்றி –
அகவல்கள் பாட
அரண்மனைப் புலவர்கள்...
வாயும்
வார்த்தையுமிலாது போயினர்!

ஜராசந்தனுக்கு
ஜனித்த – அந்த
ஜவ்வாதுப் பிரதிமைகள்
ஜரிகைப்பட்டு புனைந்து வரின்...

கதிரவனுக்கும்
கண் கூசும்; அந்த
மெல்லியலார்
மென்னடை கண்டு –
வெட்கமுற்றுத் தென்றல்
வேறிடம் போய் வீசும்;

நிலவு – அவர்களது
நீள் விழிகளுக்குத்
தனது சீதனமாய்த்
தண்ணொளியைப் பூசும்!

ஆர் இந்த
அழகிகள் என்று –
ஆகாயத்தில் நின்று
அரம்பையர் கூட்டம் பேசும்!

'ராஜ வம்சத்து
ரதிகள் இவர்கள்!' என –
ரகசியமாய்ப் பேசிக்கொள்ளும்
ராஜமாளிகையின் சுவர்கள்!

'இவர்களைத் தமது
இல்லக் கிழத்தியராய்ப் –
பெறப் போகும்
பெரும் புண்ணியவான்கள்...

எவர்கள்?
எங்கிருக்கிறார் அவர்கள்?'
என்று –
ஏக்கப் பெருமூச்சு விடுவர் –

அஸ்தி; பிரஸ்தை; இருவரின் –
அளக பாரத்தை...

நெய் தடவி
நீவி;
சிடுக்கெடுத்துச்
சீவி;
சிங்காரிக்கும்
சேடிகள்;

அவர்கள் பிலிற்றும்
அந்தப் பெருமூச்சின் –
ஆவி பூத்து நிற்கும்
அந்தப்புரத்து ஆடிகள்!

இரண்டு
இளவரசிகளும்...
கற்பும் பொற்பும் – ஒரு சேரக்
கலந்ததோர் கலவை;
ஆதலால்தான்
அவர்களை –
அருகருகே
அமரவைத்து –
கண்டவர்
கண்படாதிருக்கக் –
கன்னங்களில்
கருஞ்சாந்துப் பொட்டுவைத்து...

வயோதிகப் பெண்டிர் –
வாய்குவித்து இடுவர் குலவை!

அன்றாடம் –
அவை கூடுகையில்...

ஜராசந்தன்
ஜம்பம் பேசலானான்;

அவனது
அன்பு மகள்களின் –
அருமை பெருமைகளை
அடுக்கடுக்காக...

வீற்றிருக்கும்
வித்தகர் நடுவே வீசலானான்!

"பெற்றாலும்
பெற்றேன்;
பெறுதற்கரிய – இரு
பெண்களைப் பெற்றுப்
பெரும் –
பெருமிதம் உற்றேன்!

வானில் உதிக்காது – என்
ஊனில் உதித்த நிலாக்கள்;
வேரில் விளையாது – என்
வேர்வில் விளைந்த பலாக்கள்!

கலைகள்;
கல்விகள்;
இவை
இரண்டிலும் – கரை
சேர்ந்து நிற்கின்ற
செல்விகள்!

வலிவு மேவிய
பொலிவு;
செறிவு மேவிய
அறிவு;
புரிவு மேவிய
பரிவு;
விரிவு மேவிய
தெரிவு!

முகத்தைத் தவிர – என்
முகத்தைத் தாண்டியும்
முளைத்த இரு கண்கள்; இந்த
முடிமன்னனின் இரு பெண்கள்!

'நான்கு கண்ணன் – மகத
நாட்டு மன்னன்!' என்று –
திசையெங்கும் சுற்றி – காற்று
தெரிவிக்கும் என்னைப் பற்றி!

ஆக...
அவையோரே!

ஏற்றம் மிகுந்த
எனது மகள்களுக்கு –
ஏற்ற மணமகன்கள்
எங்கிருக்கக் கூடும்?

அந்த
அரசிளங் குமரர்கள்...

சூட்டுக்கோல்களா யிலாது – நிஜ
சூரியன்களா யிருப்பராயின் –
அட்டியின்றி – நான் பெற்ற
அம்புஜங்கள் பூமாலை போடும்!"

இன்னணம்
இறுதியாக உறுதியாக...

ஜராசந்தன் கூறி எழ
ஜனசபை கலைந்தது;

மன்னவன்
மகள்களுக்கு
மணமகன்கள் தேடி – எண்டிசை
மந்திரிகள் குழு அலைந்தது!

ஆனால் –
அதே சமயம்...

வரன்கள்
வாய்த்து –
மகள்களுக்கு
மன்றல் முடித்து விட்டால் –

பிரியமுள்ள மகள்களைப்
பிறகு –
பிரிய நேரிடுமே என்று
பிரலாபிக்கத் தொடங்கினான்...

மன்னன் ஜராசந்தன்
மாளிகை ஜன்னல்கள் வழியே –
ஆகாயத்தைப் பார்த்தவாறு
அந்திப் பொழுதுகளில்;

அவனது இரு
அன்புக் கிள்ளைகளும் –
அணுப் பொழுதும்
அகலாது ஆடிக்கிடந்தன...

நாளும் அவனது
நாடி நரம்பெனும் விழுதுகளில்!

நாட்பட –
நாட்பட –
மன்னன் – தன்
மனத்தை மாற்றிக்கொண்டான்;

'பெண்ணுக்குப்
பெற்றோர் நிழல் – அவள்
வேறொரு
வீடு சேரும் வரை;

அதன்பின்
அந்த –
வீடுதான் அவளுக்குக்
காடு சேரும் வரை!'

என்று
ஏற்பட்டிருக்கும் –

மரபின் மாண்பை
மண்டையில் ஏற்றிக் கொண்டான்!

ஒருநாள்
ஒரு நல்ல வரன் பற்றி...

அமைச்சர்கள்
அரசனிடம் அறிவித்தனர்;
குலம் –
குணம் –
வம்சம் –
அம்சம் –

முதலிய விவரங்களை
முழுமையாகத் தெரிவித்தனர்!

'புகழ் வாய்ந்த
புரவலர்கள் –
பாம்பரையில்
பூத்தவன் மணமகன்;

சாமுத்திரிகம் என
சாற்றப் பெறும் –
அங்க விலக்கணம்
அனைத்துமமைந்த குணமகன்!

ஆயகலைகள்
அனைத்தும் அறிந்தவன்;

பொல்லாரைப்
போரில் –
புறங்காண வல்ல
புஜபலம் செறிந்தவன்;

குவலயத்தை – ஒரு
குடைக் கீழ் கொணர்ந்து –
கொடியுயர்த்திக்
கோலோச்சத் தக்கவன்;

மகதநாட்டு
மன்னர் பிரானின் –
மருமகன் ஆவதற்குரிய
மேன்மைகள் மிக்கவன்!'

மந்திரிகள்
மணமகனின் –
ஜாதகத்தை விவரித்ததும்
ஜராசந்தன் விவாகத்திற்கு...

உரிய தேதியை
உடனே தேர்ந்தெடுத்தான்; 486
அவ்வாறு ஓர்
ஆண்டகை வரனாக –
அமைவது
அபூர்வ மென்று...

அந்த
அரசிளங்குமரனுக்கே – தன்
தனயைகள் இருவரையும்
தாரை வார்த்துக் கொடுத்தான்!

ஜராசந்தன் –
ஜகஜோதியாக நடத்தினான்...

புதல்விகள்
பூமுடிக்கும் திருமணத்தை;

பார் அதுகாறும்
பார்த்தறியா ஒரு மணத்தை!

அன்னணம்
ஆசை ஆசையாய்...
மணம் முடித்து
மணாளன் மனைபுகுந்த
மகள்கள் இருவரும் – ஒருநாள்
மஞ்சள் குங்குமம் இழந்து –
வந்து நின்றதும் – வேந்தன்
வெந்து போனான்;
அதுவும் – தன்
அருமை மருமகன் –
கொலையுண்டான் எனக்
கேள்விப் பட்டதும்...

ஜராசந்தன் – தம்பித்து
ஜடம் போல் ஆனான்!

கொலையுண்ட –
கொற்றவன் மருமகன்தான் –
கம்சன்; போஜ
வம்சன்!

ஜராசந்தனின் –
ஜன்ம விரோதியானான் –
கண்ணன்; கொண்டல்
வண்ணன்!

(தொடரும்)

# கிருஷ்ண விஜயம்

## களத்தில் கண்ணன்

போஜ வம்சனின்; புகழ்
பொன்றாக் கம்சனின்;

கைத்தலம் பற்றிய – தன்னிரு
பைம்பெண்கள் –
கண்ணனால் ஆயினர்
கைம்பெண்கள் – எனும் தகவலை

ஜராசந்தனால்
ஜீரணிக்க முடியவில்லை;
கண்ணீர்ப் புனல்
காய்ந்துபோய்க் – கண்களில்
புண்ணீர்ப் புனல்
புறப்பட்டது; வடியவில்லை!

துவண்டான்;
துடித்தான்; வெங்கனலின்
வாய்ப்பட்ட
வேய்போல் வெடித்தான்;

வஞ்சினத்திற்கு
வடிகாலாகத் – தன்
தடக்கையை ஓங்கித்
தரையில் அடித்தான்;

நறநறவெனப் பற்களை – ஓசை
நாராசமாயெழக் கடித்தான்!

தன் – இரு
தனயைகளின் –
தலைப் பூவை; பொட்டை;
திருமாங்கல்யங்களை;

களைந்த
கண்ணனைக் –
கடிவேன் எனக்
கருச்சித்தான்;

'இடையன்;
மடையன்; கீழ் –
நடையன்;
கடையன்!' எனக்
கண்ணனைக்
கண்டபடி அருச்சித்தான்!

குறுக்கு நெடுக்காய் – இருப்புக்
கொள்ளாது நடந்தபடி...

பொருமினான்;
செருமினான்;
உறுமினான்;

கறுவினான்!

'யாதவ குலத்தையே – இனி
யாண்டும் குவலயத்தின்கண்...

முளைவிடாவண்ணம் – கூர்
முனைகொண்ட வாளால்
கோறுவேன்;
நூற்றுக்கணக்கில் – அந்த
நூலாம் பூச்சிகளை நூறுவேன்;

கால்நடைகள் மேய்க்கும் – அக்
கால் நடைகளை மாய்க்கும் – என்
கைவாள்; இல்லையேல் இது –
பொய்வாள்!' என...

உரைத்தான் சூள்;
உயர்த்தினான் தோள்!

மறுநாளே
மதுராபுரியை நோக்கி –
மகத நாட்டு
மன்னவனான ஜராசந்தன்...

புறப்பட்டான்
போர் நடத்த;
தேர்ந்த சூதன் – அவனது
தேர் நடத்த!

வேந்தின்
வலிய...

இடத்தோள் வலத்தோள்
இரண்டிலும் விளங்கின –
பிறைமுக அத்திரங்கள்
பிதுங்கிய அம்பறாத்தூணி;

இட்ட ஆணைப்படி
இயங்க அவன் வசம் –
இருந்த சேனையின் அளவு
இருபத்துமூன்று அக்குரோணி!

ராஜன் ஜராசந்தனின்



ரத கஜ துரக பதாதி –

மூதூர் மதுரையை
முற்றுகை இட்டது;
படை கிளப்பிய
பூழ்தி –



விழிகளில் படாமல்
விசும்பை மூடி விட்டது!

எவரும்
எதிர்பாராத வண்ணம்...

தங்கள்
தலைநகர்மீது – ஓர் யுத்தம்
திடீரென்று
திணிக்கப் பட்டதில்...

வியந்து –
வெருவி –
வியர்த்து –
வெடவெடத்து –

நகர மாந்தர்
நடுங்கினர்;
ஓட்டுக்குள் ஆமை போல்
ஒடுங்கினர்!

நால்வாய் புகுந்த
கால்வாய் போலே...

குழம்பியது
குழந்தை குட்டியொடு
குடித்தனம் – நடத்தும்
குடிசனம்!

கிருஷ்ணன்
கிஞ்சித்தும் கவலையின்றி...
வழக்கம்போல் – ஒரு
வண்ணச் சிரிப்பை வார்த்தான்;

பிறகு – தன்
பிடர் உயர்த்தி –
நீண்ட விழிகளால்
நீள்விசும்பினைப் பார்த்தான்!

பரந்தாமன்
பார்த்த மாத்திரத்திலேயே –
வாகனகளோடும்
படைக்கலன்களோடும் –

இந்திரன் அனுப்பிய
இரண்டு ஆழித்தேர்கள் –
இறக்கை கட்டிக்கொண்டு
இறங்கின...

மகத்துவம்
மலிந்த –
மதுரா நகரின்
மண்ணில்;

இறும்பூது –
இறுமாப்பு –
இரண்டும்
இழிந்தன ஊரவர் கண்ணில்!

கண்ணன் ஒரு தேரில்;
அண்ணன் ஒரு தேரில்;

இன்னணம்
இருவரும் –
இசைமிகு
இந்திரன் தந்த இரு தேரில் –

ஏறினர்; பொறுமை
மீறினர்;

சாமானியராய்ச்
சனித்தவர்கள் –
சன்னதம் வந்தாற்போல்
சண்டமாருதமாய்ச் சீறினர்;
தக்கணமே –
தேசுடைய தேவுகளாய் மாறினர்!

கண்ணன் தேரில்
கருடக் கொடி;
பலராமன் தேரில்
பனைமரக் கொடி;

படபடவென்று
பறந்தன – எதிர்
வருகின்ற காற்றை
விழுங்கியபடி!



தாங்கி நின்றான் ஒரு தேரோட்டி -
'தாருகன்' எனும் பேரை;
புரந்தரன் அனுப்பிவைத்த
புகழ்சால் அப்பாகன்தான் -
புரவிகளின் பின்னங்கால்கள்
புட்டங்களில் படும்படி...

செருக்களம் நோக்கிச் -
செலுத்தினான் கண்ணனின் தேரை!

கண்ணன் - போர்க்
களம் புகுந்ததும்...

பாஞ்சசன்னியம் எனும்
பால்வண்ணச் சங்கெடுத்து -
மும்முறை
முழக்க; அது -
எதிரிகள் உயிர் வயல்களை
ஏர்போல் உழக்க;

ஜராசந்தன் - தனது
ஜன்ம சத்துருவைக் -
கண்ணெதிரில்
கண்டதும்...

ஏகமாய்
ஏசினான்;
வார்த்தைகளை
வரன்முறையின்றி வீசினான்!

'கோவிந்தன் என்னும்
கோழையே! முட்டி -
மோதுதற்குக் கொம்பில்லாத
மோழையே!

உன்சாவுக்கு இங்கே - நீயே
ஊதுகின்றாயோ சங்கே?
என்
எதிர்நின்று பொருதினால் - நீ
மாள்வது திண்ணம்; இனி
மீள்வது எங்கே?



சூடு;
சொரணை;
வெட்கம்; மானம்; இவையெலாம் -
விட்டுவிட்டு...

வீடுதோறும்
வெண்ணெய் திருடித் தின்றவனே!
பொய்யெனும் சொல்லுக்குப்
பொருளாக நின்றவனே!

கல்வி கேள்வியற்று - வைகலும்
கறவை மேய்க்கச் சென்றவனே!
பிழைக்கெல்லாம் -
பிழையாய்ப் பெரும்பிழையாய்...

தாய்மாமனையே
தரையில் மல்லாத்திக் - கை
முட்டியால் குத்தி
மூர்க்கமாய்க் கொன்றவனே!

கண்ணென வளர்த்த - என்



கண்மணிகளுக்கு;
மாவீரன் கம்சனுக்கு –
மாலையிட்ட பெண்மணிகளுக்கு;

வழங்கினாயே
வெள்ளைச் சேலை; உனை –
வகிராது எனது
வாளுக்கு வேறென்ன வேலை?

கைம்மை எய்திக்
கையறு நிலையில் ஏங்கக் –
கைதவனே!
கை வைத்தாயே – எனது...

குமாரிகளின்
குங்குமப் பொட்டில்;

உன்
உயிரை –
உடலினின்றும்
உருவாது...

என் தோளில் அழகுக்காகவா
ஏந்துகிறேன் அம்புப்புட்டில்?'
என்று – ஆக்குரோஷமாக
ஏவினான் அனேக அம்புகளை...

ஜராசந்தன்
ஜகன்னாதனை நோக்கி;
அன்னணம்
அவன் –
அனுப்பிய அம்புகளை
அநாயாசமாக அழித்தான் –

கண்ணபிரான் – தன்
கவின்மிகு திருத் தோளில் –
சார்த்தியிருந்த
'சார்ங்கம்' எனும் வில் தூக்கி!

வாசுதேவன் – கையில்
வாங்கிய வில்...
சடசடவெனச்

சரமழை பெய்தது;

ஆனை
அசுவம் –
ஆகியவற்றின்
ஆவியைக் கொய்தது!

மகத நாட்டு
மன்னன் படையும்;
மதுராபுரி
மாயவன் படையும்;

இடையறாது பொருதி – தரையில்
இழிந்தது வெள்ளமாய்க் குருதி!

உண்டானது
ஊர் நடுவே –
சொதசொதவென
சோரி ஏரி;

கை சலித்து
மெய் சலித்து –
மகத வேந்து நின்றான்
மனத்தில் சோர்வு ஏறி!

ஜராசந்தனால் – கண்ணனை
ஜயிக்க முடியவில்லை;

பலராமன் – தன்
பாணங்களால் –
'பொக்'கெனப்
பொடித்தான்...

ஜம்பம் பேசிய –
ஜராசந்தனின் நெடிய வில்லை!

தேரை இழந்து;
தேர்ப்பாகனையும் இழந்து;
தன்னந்தனியனாய்த் –
தரையினில்...

ஜராசந்தன் – உணர்வற்ற





ஜடம் போல் நின்றான்;

'கொல்லவா – இந்தக்
கொடியவனை?' என்று –
பலராமன் – தன்
பின்னோனை வினவ...

ஜராசந்தனின்
ஜாதகத்தை –
நன்கறிந்த
நந்தகுமாரன் –

'வேண்டாம்; அவனை
விட்டுவிடு; அவனைக்
கொல்லும் உரிமையை – விதி
கொடுத்திருக்கிறது –
வேறொருவன் கையில்; அதுவும் –
வேறொரு காலத்தில்!' என்றான்!

வாசுதேவனால்
விடுவிக்கப்பட்ட –
மகத நாட்டு
மாமன்னன் ஜராசந்தன்...

தலைகுனிந்தவாறு
தலைநகர் திரும்பினான்;

இரண்டு
இளைஞர்கள் –
உயிர்ப்பிச்சை தந்து – தன்னை
ஊர் திரும்பச்
சொன்னதையெண்ணி...

மாவீரனான அவன்
மனமொடிந்து – இனி
உயிர் விடுவதே
உசிதமென விரும்பினான்!

துறவு வரித்து;
துவராடை தரித்து;
வனம் புகவும்; பின்பு
வானம் புகவும்...

முடிமன்னன் ஜராசந்தன்
முடிவு செய்ததை –

அவனுக்கு
ஆண்டுதோறும் –
அரசிறை கட்டும்
அடுத்த தேசத்து அரசுகள்...

ஒப்புக்கொள்ளாது
ஒருசேர நின்று தடுத்தனர்;

வாய்
வார்த்தைகளால் – அவனுக்கு
ஊக்கமும்
உள்வலியும் கொடுத்தனர்!

(தொடரும்)



## கண்ணனுக்கு வந்த கவலை

'மகதநாட்டு
மன்னவனே!
வளைத்த
வில்லாலும்; தடக்கையில்
வாங்கிய
வாளாலும்...

மாற்றலர் உயிர்களை –
மறக்களத்தில் தின்னவனே!

வலி எனும்
வார்த்தைக்கு –
வீங்கிய தோள்களால்
விரிவுரை சொன்னவனே!

விரிந்த
விசும்பையும் –
விஞ்சி நிற்கும் புகழில்
வெள்ளை வாரணன் அன்னவனே!

இதுகாறும்
இவ்வுலகில் –

ஜராசந்தனே! எவருனை
ஜயங்கொண்டார்? உனைப்
பார்த்த மாத்திரத்தில்
பகைவரெலாம் பயங்கொண்டார்!

பொருதும்
போர்க்களம் – உன்னளவில்
நீச்சு இடும்
நீர்க் குளம்!

குளித்துக் குளித்து – அதைக்
குருதிப்புனல் ஆக்கியவன் நீ;



63 கவிஞர் வாலி

மகத
மண்ணுக்கும் மாந்தர்க்கும் –
வசை
வாராது –
மேலும் மேலும்
மாண்புகளைத் தேக்கியவன் நீ!

கறவை மேய்க்கும் – அந்தக்
கண்ணனிடம்...

தோற்றுப் போனதால்
தொய்ந்து போவதா? மனம் –
நாட்பட்ட துணிபோல்
நைந்து போவதா?

துவராடை கட்டிக் கொண்டு –
துறவு ஏற்பேன் என்பதா?
கள்ளும்
கறிச் சோறும் –
கனக வட்டிலில்
காத்திருக்க...

காடு சென்று –
கந்த மூலம் தின்பதா?

புழு
புலியாகும் பூமியில் –
புலி
புழுவாகலாமா?
ஏந்தலே! நீ
எடுத்த முடிவு...

மகத
மரபுக்கு –
வாய்த்த
வழுவாகலாமா?

ஒரே
ஒரு தோல்வி; அதுவும்
சிறுவர் இருவரால் நேர்ந்த
சிறு தோல்வி; அது...

ஜகமெங்கணும்
ஜயக்கொடி நாட்ட வல்ல –
ஜராசந்தனை – ஒரு
ஜடாமுடியனாய் ஆக்குவதா?

மாற்றலர் –
மண்டைகளை...

உறை வாளை எடுத்து
உருட்டிய கையை –
உருத்திராட்சத்தை எடுத்து
உருட்டும்படி ஊக்குவதா?

கண்ணனும்; அவன்
அண்ணனும்;

வெல்ல முடியாதவரோ? எவரும்
கொல்ல முடியாதவரோ?
களத்தில் எம்மனோர் –
கரத்தில் ஏந்திய –
கட்கத்தால் – உயிர்களைக்



கல்ல முடியாதவரோ?

வேந்தே!
வெற்றியும் தோல்வியும் –
வெஞ்சமரில் மாறி மாறி
விளையும்;

தொடர்ந்து முயன்றால் –
தோல்வியை – உங்கள்

தொன்மை வீரம்
தோய்ந்த தோள்கள் களையும்!

கமண்டலம் விடுத்துக்
கட்கம் ஏந்துக;
கண்ணன் – அவன்
அண்ணன் – ஆவிபறித்து
ஆக்கைகளின் புண்ணீரை
அமுதமென மாந்துக!'

இவ்வாறு – ஜராசந்தனுக்கு
இதர அரசர்கள்...

கொஞ்சம் கொஞ்சமாகக்
கொம்பு சீவினர்; கண்ணனைக் –
கடிவதற்காக – அவனைக்
களம்புக ஏவினர்!

ஜராசந்தனை விரட்டி –
ஜனங்களை வாழ்வித்ததற்காக...

கண்ணனுக்கும்
கண்ணனின் அண்ணனுக்கும் –
மதுராபுரியில்
மாபெரும் அரசு விழா ஒன்று –

சீரும்
சிறப்புமாக நடந்தது;
உவகை
உச்சம் ஏற; தலை
உச்சத்தில் பெரும்
பிச்சம் ஏற;

ஊரே –
உன்மத்தத்தில் கிடந்தது;
நதிக்கரைப் பூக்களின்
நாற்றத்தை...

ஏந்தி வந்து
எங்கணும் விசிறியவாறே –
தென்றல்
தெருக்களைக் கடந்தது;

மன்பதையின் –
மனத்துள்...

இதுகாறும்
இருந்த –
வெருவலை – இந்த
விழா வேரொடு இடந்தது!

சில நாள்கள்
சென்ற நிலையில்...

மன்னன் ஜராசந்தன்
மீண்டும் சண்டையிட வந்தான்;

நகரத்தின்
நாலாபுறமும் –
நால்வகைச் சேனையை
நீள நெடுக நிறுத்தி...

முற்றுகையிட்டு – போர்
முழக்காக முழவோசை தந்தான்!

கண்ணன் அவனைப் – பிடரியில்
கால்பட விரட்டினான்; தன் –
பவளச் செவ்வாயில்
பாஞ்சசன்னியத்தை –
வைத்து ஊதி – மகத நாட்டு
வேந்தை அரட்டினான்!

ஜன்மப் பகை கொண்ட
ஜராசந்தன்...

தோற்றுத்
தோற்றுத் – தன்
தேசம்
திரும்பினான்; எனினும் –
வெல்லும் வரை – அவன்
வெஞ்சமரை விரும்பினான்!

பகவானைத் தீர்த்துக்கட்ட –
படை திரட்டிக் கொண்டு – அவன்
பதினேழு முறை எழுந்தான்;
பதினேழு முறையும் விழுந்தான்!

ஆயினும் –
அவனது –
உள்ளத்தினின்று நம்பிக்கை
உதிரவில்லை; நாள்கள் சில –

காத்திருக்க நேர்ந்ததற்குக்
காரணம் – அவனுக்குச்



சாதகமான தொரு
சந்தர்ப்பம் குதிரவில்லை!

பதினெட்டாம் முறை
படையெடுக்க முனைகையில் –
ஜராசந்தனுக்குத் தோதாக
ஜதையொன்று தோன்றியது;

கண்ணனை எளிதில்
கடியலாம் எனும் எண்ணத்தை –
அவன் உள்ளத்தில்
அது ஆழ ஊன்றியது!

ஜராசந்தனுக்கு வாய்த்த
ஜதையின் பேர் 'காலயவனன்';

அவன்
ஆயர் குலத்தை –
அடியோடு
அழிக்கும் குரோத எண்ணம்...

கங்குலும் பகலும் –
கடுகளவும் கலையா கவனன்!

மதுராபுரி
மண்ணில்...

காலயவனன்
கால்படக் கூடும் என்று –
காற்று வாக்கில்
கண்ணன் கேள்விப்பட்டதும்...

அவசர
அவசரமாக –

பலராமனோடு – கலந்து
பேசினான்; சில –
விவரங்களைக் கவலையோடு
வாய்வழி வீசினான்!

'அண்ணா! நீ –
அறிய மாட்டாய்...

யார் – கால
யவனன் என்று;
யாதவர்க்கெலாம் – அவன்தான்
யமன் இன்று!

நானும்
நீயும்...

விளைந்த
விருஷ்ணி குலமும்;
வளர்ந்த
விந்தர் குலமும்;

அவனால் –
அழியக் கூடும்;
அவனுக்கு
அருளப் பெற்ற ஆற்றல் – நம்
ஆனைப் படைகளைக் கூட
அனாயாசமாகச் சாடும்;

உதிர வெள்ளம்
ஊரெங்கும் ஓடும்;

மஞ்ச ளிழந்து
மாங்கல்ய மிழந்து –
மாதரார்
மணிவாய் பிலாக்கணம் பாடும்!

வையமிசை – நம்
வமிசத்தார் என்று சொல்ல –
எஞ்சமாட்டார்
எவரும்;
தடுக்கும் வலியற்றுத்
தகர்ந்து விழும் –
காலயவனன் வருகையால் நம்
கற்கோட்டைகளின் சுவரும்;

மதுராபுரி
மாநகரின்...

களஞ்சியத்தைக் –
கருவூலத்தைக் –
கணப் போழ்தில்
காலயவனன் கைகள் கவரும்;

பொற்பும் கற்பும்
பொலிய நிற்கும் –
அரண்மனைப் பெண்டிரை
அவன் மனம் இவரும்!

எனவே
எல்லாரையும்
காப்பது – நம்



கடன்; இங்கு
காலயவனன்
கால் வைக்கும் வரை
காத்திராது – நாம்
காரியமாற்றவேண்டும் உடன்!'

இவ்வாறு கண்ணன்
இயம்பியதும்...

பலராமன்
பல் தெரியச் சிரித்தான்;
சிரித்துவிட்டுத் – தனது
சிந்தையை விரித்தான்!

'நீலவண்ணக் கண்ணா!
நீயா கவல்வது?

மணலுக்குள்
மறைந்து வாழும் –
நுணலுக்கு அஞ்சுவதாய் – அதை
நூறவல்ல அரவா நுவல்வது?

காலம் வந்தால்
காலமாகும் மானுடன்; அந்தக் –
காலயவனன்; அய்யனே! நீ
காலக் கணக்கு அற்றவன்!

தானெனும்
தருக்கு –
தலைக்கேறி நின்ற
தானவரைச் செற்றவன்!

யாதவனாய் வந்துதித்த
மாதவன்;
தொல்லை அறத்தின்
தோற்றத்தை அப்பிநிற்கும் –
அல்லை அழிக்க வந்த
ஆதவன்!

நீ
நிலமிசை இங்கிருக்க;
அக்கரம் இக்கரம் தனில் –
சக்கரம் சங்கிருக்க;
விருஷ்ணி குலத்தார்க்கும் –
விந்தர் குலத்தார்க்கும் –
விளைவதுண்டோ
வீவு?

மூலத்திற்கெல்லாம் மூலம்
முன் நிற்க...

கண்ணனைக்
கண்ணனென்று கருதும் –
கட்கம் ஏந்திக்
களம் புகுந்து பொருதும் –
காலயவனன் அல்லவோ –
காண்பான் சாவு!'

பலராமன் இவ்வாறு
பகர்ந்ததும்...

வாசுதேவன்
விளக்கினான் –
உண்மை நிலவரத்தை; தனக்கு –
உண்டான கலவரத்தை!

'அண்ணா!
ஆகாது எதுவும் என்னால் –
யாதவ குலத்திற்கு
யாண்டும் குருவாயிருக்கும் –
கர்க்க முனிவரின்
கண்டுபிடிப்புக்கு முன்னால்!

ஆம்;
அருள்மிகு – நம்
ஆசாரியர் தான்
அந்தக் காலயவனனை...

நம் குலத்தை அழிக்கும் –
நமனாக ஆக்கிவிட்டார்;
அன்னணம் ஒருவனை ஆக்க –
அவர் அரும்பாடு பட்டார்!'

பலராமன்
பிரமித்து நிற்க...

முனிவர் – ஏன்
முனிந்தார் – எனச் சொன்னான்
முகில் வண்ணன்;
முளரிக் கண்ணன்!

(தொடரும்)





கவிஞர் வாலி

# கிருஷ்ண விஜயம்

64

## காலயவனன் கதை

பலராமனுக்கு –
பலராமன் என்றும்;
கிருஷ்ணனுக்கு –
கிருஷ்ணன் என்றும்;

நாள்பார்த்து
நற்பெயர்கள் இட்டவர் –
அவர்;
அவர் ஓர் அருந்தவர்;
அண்டினார் மனப்பிணியை
அகற்றவல்ல மருந்தவர்!

ஆயர்குலத்தார்
அனைவருக்கும் –
ஆசிரியர் பிரானாய் நின்று
அவர்தம்...

நலம்பொலம்
நாலையும் நிர்ணயிக்கும் –
அந்த
அருளாளர் நாமம் 'கர்க்கர்';

சகலரும் வழிபடத்தக்க
சப்தரிஷிகளின் வர்க்கர்;
தொன்னூல்களில்
தோய்ந்திருக்கும்...
அறங்காணும்
ஆய்வவையில் – பிரதிவாதியைப்
புறங்காணும்
புகழ்சால் பெருந் தர்க்கர்!

மதுராபுரியில்
மனைக்கைதியாக –
வாழ்ந்துகொண்டிருந்த
வசுதேவன்...

தன் – இரு
தனயருக்கும் –

நாமகரணம் ஜாதகரணம்
நிகழ்த்தி வைக்க –
கம்சனுக்குத் தெரியாமல்
கர்க்க முனிவரைத்தான்...

ஆயர்பாடிக்கு
அனுப்பிவைத்தனன் முன்னம்;

கல்விக்
கடலின்
கரைகண்ட கர்க்கர் – சகல
கலாவல்லியின் ஆண் சின்னம்;
அவர்மாட்டு
அறிவு மலிந்திருக்கக்கண்டு
ஆற்றாது



7-11-04

பார்க்க முடியாது – அவர்
பண்பு நலன்களில் பின்னம்;
கர்க்கர் – சீலக்
கனலில் புடம்போட்ட சொன்னம்!

ஆவலில் அலையும் அஞ்சையும்
காவலில் வைத்தவர்;
இளம் பிராயத்திலேயே – உடல்
இரும்பெனப் பிறங்கையிலேயே –
இனப் பெருக்கத்தில்
இச்சையற்றுப் போனதனால்...

கன்னியர்க்குக் –
கறிவேப்பிலையாய்க் கைத்தவர்;

அதிகம் பேசாமல்
அளவோடு பேசி –

அவ்வப்பொழுது
அவ்வப்பொழுது...

உதடுகள் இரண்டையும் – மவுன
ஊசியால் தைத்தவர்;

உயிர்
உய்கைக்கு
உதவாது என்று
உலகாயதமான...

நசைகளை –
நாளும் போதும் நைத்தவர்!

குல
குருவான – அத்தகு
கார்க்கர் – நாள் நேரம்
கணித்துச் சொல்லாமல்...

கோகுலத்துக்
கோவலர் எவரும் –

வயல்களில்
விதைகளை நடமாட்டார்;
பிள்ளைகளுக்குப்
பெயர்கள் இடமாட்டார்;
பானைகளில்
பலகாரங்கள் சுடமாட்டார்!

அவர் சொல்லுக்கு
அவ்வளவு மரியாதை;
அவர்
ஆயர்க்கெலாம் மற்றொரு தாதை!

இந்திரியங்களை வென்று
இந்திரிய நிக்கிரக ரென்று –
இந்திரன் முதலானோர்
இசைக்கும் முனிபுங்கவரை –

கடுகளவு புரை



காணக்கிடைக்காத கர்க்கரை –

சாளுவ மன்னன் – ஒரு
சமயம் மடல் விடுத்து –

தனது
தேசத்திற்கு அழைத்தான்;

அவ்
அழைப்பை ஏற்று –
அவனவைக்கு எழுந்தருளிய
அருந்தவசி கர்க்கரை...

நீள்முடி
நிலந்தோய வணங்கி – அவரது
விரிசெவிகளில் – வேந்தனொரு



7-11-04

விண்ணப்பத்தை நுழைத்தான்!

"மூதறிவின் நுனியே! கர்க்க
முனியே! முனிகளில் தனியே!
யாதவர்க் கருளும் –
மாதவக் கனியே!

உன்
உளம்போல் –

ஓவாது ஒழுக்கத்தை
ஓம்பும் ஒருமனத்தை –
ஓதம்சூழ் இப் பூவலயம்
ஓர்வதேது இனியே!

நிமலனே!
நீ –

பாதம் கொண்டுலவும் – ஞானப்
பருப்பதம்; நான்முனம்
பண்ணிய புண்ணியம் – சிரசில்
பட்டதுன் திருப்பதம்!

சிறியேன் – இந்த
சாளுவ தேசத்தின் இறை;
இறையென்றாலும் – இவ்
இறைக்கும் இருக்கிறது குறை!

எனக்குப்பின்
என்பேர் சொல்ல –
எனக்கில்லை – ஓர்
எச்சம்;
என்னை விடவும்
என் வாழ்க்கைத் துணைவிக்கு –
இவ் விஷயத்தில்
இருக்கும் விசனம் உச்சம்!

அரசு;
அரியணை;
அரண்மனை;
ஆள் அம்பு சேனை;

எல்லாமும் இருந்து
என்ன? ஒரு
மகவு இல்லையே – எங்கள்
மணிக்கழுத்தைப் பின்ன;

ஒவ்வோர் இரவும் – தாயின்
ஒக்கலில் இருந்தபடி –
தகத் தகாயமான
தங்கக் கிண்ணத்தில் –

நிரம்பி வழியும்
நிலாச்சோறு தின்ன; சோற்றைக்
குதப்பியபடி
குதலை மொழிகள் பன்ன!

நாளுக்கு நாள்
நாளுக்கு நாள் –
அகவை எனக்குக் கூடுகிறது;
ஆக்கை தளர்ந்து ஆடுகிறது!

மூப்பு வந்தால் – என்
முடியை வைக்க...

இல்லையே
இன்னொரு முடி;
இதனினும் உண்டோ – ஓர்
இறைக்கு மிடி?

சாளுவ குலம்
சந்ததியின்றிக் குன்றுவதோ?
பரம்பரை
பரம்பரையாய் வந்த – அரசுப்
பட்டம் – பாவப்
பட்ட என்னோடு பொன்றுவதோ?

'சூம்பிய வயிறு
சூல்கொள்ளும்; சேயொன்று
சூல்கொண்ட வயிற்றில்
கால் கொள்ளும்!' என்று...

காத்திருந்து
காத்திருந்து –
காற்றில் வைத்த
கற்பூரமாய்க் கரைகிறாள்...

என் மணவாட்டி; கண்ணில்
எந்நேரமும் மழைகாட்டி!

தவசியே!
தயை செய்க;
எனக்கொரு வாரிசு



7-11

ஏற்படத் தண்ணளி பெய்க!"

சாளுவ மன்னன் – இன்னணம்
சாற்றி...

கர்க்கரின்
கால்மலர்களைப் பற்றினான்;
பற்றிய
பாத மலர்களைக் –
கரங்களால் தொட்டுத் தொட்டுக்
கண்களிரண்டில் ஒற்றினான்!

காவலனின்
கல்லனைய தோள்களைப் பற்றி –

மெல்ல
மெல்ல –
கழிவிரக்கத்தோடு
கர்க்கமுனி எழுப்புகையில்...

அவையில்
அமர்ந்திருந்த –
மன்னவனின்
மஞ்சன்...

வாய்விட்டுச் சிரித்தான்; பின்
வார்த்தைகளை விரித்தான்!

"மாண்புமிகு வேந்தே!
மகப்பேறு வேண்டி...

கர்க்கரிடமா தயைபுரியக் –
கேட்பது?
விடாய் தீர்க்கத் தண்ணீரை –
வெண்மேகத்திடமா வேட்பது?

இவர் –
எவர்?
பாலுணர்வு – உட்
புகமுடியாச் சுவர்!

இச்சைகளை வெட்டியவர்;
இந்திரியத்தைக் கட்டியவர்;
எங்கேனும்
ஏந்திழையார் –
எதிர்வரக் கண்டால்
எட்டியென்று எட்டியவர்!

'புவிநடக்கும் –
புலனடக்கம்!' என்று –
புகழ்பெற்ற
புனிதர்;
சையோகம் – ஒரு
பொய்யோகம்; எஞ்ஞான்றும்
மெய்யோகம் – முக்திக்கு உதவி
செய்யோகம் எதுவோ அதுவென்று...

அந்த யோகத்தை மனமொடுங்கி –
அனுட்டிக்கும் மனிதர்!

சுருங்கச்
சொன்னால்...

நாடுபோற்றும் கர்க்கர் – ஒரு
நபும்சகர்;
நடவுக்கு உதவாத – களர்
நிலத்துக்கு நிகர்!"

மன்னன் மைத்துனன் – இவ்வாறு
மொழிந்ததும்...

அவையில்
அமர்ந்திருந்த –
யாதவர்
யாவரும்...

கர்க்கரை நோக்கி –
கேலியாய் நகைத்தனர்; அத்தகு –
துட்டச் சிரிப்பால் – ஒரு
தூய உளத்தைத் துகைத்தனர்;

கோதறு கர்க்க முனிவர்
கொண்டார் கடுங் கோபம்;
ஆ அனையர்
அரிமா என ஆர்த்து –
எவரும் வெருவுமாறு
எடுத்தார் விசுவரூபம்!

'அற்பப் பதர்களே! நீங்கள் –
அறியமாட்டீர் என்னை;
காக்காய்ப்பொன் அறியுமா –

கனவில் புடம்போட்ட பொன்னை?

அஞ்சை
அவித்து – நான்
அருந்தவம்
ஆற்றுவதெல்லாம்...

உங்களுக்கு நன்மையை
உண்டாக்கத்தான்;
துயர் தரும் – உங்கள்
துட்ட வினைகளை – எனது

தூய சக்தியால்
துண்டாக்கத்தான்!

பொல்லாப் பொறிகளைப்
பொசுக்கி வாழ்பவன்...

ஆண்மை
அற்றவன் அல்ல –
அறிவிலிகளும்
அவசரக் குடுக்கைகளும்
அவனைப் பார்த்து
அலியென்று சொல்ல!

ஆசைகளை
ஆர் செற்றவன்?
அவன்தான் நிஜமான
ஆண்மை உற்றவன்!

நான்
நாளும்
ஓம்பும்
ஒழுக்கத்தை அறிந்தும்...

என்னை
எள்ளினீர்கள்;
காரண
காரியமின்றி – சத்துவ

குணமுடைய ஒருவனைக்
குரோதத்தில் தள்ளினீர்கள்!

தற்குறிகளே! எனது
தவ வலிமையால்...

யாதவ குலத்தையே கோறவல்ல
யமன் என்று –
யான் படைப்பேன் – கோடி
யானை பலம் உள்ள பிள்ளை ஒன்று!'

முனிவர் கர்க்கர் – இவ்வாறு
முனிந்து சூளுரைத்து விட்டு...

அடவி சென்று – நீலம்
அருந்திய செம்மலை நினைந்து –
ஆற்றினார் தவம்; அவர்
ஆசித்ததை அருளியது சிவம்!

வரும்
வழியில் – அவரை
வரவேற்று ஆராதித்த – யவன
வேந்தின் அன்புமனைவியிடம்...

உண்டாக்கினார் –
உக்ரமான ஒரு மகனை – தான்
செய்த
சபதத்தை நிறைவேற்ற;

ஆயர் குலத்தையே
அடியோடு கொன்று குவித்து –
எல்லோர்க்கும்
எள்ளும் நீரும் ஊற்ற!

கர்க்கரின் பிள்ளைதான்
காலயவனன்; ஓரிடத்தைக்
கணப் பொழுதினில்
கடப்பதில் பவனன்!

பரந்தாமன்
பலராமனுக்கு – மேற்சொன்ன
விவரங்களை
விளக்கியதும்...

'நாமும் –
நம் இனத்தாரும் –
எப்படித் தப்புவது?'
என்று வினவினான் அண்ணன்;

'இடம் பெயர்வோம்!' என –
இயம்பினான் கண்ணன்!

(தொடரும்)



7-11-04



கவிஞர் வாலி

## துவாரகையின் தோற்றம்

65

குல
குருவின் –
கோபத்தை சபை நடுவே
கோவலர் சம்பாதித்தபின்...

அவர் – தனது
அருந்தவத்தால் –
ஆயர்குலத்தையே
அழிப்பதற்கென ஆக்கிய...

காலயவனனை வெல்லல் –
கண்ணனுக்கும் ஆகாத காரியம்;

ஒழுக்கமுள்ள
ஒரு முனிவரின் –
தவ வலிமைக்கு உண்டு
தெய்வத்தை விடவும் வீரியம்!

எனவே
எண்ணமிட்டான் கண்ணன்...

மதுராபுரி
மக்களை – தனது
மாயா சக்தி மூலம்
மற்றோர் இடத்தில் சேர்க்க;

விசும்பு விட்டு
விசுவகர்மா எனும் –

தேவதச்சன்
தரை வந்து சேர்ந்தான்...

நிழல்வண்ணன் – சற்றே
நிமிர்ந்து ககனம் பார்க்க!

தேவகி மைந்தனை –
தேவதச்சன் துதித்தான்;

அவசர
அவசரமாக
ஆற்றவேண்டிய – ஓர்
அரும்பணியை...

தேவகி மைந்தன் –

# கிருஷ்ண விஜயம்

தேவதச்சனுக்கு விதித்தான்!

'தேவ
தச்சனே!
அழகிய கட்டடக் கலைக்கு –
அச்சனே!

மந்தை
மந்தையாய் வந்து –
மேகங்கள்
மேய்கின்ற மேலைக் கடலோரம்...

திசைகள் –
தெற்கு வடக்காக –
ஆறிரு யோசனைகள்
அகலமுமாய்; ஆதவன் –

கிளம்பி மறையும்
கிழக்கு மேற்காக –
நாலாறு யோசனைகள்
நீளமுமாய்;

மலை ஒருபுறம்; கடல் –
அலை முப்புறம்; சூழ –
அமை ஒரு புரம்; என் –
ஆசிகள் உனக்கு அப்புறம்!'

கண்ணன் இன்னணம்
கட்டளை இட்டதும்...

விசுவகர்மா
விரைந்து செயல்பட்டான்;
நீணிலத்தில் அதற்கு
நிகர் –

இல்லை என்று
இசைக்கும்படி ஒரு நகர் –

சிருட்டித்து – புகழ்ச்
சிகரம் தொட்டான்!

கண்ணன்
கண்டு மகிழ; அவன்
அண்ணன்
அகம் நெகிழ;

தேவதச்சனின்
தூய கை –

தோற்றுவித்த திருநகரம்
துவாரகை!

ககனத்துக் கலைஞன் –
கவனத்தில் கொண்டிருந்தான்...

மதுராபுரி
மன்பதை –
பூராவும் இந்தப்
புது நகரம் துவாரகையில் –



வந்து
வதியப்போகிறது என்பதை!

எவரும்
எளிதில் நகர்க்குள் – புக
ஏலாதபடி
எழுப்பினான் நாலாபுறமும்...

ஆகாயத்தை அளாவும்
அரண்கள்;
அவ்
அரண்கள் மேல் –
அனவரதமும்
ஆயுதம் ஏந்தி நிற்கும் –
படைவீரர்களுக்கான
பரண்கள்!



மாபெரும்
மதில்களுக்குப் புறத்தில் –
முதலைகள்
முகாமிட்டிருக்கும்...

ஆழமான
அகழிகள்;
அவ்
அகழிகளின் கரையில் –
அந்தி முதல் அதிகாலை வரை
அந்தகாரத்தை அகற்ற...

தகதகவென எரியும் – பெரும்
தகழிகள்!
ஊர்க்குள்
உயரம் உயரமான...

மாட
மாளிகைகள்; அம்
மாளிகைகளின்
மண்டைகளைத் தடவி –
மழமழப்பைத் துய்க்கும்
மழைக் கைகள்!

அழகுக்கு
அழகு எனும்படி –
அழகிய
அவ் வூரின்கண் எங்கணும்...

பூக்கள் மேல் அமர்ந்து
பூக்கள் மெல்ல அருந்தும் – தேன்
ஈக்கள் அலைகின்ற – பூங்
காக்கள்; அவற்றை வாழ்த்திக் –
காற்றும் கதிரும் பாடும் – வெண்
பாக்கள்!

ரதங்கள் பவனிவர –
ராஜபாட்டைகள்;
கோயில்கள்;
குளங்கள்;

வாரா
வாரம் –
சனங்கள் கூடும்
சந்தைப் பேட்டைகள்!

மற்றும்
மக்களுக்கான...

மணிமணியான
மனைகள்;
மனைகளின் மருங்கில்
சுனைகள்!

இவ்வளவோ? இன்னும்
எவ்வளவோ!

விசுவகர்மாவுக்கு
வாசுதேவன்
வாழ்த்துக் கூறினான்; அவன் –
வானம் ஏறினான்!

மாயவன் – தனது
மாயாசக்தியால் –
மதுராபுரி வாழ்
மகாசனங்களை ஒரே நொடியில்...

துவாரகை என்னும்
திருநகரில் குடிவைத்தான்;

நகர்
நடுவே –
கற்றூண் எழுப்பி – அதன்மேல்
கருடக் கொடி வைத்தான்!

வரையில் விளைந்த –
வரையின்...

துவாரத்தில் கைவைத் தூதுவோன் –
துவாரகைக்குக் காவலனானான்;

வானவர்
வேந்தனான –
வாசவன்
வாசுதேவனுக்கு ஏவலனானான்!

ஆம்;
அமரேசன்...

'சுதர்மை' எனும்
சபையையும்;
படிமிசை பார்க்கவொண்ணா
பாரிஜாத விருட்சத்தையும்;

அரசனான கண்ணபிரானுக்கு





அனுப்பிவைத்தான் கையுறையாக;
சருவலோக
சரணியனான –
சக்கரவர்த்திக்கு
சிற்றரசு கட்டும் திறையாக!

அஃதேபோல்
ஆயிரம் –
அழகிய வெண்ணிற
அசுவங்களை –

வருணன்
வழங்கினான்;

அஃதேபோல்
அளகாபுரியின் அரசு –
அட்ட நிதிகளை
அரசிறையாக நல்கி –

முகுந்த நாமத்தை
முழங்கினான்!

தேவர்கள் பிறரும்
தத்தமக்குரிய பொருள்களை –
துவாரகைக்கு அனுப்பிவைத்துத்
துதித்தனர்...

நந்தகுமாரனை;
நவநீத சோரனை!

துவாரகை – ஒரு
துறக்கம்போல் துலங்கியது;

கோவிந்தன்
கோலோச்ச –
கோவலர் இனம்
கோதறு இனமாய் இலங்கியது!

மாந்தரில்லா
மதுராபுரியில்...

காலயவனன்
கால் வைத்தான்;

தன்னந்
தனியனாய் –
தடக்கையில் படைக்கலம்
தாங்காத இனியனாய் –

வல்லரக்கன் முன்
வந்து நின்ற...

பூவிழிக் கண்ணன் –
புன்னகை மன்னன் – தன்
பார்வையை – அவன்
பால் வைத்தான்!

காலயவனன்
கண்ணனை எள்ளினான்;

உதடுகள்
உதிர்க்கும் சொற்களை –
உகிர்களாக்கிக் கண்ணன்
உள்ளத்தைக் கிள்ளினான்!

'ஆநிரை மேய்த்தவனே!
ஆய்ச்சியரை ஏய்த்தவனே!
பொய்களிலே நாக்கைப்
பொழுதும் தோய்த்தவனே!

தயிர் திருடித்
தின்பதுபோல் – என்
உயிர் திருடி
உண்ணவந் தாயோ?
புள்ளரசுக்கு எதிர் –
புண்ணில் மொய்க்கும் ஈயோ?

அங்கையில் –
ஆயுதம் எதுவும்...

ஏந்தாமல் – நீ யென்
எதிர் நிற்கையில் – நானும்
வெறுங் கையனாகவே நின்று –
வவ்வுவேன் உன்னுயிர் இன்று!'

இவ்வாறு
இறுமாப்புடன் இயம்பி –
காலயவனன்
கட்கத்தைக் கீழே போட –

அவனுக்கு
அஞ்சுவது போல்
போக்குக் காட்டிக் – கண்ணனொரு
பொருப்பை நோக்கி ஓட –

விழிகளில்



விருப்பு பட -
கண்ணனைக்
காலயவனன் தொடர -

குன்றில் தென்பட்ட -, ஒரு
குகைக்குள் ஒளிந்து கொண்டான் -
குழல் வண்ணன்;
குழலூதும் கண்ணன்!

கண்மண் தெரியாத குகைக்குள்
காலயவனனும் புக...

அங்கு
அவ் -
அரைகுறை இருட்டில்
ஆரோ ஒருவன் -

கண்ணுறங்கிக் கிடக்க - அவன்
கண்ணனென்று கருதி - அவனைக்
காலால் உதைத்தான்
காலயவனன் உக்கிரம் மிக!

உதை வாங்கியதால் -
உறக்கம்விட்டு விழித்தவன்...
காலயவனனைக்
கண்களால் நோக்கினான்;

கண்வழி
கனல் வார்த்து - அவன்
காலயவனனைக்
கருஞ்சாம்பல் ஆக்கினான்!

இசைமிகு
இட்சுவாகு குலத்தில் உதித்த...

மாமன்னன்
மாந்தாதாவின் -
மயிந்தன்
முசுகுந்தன்;
தந்தையைப் போலவே -
தனயனும் சத்தியசிந்தன்!

அசுரர்களுக்கும்
அமரர்களுக்கும் -
போர் மூண்ட நாளில்
புக[illegible] முசுகுந்தனால்
வானவர்

வென்றனர்;
'என்ன வரம் வேண்டும்?' 518
என்றனர்!

'உடல் அசதி தீர
உறங்க வேண்டும்!' என்று -
முசுகுந்தன்
மொழிய...

'அன்னணமே
ஆகட்டும்;
எவன் உங்களை - இடையில்
எழுப்பினாலும் - அவன்
உங்கள் பார்வை பட்டு
உடனே எரிந்து சாகட்டும்!' என -

வானவர் குலம்
வரம் தந்தது; அவ்
வரத்தின்
விளைவே காலயவனன் வெந்தது!

காலயவனன்
காலமானது அறிந்து -
கண்ணனையும் - அவன்
அண்ணனையும் அழிக்க -

ஜராசந்தன் வந்தான் - விழிகள்
ஜிவ்வென்று சிவந்து பிதுங்க:

'பிரவர்ஷணம்' எனும்
பெரும் மலையில் -
பரந்தாமனும்
பலராமனும் ஓடிப் பதுங்க;

மகத மன்னன்
மயங்கி நின்றான்; பிறகு
'மலையைச் சுற்றி
மூட்டுக செந்தீ!' என்றான்!

கண்ணனும் அண்ணனும்
கனலில் அவிந்திருப்பாரென -

சேனாவீரர்
செப்பினர்; ஆனால் -
பரந்தாமனும் பலராமனும்,
பழுதின்றித் தப்பினர்!

(தொடரும்)